# குருதேவ் சிவானந்தரின் வாழ்க்கை வரலாறு



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# குருதேவ் சிவானந்தரின் வாழ்க்கை வரலாறு

அருளியது :

சிவ-பாத-ரேணு

**ஸ்ரீ சுவாமி வெங்கடேசானந்தா**

தமிழாக்கம் :

திரு. C. கனகராஜன்

**சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு**







**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை ] 1987 [ ரூ.

SIVANANDA CENTENARY PUBLICATION



* O *

Translation of

"GURUDEV SIVANANDA"

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of:*

in loving memory of the noble soul

LATE SRI KASHIRAM GUPTA

By his son

SRI RAMNIVAS GUPTA

President, Divine Life Society Eastern Zone.

83, Old China Bazaar Street, CALCUTTA-700001

Printed at The Literary Press, Salem - 636 001.

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் **''குருதேவ் சிவானந்தரின் வாழ்க்கை வரலாறு''** என்ற நூலை திரு C. கனகராஜன் அவர்கள் எளிய தமிழில் மிக அற்புதமாக மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda
ॐ

# பொருளடக்கம்



ஸ்ரீ சுவாமி வெங்கடேசானந்தா

# குருதேவ் சிவானந்தரின் வாழ்க்கை வரலாறு

## அத்தியாயம் — ஒன்று

## தெய்வப் பிறவி

### 1. செப்டம்பர் எட்டு

பேரானந்தம் தரக்கூடிய அந்தநாள் நெருங்கிக் கொண்டிருந்தது. தென்னிந்தியாவிலுள்ள பத்தமடை என்னும் கிராமத்தில் வாழ்ந்து வந்த தெய்வீகத் தம்பதிகளின் மனதில் தெய்வீக உணர்வு குடிகொண்டிருந்தது. அவர்கள் அசாதாரணமான அனுபவங்களைப் பெற்றனர். அசாதாரணமான காட்சிகளைக் கண்டனர். அவர்கள் அதிசயத்தில் ஆழ்ந்தனர். அவர்கள் தினசரி பஞ்சாங்கத்தைப் பார்த்து இறைவா, இன்று நாள் நல்ல நாளாக இல்லை; அந்த சம்பவம் இன்று நிகழாதிருக்கட்டும் என்றோ அல்லது ''இன்று, நல்ல நாள். அந்த சம்பவம் இன்று நிகழட்டும்'' என்றோ கூறுவர்.

பிற்காலத்தில் தெய்வீக லட்சியம் கொண்ட தெய்வப் பிறவி எனத் தன்னை நிரூபித்துக் கொள்ளும் ஒரு அருந்தவப் புதல்வனுக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருக்கும் பேறுபெற்ற பெற்றோர்கள்தான் அந்த இருவரும்.

அன்னை பார்வதி ஏற்கனவே தெய்வ பக்தி உடையவர். தனது கணவர் திரு. வெங்கு ஐயரை தெய்வம் எனப் போற்றி வணங்கி வாழ்ந்து வருபவர். தகுதி வாய்ந்த ஒரு மகனைப் பெற்

றெடுக்கும் பொறுப்பை இறைவன் தனக்கு அருளி யிருப்பதை அந்த அம்மையார் உணர்ந்தபோது அவரது இந்த பக்தி பன்மடங்கு அதிகரித்தது. அவரது சிந்தையெல்லாம் தெய்வபக்தி நிரம்பி யிருந்தது. எண்ணம் புனிதமானதாகவும், உயர் வானதாகவும் இருந்தது. ஓய்வு நேரங்களில் சமய நூல்களைப் படிப்பார்; பக்தியுடனும், நம்பிக்கை யுடனும் நாமஜபம் செய்வார். தெய்வீக இயல் புடைய அந்த அம்மையார் தெய்வீகப் பண்புகளை பெருமளவில் வளர்த்துக் கொண்டார். அவர் மனதை அலைபாயாமல் வைத்திருந்தார். அமைதி யாக இருந்தார். கண்ணபெருமானைப் போன்ற ஒரு குழந்தையினைத் தான் பெற்றெடுக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக்கொண்டு அங்குமிங்கும் உற்சாகமாக நடமாடிப் பணிபுரிவார்.

ஒவ்வொருவர் உள்ளத்திலும் குடிகொண்டுள்ள பகவான், தனது அன்புக் குழந்தைகளின் பிரார்த் தனைகளைக் கேட்கிறார். பிரஸ்னி, இறைவனை தனது மகனாகப் பெற விரும்பினாள். அதன் பிறகு அவதாரம் செய்த இறைவன் அவளது மகனாகப் பிறந்தான்; அவள் தேவகியாகப் பிறந்து வாழ்ந்து வந்தபோது இறைவன் கண்ணனாக வந்து அவளது மகனாகப் பிறந்தான். அதேபோல பார்வதி அம்மாளும் எப்போதும் கண்ணனையே எண்ணினார், பேசினார், கனவு கண்டார். அந்த அம்மையார் எப்போதும் இறைவனின் சிந்தனையிலேயே மூழ்கி யிருந்தார். அவரது இதயம் துடிக்கின்ற ஒவ்வொரு நேரத்திலும் அவர் நாமஜபம் செய்து கொண்டிருந் தார்.

இந்த தெய்வக் குழந்தை பிறக்கும் நாள் வந்தது. அது 1887 செப்டம்பர் 8 ஆம் நாள். அந்த நாள் மிகப் புனிதமான நாள். அன்னையின்

முகம் அசாதாரணமாக மலர்ச்சி அடைந்திருந்தது. அவரது இதயம் மென்மையாக இருந்தது. அவரும், அவரது கணவரும் தமது தினசரி வழி பாட்டில் ஈடுபட்டனர்.

இறைவனே வந்து பிறந்திருப்பதால் அனைவரும் மகிழ்ச்சியில் திளைத்தனர். பக்கத்து வீட்டுக்காரர் சாஸ்திரங்கள் படித்து அவற்றில் மாமேதையாகத் திகழ்பவர். அவர் பஞ்சாங்கத்தைப் பார்த்து, ''இன்று பரணி! பரணியில் பிறந்தவன் தரணியை ஆள்வான். குழந்தையை இறைவன் ஆசீர்வதிக் கட்டும்'' என்று வாழ்த்தினார். வசுதேவருக்கு கர்காசார்யர் விரிவாகச் சொன்னதை இவர் சுருக்க மாகச் சொல்லிவிட்டார்.

இந்தக் குழந்தை பிறக்கும்போதே வீடும் நாடும் செழிப்புற்றிருந்தன. வயல்களில் நல்ல விளைச்சல். எல்லா இடத்திலும் செல்வச் செழிப்பு! ''இவர் பிறக்கும்போதே உலகுக்கு செல்வச் செழிப்பைக் கொணர்ந்தவர்'' என்று அவரது உறவினர்கள் பிற்காலத்தில் புகழ்ந்துரைத்தனர். குழந்தை பிறந்த அன்றே தாயார் அனைவருக்கும் ஏராளமாக உணவையும், செல்வத்தையும் தானம் செய்தார். தாயின் இந்த அருங்குணம் தனயனிடத்தில் வாழ்நாள் முழுவதும் நிறைந் திருந்தது. பிறருக்கு உணவு வழங்குவது, தொண்டு செய்வது, பிறர் அறிவு வளரச் செய்வது ஆகிய குணப் பண்புகளுடன் அந்தத் தனயன் சிறந்து விளங்கினார். தாமிரபரணி ஆறு பொங்கிப் பெருகி வந்தது. இறைவன் பூமியில் பிறந்திருப்பது குறித்து அனைத்து தெய்வங்களும் ஆனந்தம் அடைந்திருப்பதை அது சொல்லாமற் சொல்லிற்று. குழந்தை பிறந்த ஊரில் அமைதி நிலவியது. அந்த ஊர் மக்கள் புத்துணர்வும், புதிய அனுபவமும்

பெற்றனர். அவர்களின் கவலை, ஏக்கம் எல்லாம் கரைந்து மறைந்து விட்டன. இந்த அனுபவம் பெற்ற மக்கள் ஆச்சரியத்தில் ஆழ்ந்துபோயினர்.

தெய்வீக சக்தியின் காரணமாக ஏற்பட்ட உள்ளுணர்வால் உந்தப்பட்ட கிராம மக்கள் அனை வரும் வெங்கு ஐயர் இல்லம் நோக்கி விரைந்தனர். அந்த இல்லத்துக்குள் சென்ற பின்னர் தான் வந்ததன் காரணம் புரிந்தது. அவர்கள் வீட்டுக்குள் நுழைந்தபோது குழந்தையின் தெய்வீகக் குரலைக் கேட்டுப் பரவசம் அடைந்தனர். அவர்கள் அந்த தெய்வீகக் குழந்தையை வாழ்த்தினர்.

ஸ்ரீ நாரதர் தனது பக்தி சூத்திரத்தில் பின்வரு மாறு கூறுகிறார். ஒரு மகான் பிறக்கும்போது அவரது முன்னோர்கள் மகிழ்ச்சி அடைகின்றனர். தேவர்கள் ஆனந்த நடனம் ஆடுகின்றனர். பூதேவி ஒரு தெய்வப்பிறவியின் பாதச் சுவடுகளைத் தாங்கும் பேறு கிடைத்ததை அறிந்து பெருமிதம் கொள்ளுகிறாள்.

அன்று அந்த தெய்வீகக்குழந்தை பிறந்தபோது உண்மையில் பின்வருமாறு நிகழ்ச்சிகள் நடந்தன.

தந்தை வெங்கு ஐயர் ஆனந்த நடனமாடினார். வெறும் மகிழ்ச்சியால் அல்ல; பேரானந்தப் பரவச நிலையில். முன்னோர்கள் மகிழ்ச்சியுற்றிருந்ததை எவரும் கண்ணால் காணவில்லை என்றாலும் அவர்கள் நிச்சயமாக இன்னும் அதிகமாகவே மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கியிருப்பார்கள்.

''தெய்வீக ஞான ஒளிபெற்று முக்திநிலை அடை யும் ஒரு மகன் இந்தக் குடும்பத்தில் பிறந்திருக்கிறார் அல்லவா? இது நமது பெருமகிழ்ச்சிக்குரிய நாள்

அல்லவா ? இந்தக் குழந்தையின் முன்னோர் களாக இருக்கும் நிலை நமக்குக் கிடைத்தது பெரும் பேறு அல்லவா? குழந்தை பல்லாண்டு வாழட்டும்''

ஒரு துறவி தனக்கு முற்பட்ட ஏழு தலைமுறை யினரையும் தனக்குப் பின்னேவரும் ஏழு தலைமுறை யினரையும் தூய்மைப்படுத்துவதாகச் சொல்லப்படு கிறது. அதற்கும் மேலாக ஆத்ம ஞானம் பெற்ற ஒரு துறவி, தனது முன்னோர்களுக்கு அமரத்துவமும் பின்வரும் அன்பர்களுக்கு ஒளிமயமான வாழ்க்கை யும் கிடைக்குமாறு அருள்புரிகிறார்.

## உ. நாடக மேடை

''தர்மம் தாழ்ந்து அதர்மம் தலைதூக்குகிற போது தர்மத்தைக் காக்கவும் தீயோரை அழித்து நல்லோரைக் காக்கவும்'' தனது யோக மாயையின் மூலம் அவதாரம் செய்வதாக பகவான் பகவத் கீதை யில் வாக்குறுதி அளித்திருக்கிறார். தனது வாக்கு என்றும் பொய்யாகப் போனதில்லை என்றும் அவை நிறைவேற்றப்பட்டு வந்திருக்கின்றன என்றும் பகவான் அன்னை தேவகிக்குச் சொல்லுவதாக ஸ்ரீமத் பாகவதத்தில் படிக்கிறோம்.

கலிகாலத்தில் தர்மத்தின் பாதையில் களைகள் மண்டிக்கிடக்கின்றன. பாமர மனிதன் இந்தக் களைகளை அகற்றாமல் சுயநலம், அதர்மம் ஆகிய வற்றின் பாதையை செம்மைப்படுத்தி வைத்திருக் கிறான். இந்தப் பாதைதான் முன்னோர்கள் நடந்து சென்ற பாதை என்பதாக இந்த அதர்மவழி மனிதனை மயக்குகிறது. மத விரோத மனப் பான்மை, ஊழல், ஒழுக்கக்கேடு ஆகியவை ஒரு புறமும், மூட நம்பிக்கை, மேற்போக்கான விஷயங் களில் குருட்டுத்தனமான பிடிப்பு ஆகியவை மறு

புறமும் மதங்களின் தாயாகிய ஹிந்து மதத்தை உருக்குலைத்து வருகின்றன. ஆன்மீகத்தின் உயரிய நிலை என்னும் அரியணையை போலித்தனம் பிடித்துக் கொண்டிருக்கிறது.

''புறத்தோற்றத்துக்கு அழகாகவும், உள்ளுக்குள் இறந்த மனிதனின் எலும்புகளையும் அனைத்து அசுத்தப் பொருட்களையும் கொண்டதாக உள்ள கல்லறைக்குச் சமமானவர்களாக நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் மனிதர்களிடத்தில் நேர்மை தவறுமல் நடந்து கொள்ளுவதுபோல உங்களுடைய புறத்தோற்றம் உள்ளது. ஆனால் உண்மையில் உங்களுக்குள் போலித்தனமும் துஷ்டத்தனமும் முழுமையாகக் குடிகொண்டிருக்கின்றன (புனித மாத்யூ 23) ஏசுநாதர் 2000 ஆண்டுகட்கு முன்னர் திருவாய் மலர்ந்து அருளிய இந்தச் சொற்கள் இன்றைய நிலைக்கும் பொருந்துபவையாக உள்ளன. ''பிரார்த்தனைக்கூடமாக இருக்கவேண்டிய திருத்தலங்கள் எல்லாம் திருடர்கள்களின் கூடாரங்களாக ஆகிவிட்டன''. (புனித மாத்யூ 21) மகான்களும், ரிஷி முனிவர்களும் பிறந்த பூமியிலேயே அவர்கள் இகழ்ந்து பேசப்படுகின்றனர். அவர்களது உபதேசங்கள் புறக்கணிக்கப்படுகின்றன. சாஸ்திரங்கள், அருங்காட்சியகத்தின் ஆவணக் காப்பகத்துக்குள் வைக்கப்பட்டுவிட்டன. அவற்றின் கட்டளைகள் மீறப்படுகின்றன

இதில் புதுமை ஒன்றுமில்லை. கலியுகம் பிறப்பதற்கு முன்னதாக கடந்த யுகத்தின் இறுதியிலும் இதேநிலை. ஆனால் இந்தக் கொடுமை சற்றுக் குறைவாக இருந்தது. பூமித்தாய் இந்தச் சுமைகளை பொறுமையுடன் தாங்கிக்கொண்டாள். தேவர்கள், உலகில் தமக்குரிய நிலையினை இழந்தனர். தம்மையும் பொறுமைக்கு உறைவிடமான பூமித்

தாயையும் காத்து அருள்புரியுமாறு அவர்கள் இறைவனைப் பிரார்த்தித்தனர் இறைவனும் வாசுதேவரின் மகனுகப் புகழுடன் அவதரித்தார். அவர் நிகழ்த்திய அற்புதச் செயல்களை நாமறிவோம். தமது குழந்தைப்பருவம் முதலாகவே தீய சக்திகளின் பிடியிலிருந்து இந்த உலகை விடுவிக்க பகவான் செய்த லீலைகளையும் நாம் நன்கு அறிவோம்.

உலகின் நிலைபற்றி குருதேவர் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினுர்; ''இந்த உலகம் என்பது நாயின் வால்போன்றது. ஒவ்வொரு கால கட்டத்திலும் ஒரு மகான் இதனை நிமிர்த்த முயற்சிக்கிருர். அவரது முயற்சிக்கு பலன் கிடைக்கிறது. ஆனுல் விரைவிலேயே மீண்டும் அது சுருண்டு கொள்ளுகிறது. மாயையின் சக்தி அத்தகையது. ஆனுல் இந்த வாழ்க்கை எனும் நாடகத்தில் ஒவ்வொருவரும் தனது பாத்திரத்துக்கேற்ப நடித்தாக வேண்டும். அவ்வாறு செய்யாத மனிதனின் சொந்த வாழ்க்கை பயனற்றதாகிப் போவதுடன் அவர் முக்தி அடையும் வாய்ப்பும் அரிதாகி விடுகிறது.

கலியுகம் பிறந்தவுடன் மக்கள் மீண்டும் தம்மை மறந்து உலகியல் இன்பத்தை நாடி ஓடினர். வேதத்தில் சொல்லப்பட்டுள்ள சடங்குகளுக்கு தேவைக்கு அதிகமான முக்கியத்துவம் தரப்பட்டது. கருணை, இரக்கம், வாய்மை, அகந்தையின்மை ஆகிய தெய்வீகப் பண்புகள் அலட்சியப் படுத்தப்பட்டன. இத்தகைய நெருக்கடி நிலையில் பகவான் புத்தர் அவதாரம் செய்து கொலை, சுயநலம், காமம், கர்வம் ஆகியவற்றை தனது உயரிய கொள்கைகள் மற்றும் உன்னதமான வாழ்க்கை ஆகியவற்றின்மூலம் களைந்து எறிந்தார்.

புத்தரின் உபதேசங்கள் வேதக் கொள்கைகளை யும் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்ற நம்பிக்கை யையும் பழிப்பவை என்று தவறாகக் கருதப்பட்ட போது ஸ்ரீ சங்கரர் அவதரித்து வேதத்தின் சிறப்பை நிலைநாட்டி, உபநிடதம் பற்றிய விளக்கங் களைத் தந்து மனிதர்களின் கண்களைத் திறந்தார்.

இறைவன் தனது இல்லத்தை தனது தூதர் ஒருவர் மூலம் அவ்வப்போது சுத்தப்படுத்துகிறார் என்பதை நாம் காண்கிறோம். கலிகாலத்தில் ஆண்டுகள் உருண்டு ஓடிக்கொண்டிருக்கும்போது சத்தியம் என்னும் சூரியனை அறியாமை இருள் மறைக்கிறபடியால், இறை தூதர்கள் அவதாரம் எடுத்து இந்த இல்லத்தை தூய்மைப்படுத்த வேண்டியது அவசியமாகிறது. இதன் காரண மாகத்தான் நம் மத்தியில் அவ்வப்போது தேவ தூதர்கள் தோன்றுகின்றனர். சில ஆயிரம் ஆண்டு களுக்குள் குறிப்பிடத்தக்க எண்ணற்ற மகான்கள் நம் மத்தியில் தோன்றி மறைந்திருக்கின்றனர். இந்த வரிசையில் அண்மையில் தோன்றி இன்றும் நம்மத்தியில் வாழ்ந்து வழி காட்டிக் கொண்டிருக் கும் மகான் குருதேவர் அவர்கள்.

இதனை உறுதிப்படுத்தும் வகையில் தென்னிந்தி யாவின் தவச்சீலரும் அறிஞர் பெருந்தகையுமான ஸ்ரீ ஸ்ரீவத்ஸ சோமதேவ சர்மா பின்வருமாறு கூறியுள்ளார்.

''தர்மம் தாழ்ந்து அதர்மம் மேலோங்கி நிற்கும் வேளையில் தான் அவதரித்தது தர்மத்தை நிலை நாட்டுவதாக பகவான் கீதையில் வாக்குறுதி அளித் திருக்கிறார், தெய்வீகத் தன்மை பொருந்திய எதுவும் தனது அம்சமாக இருக்கும் என்றும் பகவான் கூறியிருக்கிறார். நமது பிரபு சிவானந்தர்,

பகவானின் அவதாரம் என்பது உறுதி. தாழ்ந்து கிடப்போரை தலைநிமிரச் செய்யவும், உலகியலில் உழலும் மனிதர்களுக்கு நல் வழிகாட்டி அவர்களை அறநெறியில் அழைத்துச் செல்லவும் அவர் அவதரித்திருக்கிறார். இன்று (1949 மார்ச் 8). சிவானந்தரின் கருணையினாலும், தெய்வீக செல்வாக்கினாலும், ஆயிரக்கணக்கான நாத்திகர்கள், ஆத்திகர்களாக மாற்றப்பட்டுள்ளனர்; விலங்கு உணர்வு கொண்ட ஆண்களும், பெண்களும் தெய்வீக உணர்வு கொண்டவர்களாக மாற்றப்பட்டுள்ளனர். அவர்கள் அனைவரும் பக்திப் பரவசத்துடன் இறைவனின் திருப்பெயரை ஜபம் செய்கின்றனர். இதனை எனது கண்களால் கண்டிருக்கிறேன். சிவானந்தரின் பெயர் மற்றும் செல்வாக்கின் காரணமாக நடக்க முடியாதவை என்று கருதப்பட்டவையெல்லாம் நடந்து முடிந்திருக்கின்றன. அவரால் தான் தர்மம் இன்று கொடி கட்டிப் பறக்கிறது. தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் அனைத்துக் கிளைகளும் எத்தனை தெய்வீகப் பணிகளில் ஈடுபட்டுள்ளன! சிவானந்தர் ஈஸ்வரனின் அவதாரம் என்பது உண்மை, முற்றிலும் உண்மை''.

## 3. குழந்தைப் பருவம்

விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பது தமிழ்ப் பழமொழி. புலிக்குட்டிகள் சிங்கங்களாகவும் சிங்கக்குட்டிகள் சிறுத்தைகளாகவும் வளரும் என நாம் நிச்சயமாக எதிர்பார்க்கவில்லை. ஆனால் பத்தமடை கிராமத்தில் சாதாரண மனித உடலுக்குள் குடிகொண்டிருந்த அற்புதச் சக்தியை கூர்ந்து கவனிக்கும் எவரும் எளிதில் புரிந்து கொண்டிருப்பார்கள்.

ஒரு மனிதனின் புறத்தோற்றத்தைக் கொண்டு அவனது அகத்தோற்றத்தை எப்பொழுதும் எடை

போட முடியாது. அஷ்டவக்ரன் ஒரு பிரம்மஞானி. இத்தகைய அசாதாரணமான மனிதர்கள் நமக்கு உண்மையில் நிகழ்வதை உணர்த்துகிறார்கள். அழியும் இந்த உடலுக்குள் தெய்வீக ஒளி புகும் போது அது சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. அது அவ்வாறு பிரகாசிக்காமல் இருப்பது அரிது. தெய்வீக மனிதர்களின் உடல்கள் தெய்வீகத் தன்மை உடையவையாக உள்ளன. அவை அழகாகவும், இனிய ஆரோக்கியமான, வாட்ட சாட்டமான தோற்றம் உடையவையாகவும் அமைந்திருக்கின்றன. ஒன்றை நினைவிற்கொள்ள வேண்டும். காண்போரைக் கவர்ந்திழுக்கும் உடலழகு, தோல் அளவில் நின்றுவிடுவதில்லை. அது உள்ளுறையும் ஆத்மாவுடன் கலந்திருக்கிறது. கண்ணன் கறுமை நிறம் உடையவன். ஆயினும் கோபியர்களைக் கவர்ந்து இழுக்கும் அழகனாகத் திகழ்ந்தான். கண்ணனின் அழகைத் தொடர்ந்து கண்டு அனுபவிக்க முடியாமல் கண் இமைகள் மூடி மூடித் திறக்கின்றனவே என்று கோபியர்கள் படைத்தவன் மீது குறை கூறினார்களாம்.

இந்தக் குழந்தைக்கு பெற்றோர்கள் குப்புசாமி என்று பெயர் வைத்தனர். இந்தக் குழந்தையைக் காணும் கண்கள் சுகம் பெறும். குழந்தை கொழு கொழு வென்று இருந்தது. எப்போதும் துருதுரு வென்று விளையாடிக் கொண்டிருக்கும். பிஞ்சு உதடு களால் மழலை அமுதம் பொழியும். இக்குழந்தை பெற்றோரின் அருந்தவப் புதல்வன். பெற்றோர்கள் குழந்தைமீது அன்பு மழை பொழிந்தார்கள். தினந்தோறும் புதுப்புது ஆடைகளையும், ஆபரணங் களையும் அணிவித்து அழகு பார்த்தனர்.

குழந்தை மிகவும் அருமையான சூழ்நிலையில் வளர்ந்து வந்தது. அனைவரும் குழந்தையிடம்

அன்பு செலுத்தினர். பொதுவாக இந்தியாவின் கிராமங்களில் வாழும் ஒரு குடும்பத்தினர் மற்றொரு குடும்பத்தினருடன் அற்பமான விஷயங்களுக்குக்கூட சண்டையிட்டுக்கொள்ளுவர். பகை மூண்டு பிரிந்து செல்லுவர். ஆனால் இந்தக் குழந்தை தனது குறும்புத்தனத்தால் அவர்களை ஒன்று சேர்த்து விடும். தனது தொட்டிலைச் சுற்றி வரும் அனைவரும் அமைதியோடு வாழுமாறு செய்துவிடும். மகத்தான ஆற்றல் இந்தக் குழந்தையிடம் இருந்தது.

குழந்தைப் பருவத்தில் தான் மிகவும் குறும்பு செய்ததாக குருதேவரே குறிப்பிட்டிருக்கிறார். குறும்புத்தனமான ஒரு குழந்தை தானும் மகிழ்ச்சி அடைந்து மற்றவர்களையும் மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது. குப்புசாமியின் குறும் புத்தனத்தை சாதாரணமாக அளவிட முடியாது. அக்குழந்தை தனது அரிய ஞானத்தாலும், நுண்ணிய அகத்தோற்றத்தாலும் தன்னை சுற்றி நிற்பவர்களை ஆனந்தத்திலும் அதிசயத்திலும் ஆழ்த்தும்.

சமய வரலாற்றில் இதற்கு இணையான சம்ப வங்கள் உண்டு.

பகவான் கிருஷ்ணன் தனது குழந்தைப் பருவத் தில் குறும்பு செய்வதில் உச்ச கட்டத்தை எட்டி யிருந்தார். பகவான் கௌரங்கர் ஒரு அவதார புருஷர். நம்பிக்கை மற்றும் லட்சியப் பிடிப்பில் அவர் குருதேவரைப் போன்றவர். அவரும் தனது குழந்தைப் பருவத்தில் குறும்புத்தனம் செய்வதில் வல்லவராக இருந்திருக்கிறார். பொதுவாக இது வெல்லாம் குழந்தைத்தனம் என்று கருதி பெற்றோர் கள் அலட்சியம் செய்துவிடுவார்கள். யசோதையும், கௌரங்கரின் தாயாரும் அப்படித்தான் செய்தனர். இந்த குழந்தைப் பருவச் செயல்கள் தெரிவிக்கும்

செய்திகளை அறிந்துகொள்ள கடந்த காலத்தைப் பற்றி நினைத்துப் பார்க்கவேண்டியது வளரும் தலைமுறையின் கடமையாகும். அவ்வாறு எண்ணிப் பார்க்கும்போது சம்பவம் நிகழ்ந்த காலத்தில் வாழும்பேறு நமக்குக் கிட்டவில்லையே என்ற ஏக்கம் தோன்றும். குழந்தைகளின் கள்ளமற்ற குறும்புத் தனமான செயல்கள் மகத்தான உண்மைகளைத் தெளிவுபடுத்துகின்றன.

குப்புசாமி சிம்னி விளக்கின் கண்ணாடியை உடைத்துவிட்டு அதை அன்னையிடம் காண்பிப்பார். அன்னையும் புன்னகை பூத்துவிட்டு மீண்டும் இப்படிச் செய்யாதே என்று கண்டிப்பார். ஆனால் இந்த சம்பவத்தின்மூலம் குழந்தை தன் அன்னையைப் பின் வருமாறு எச்சரிக்கை செய்ததாகவே தோன்று கிறது; "மிகவும் பயனுள்ளது, மதிப்புமிக்கது என்று நீ எதனைக் கருதிப் பாதுகாத்து வருகிறாயோ அதன் நிலையும் என்றேனும் ஒரு நாள் இந்தக் கண்ணாடியின் நிலைபோல் ஆகலாம்".

1952 மே மாதம் 8-ந் தேதி பத்தமடை யிலிருந்து சிவானந்தாஸ்ரமத்துக்கு வந்திருந்த வயதான பெண்கள் சிலர் குழந்தையின் மற்றொரு குறும்புத்தனமான செயலைக் குறிப்பிட்டனர்.

"சுவாமிகளுக்கு இரு சகோதரர்கள் உண்டு அவர்களின் தாயார் இனிப்புப் பண்டங்கள் தயா ரிக்கும் போதெல்லாம் மூன்று புதல்வர்களுக்கும் அவற்றைப் பகிர்ந்து கொடுப்பார். சில சமயம் மீதமுள்ள பண்டங்களைப் பிறகு கொடுப்பதற்காக, அறையில் பத்திரமாக வைத்திருப்பார்.

அந்தக் குழந்தைப் பருவத்திலேயே நல்ல உடலமைப்பும், சுறு சுறுப்பும், ஆற்றலும் கொண் டிருந்த சுவாமிஜி முதலில் தன் பங்கைத் தின்று தீர்த்துவிடுவார். அதுவரை அவரது சகோதரர்கள்

தமது பங்கைத் தின்று தீர்க்காமல் இருந்தால் அவற்றையும் வாங்கித் தின்றுவிடுவார். பிறகு கொடுக்கலாம் என்று அன்னை பத்திரப் படுத்தி வைத்துள்ள தின்பண்டங்களையும் காலி செய்துவிடுவார். அவற்றைத் தனது நண்பர்களுக்குப் பங்கிட்டு கொடுத்துவிடுவார்''.

அப்போது குருதேவர் செய்ததெல்லாம் கண்ணன் தனது குழந்தைப் பருவத்தில் செய்தது போல் உள்ளது என்று அந்தப் பெண்கள் கூறினர். மந்தபுத்தி, சோம்பல் ஆகியவை பரம்பொருளை நாடிச் செல்வோரின் பரம எதிரிகள் ஆக, இவை குருதேவரின் எதிரிகள், தவறு செய்தவர்களை அவர் கனிவுடன் பொறுத்துக்கொண்டு நல்வழிப்படுத்தி யிருக்கிறார். சாதகர்கள் சோம்பேறிகளாக இருக்க அவர் ஒருபோதும் அனுமதித்ததில்லை. அவரது குழந்தைப் பருவத்தில் நிகழ்ந்த இந்தச் சம்பவமும் ஒரு நீதியை உணர்த்துகிறது. ''செய்ய வேண்டியதை இப்போதே செய். இல்லையேல் உன்னிடம் இருப்பதை நீ இழக்க நேரிடும்'' என்று அவர் தனது சகோதரர்களுக்கு உணர்த்தியிருப் பதாகவே தோன்றுகிறது.

குழந்தை குப்புசாமியிடம் ஆன்மீகப் பண்புகள் நிறைந்திருந்தன. தன்னைச் சூழும் எந்தத் தீமை களையும் அந்தக் குழந்தை வென்றுவிடும். குழந்தையின் உயரிய ஞானம் பெற்றோர்களையே ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. புதுப்புது விஷயங்களை அதிக சிரமமின்றி குழந்தை விளையாட்டாக, விரைவாகக் கற்றுக்கொண்டது; இந்த மனிதர் களையும் உலகையும் பற்றி மிகத் தெளிவாகப் புரிந்துகொண்டது.

இந்த தெய்வீகக் குழந்தை, பத்தமடை கிராமத்தில் மகாபுத்திசாலியாகக் கருதப்பட்டது.

குருதேவர், பம்பாயிலிருந்து வெளிவரும் 'பவன்ஸ் ஜர்னல்' என்ற பத்திரிகைக்கு ''எனது வாழ்வில் இறைவன் இடம் பெற்றது எப்படி'' என்ற தலைப்பில் எழுதிய ஒரு கட்டுரையில் தனது சிறு வயதில் தந்தையாரின் பூஜைக்கு தான் உதவிகள் செய்து வந்ததைக் குறிப்பிட்டுள்ளார். தந்தை சிவபூஜை செய்ய அவர் மலர்களையும், வில்வத்தையும் கொண்டு வந்து கொடுப்பார். மந்திரங்கள் ஜபம் செய்யப்படும்போது அவற்றைக் கூர்ந்து கேட்பார். மற்ற நேரங்களில் குறும்புக் காரக் குழந்தையாக விளங்கும் குப்புசாமியிடம் பூஜை நேரத்தில் கவனமும், அமைதியும் குடி கொண்டிருந்தது. பெற்றோர்கள் கீர்த்தனை பாடும் போது அவரும் சேர்ந்து பாடுவார். திரு. வெங்கு ஐயர் ராமாயணம், பாகவதம் ஆகியவற்றை பாராயணம் செய்யும்போது கூர்ந்து கேட்பார். பத்தமடை மண்ணில் இசை கலந்திருந்தது. குப்புசாமி சிறு வயதிலேயே இனிய குரலில் இறைவன் திருப்பெயரைப் பாடுவார். பக்தி யுடனும், பக்குவத்துடனும் கீர்த்தனையில் ஈடுபடு வார்; சில நேரம் பக்திப் பரவசத்தில் நடனம் ஆடுவதும் உண்டு. மென்மலர்ப் பாதங்கள் இசைக்குத் தகுந்தாற்போல் இடம் மாறும். வாயில் புல்லாங்குழல் இருக்கும். ஆனால் சரிவர ஓசை வராது. இது அவருக்குப் பிடித்த விளை யாட்டு. குருதேவரிடத்தில் சிறு வயதில் இருந்த இந்தப்பண்பு பன்மடங்கு பெருகிப் பிற்காலத்தில் உத்திரபிரதேசம் மற்றும் பஞ்சாப் மாநிலங்களைச் சார்ந்த பல்லாயிரக்கணக்கான மக்களின் வாழ்க் கையை மாற்றியது. அந்த மக்கள் உலகையும் உணவையும் மறந்து குருதேவர் பாடும் கீர்த்தனை களில் மயங்கி இருப்பர்.

குப்புசாமியின் உள்ளம், கருணை உள்ளம். காலம் செல்லச்செல்ல அது தொடர்ந்து மென்மை

யாகிக் கொண்டிருந்தது. 1950ல் ஆசிரமத்தில் குருதேவருடன் தங்கியிருந்த திரு. கணபதி சாஸ்திரிகள், குழந்தை குப்புசாமிக்கு இனிப்புப் பண்டங்கள் கிடைத்தால் அதனைப் பகிர்ந்து உண்ணத் தன் நண்பர்களைத் தேடி ஓடிவிடுவான் என்றார்.

குப்புசாமி தனது வாழ்க்கையில் ஒருநாள்கூட கதவை மூடிக்கொண்டு அல்வாவைத் தின்றதில்லை என்று சாஸ்திரிகள் தனது பாணியில் வர்ணித்தார். குப்புசாமிக்கு குழந்தைப் பருவத்திலேயே துறவி களிடத்தில் ஒரு ஈடுபாடு ஏற்பட்டது. அவர்களை உபசரிப்பதில் குப்புசாமிக்கு ஆர்வம் அதிகம். பிச்சைக்காரர்களும் ஊனமுற்றோரும்கூட குப்பு சாமியின் கருணையை அனுபவித்திருக்கின்றனர். குப்புசாமி வீட்டுக்கு ஒரு பிச்சைக்காரர் வந்தால் குப்புசாமி எங்கிருந்தாலும் விரைந்தோடி வந்து விடுவார். அவர் தனது இல்லத்து மரபுகளை மீறி பிச்சைக்காரர்களை வீட்டுக்குள் அழைத்துச் சென்று அவர்களுக்கு அன்னதானம் செய்வார். பிச்சைக் காரருக்கு பாடத்தெரியும் என்றால் அவர் எளிதில் குப்புசாமியிடமிருந்து விடுதலைபெற முடியாது. குப்புசாமிக்கு பாடிக்காட்ட வேண்டும். பரிசும் கணிசமாகக் கிடைக்கும். குப்புசாமியின் இந்தப் பண்பு பிற்காலத்தில் பல்கிப் பெருகியது. குரு தேவர் தன் வாழ்நாள் முழுவதும் பெருமளவுக்கு தானம் செய்தார். அந்த மகத்தான தெய்வீகப் பண்பின் காரணமாக இன்று அவர் மிகச் சிறந்த ஞானியாகவும், துறவியாகவும் விளங்குகிறார்.

ஒரு குழந்தையின் உடலும், உள்ளமும் வளர்ச்சி பெறுவது பெரும்பாலும் அதன் பெற்றோர் காட்டும் அக்கறையைப் பொறுத்து அமைகிறது. ''இளமைப் பழக்கம், செல்வம் உள்ள மட்டும்; தொட்டில்

பழக்கம், சுடுகாடு மட்டும்'' என்பது ஒரு தமிழ்ப் பழமொழி. குப்புசாமி இதனை சொல்லிலும், செயலிலும் கடைப்பிடித்து வந்தார்; இளைஞர்களுக்கு அறிவூட்டி அவர்களை உயர்த்திட தனது முழு கவனத்தையும், சக்தியையும் செலவழித்தார்.

குருதேவரின் பொன் விழாவுக்கு ஒரு சில நாட்கள் முன்னதாக ஆசிரமவாசி ஒருவர் சிவானந்தா ஆரம்பப்பள்ளி மாணவர்கள் சிலருடன் ஏதோ ஒரு பணியில் ஈடுபட்டிருந்ததை குருதேவர் கண்டார். அந்தக் குழந்தைகள் தலைவர் சொல்லுக்கு முழுமையாகப் பணிந்து பணியாற்றிக் கொண்டிருந்தனர். ''பணிபுரிவதற்கு பெரியவர்களைவிட குழந்தைகளே தகுதியானவர்கள் என நான் நினைக்கிறேன். அவர்கள் கட்டளைகளுக்கு உடனடியாகக் கீழ்ப்படிந்து நடக்கிறார்கள். அது பற்றி விவாதம் செய்வதில்லை. அவர்களிடம் அகந்தை இல்லை. ஆகவேதான் சர்வேஸ்வரனின் சாம்ராஜ்யத்துக்குள் நாம் நுழைய வேண்டுமானால், நாம் குழந்தைகளைப்போல மாறிவிட வேண்டும் என்று ஏசுநாதர் கூறினார்'' என்று குருதேவர் அப்போது குறிப்பிட்டார். குழந்தைப் பருவத்தில் பெற்றோர் தமது குழந்தைகளுக்குக் கற்றுத் தருகிற விஷயங்கள் குழந்தைகளின் மனதில் ஆழமாகப் பதிந்துவிடுகின்றன. அவை அந்த மனிதனுடைய வாழ்க்கையின் இறுதிவரை அழியாமல் இருந்து வருகின்றன.

குப்புசாமி தனது பெற்றோர்களுக்கு அருகில் சென்று எதனையாவது அறிந்துகொள்ளவேண்டுமென்ற நிலையில் நிற்கும்போது அவரது பெற்றோர்களும் அவருக்கு தெய்வீகக் கதைகளைச் சொல்லி அவரை உற்சாகப்படுத்துவார்கள். அவர்

அழுதாலோ அல்லது உறங்க மறுத்தாலோ பெற்ருேர்கள் (பொதுவாகப் பல இந்திய இல்லங் களில் செய்வதுபோல) பேய், பூதம் என்று சொல்லி குழந்தையை பயமுறுத்த மாட்டார்கள். அந்த நேரத்தில் குழந்தைக்கு பிரகலாதன் போன்ற சிறந்த பக்தர்களின் கதைகளை நினைவுபடுத்துவார் கள். பிரகலாதன் அன்னையின் வயிற்றில் இருக்கும் போது அவனது அன்னைக்கு நாரதர் இறைவனின் பெருமைகளை எடுத்துச் சொன்னதையும் அதை பிரகலாதன் கவனித்துக் கேட்டதையும் அதன் பயனுக தெய்வபக்தி பெற்றதையும் பெற்ருேர்கள் குப்புசாமிக்கு நினைவுபடுத்துவார்கள். வாமதேவர், மகான்கள் பூதவுடலுடன் பிறப்பதற்கு முன்ன தாகவே ஆத்மஞானம் பெற்றதையும் நினைவு படுத்துவார்கள். பெற்ருேர்கள் குப்புசாமிக்கு பக்தர்களின் கதைகளையும் இறைவனின் அவதாரக் கதைகளையும் தாமே சொல்லுவர். மதாலசா தனது குழந்தையை உறங்கவைக்க வேதாந்தக் கருத்துக் களை தாலாட்டாகப் பாடுவாள். இவர்கள் ஆன்மீகத் துறையில் மகத்தான வளர்ச்சி பெற்றி ருந்ததையும் குன்ருத துணிவும், அச்சமின்மையும் அவர்களிடத்தில் இருந்ததையும் சொல்லத் தேவை யில்லை. குப்புசாமியின் ஆன்மீக முன்னேற்றம் முன்வினைப் பயனுகவும் இறைவனின் விருப்பம் காரணமாகவும் ஏற்பட்டது. எனினும் அவரது பெற்ருேர்கள் இந்த நெருப்பை அணையாமல் பார்த்துக் கொண்டனர்; மேலும் அதனை வளர்த் தனர்.

## 4. நல்லிணக்கத்தின் தோற்றம்

குழந்தை பள்ளிக்குச் செல்லும் பருவம் வந்தது. தந்தையார் எண், எழுத்து (அக்ஷரப்யாசம்) அனைத்தும் குழந்தைக்குக் கற்றுக் கொடுத்து,

பின்னர், முதல் வகுப்பில் சேர்த்துவிட்டார். குழந்தையின் அறிவாற்றலைக் கண்டு ஆசிரியர்கள் அதிசயத்தில் ஆழ்ந்து போயினர்.

பிறர் கவனத்தை ஈர்க்கக்கூடிய உடலமைப்பு குழந்தையிடம் இருந்தது. மற்ற குழந்தைகளைப் போல் அல்லாமல், குழந்தை பள்ளிக்குச் செல்ல விரும்பியது; தமிழ் உயிரெழுத்துக்களையும், எண் களையும் முறையாகச் சொல்லி ஆசிரியர்களையும், மாணவர்களையும் வியப்பில் ஆழ்த்தியது. வீட்டில் குப்புசாமி இந்தப் பாடங்களையெல்லாம் விரைவாக கிரகித்துக் கொண்டு விடுவார். ஆனால் அவரது மூத்த சகோதரர்கள் பாடங்களைச் சிறிது தாமத மாகவே புரிந்து கொள்ளுவார்கள். காலத்தை வீணாக்குவது அவருக்குப் பிடிக்காது. காலத்தின் அருமையை அவர் உணர்ந்து கொண்டார். ''வாழ்க்கை குறுகியது; காலம் வெகு வேகமாக உருண்டு ஓடுகிறது. எழுமின், விழிமின் ஆத்ம ஞானம் பெறுமின்'' என்று அவர் பிற்காலத்தில் சங்கநாதம் செய்ய அன்றே ஆயத்தமாகிவிட்டார். தனது வயதை ஒத்த குழந்தைகள் விளையாட்டில் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருந்தபோது குப்புசாமி நேரத்தின் அருமையை தெரிந்து செயல் பட்டார்.

எவ்வளவு கடினமான விஷயமாக இருந்தாலும் குப்புசாமி எளிதில் புரிந்து கொண்டார். பள்ளிக் கூடப் பாடங்களை வெகு எளிதில் அவர் கற்றுக் கொண்டார். எந்த விஷயத்தையும் ஒருமுறை கேட்டமாத்திரத்திலேயே அதனை மனதில் பதிய வைத்துக் கொள்ளுவார்; இரண்டாவது முறை கேட்க அவசியம் ஏற்படாது. வீட்டில் அவருக்கு நிறைய நேரம் கிடைக்கும். அந்த நேரத்தை விளை யாட்டில் கழிக்காமல், பள்ளிக்கூடப் பாடங்களை

ஆராய்ச்சி உணர்வுடன் படிப்பதற்காகச் செல விடுவார். புதுப்புது விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டுமென்பதில் அவருக்கு ஆவலும், ஆர்வமும் இருந்தது. கல்லூரியில் படிக்கும் காலத்திலகூட இதே நிலைதான். அவர் தனது பாடங்களை பிறர் அதிசயிக்கும் அளவுக்கு எளிதில் கற்றுக் கொள்வார். அது மட்டுமின்றி படிப்பில் தனக்கு நான்கு ஆண்டுகள் முதியவர்களாக உள்ள மாணவர்களுடன் போட்டி போடும் அளவுக்கு குப்புசாமி அறிவாற்றல் பெற்றிருந்தார்.

குப்புசாமி எப்போதும் வகுப்பில் முதல் மாணவனாக தேறிவந்தார். பல பரிசுகளையும் பதக்கங்களையும் பெற்றார். அன்னை சரஸ்வதி, தனது அருள்பெறத் தகுதியுடையவராக அவரைத் தேர்ந் தெடுத்தாள் போலும்! குப்புசாமிக்குக் கிடைக்கும் பரிசுகள் புத்தகங்களாகவே இருக்கும். இவ்வாறு கிடைக்கும் புத்தகங்களைக் கொண்டு அவர் ஒரு சிறிய நூலகத்தையே உருவாக்கினார். தான் படிப்ப தற்காகவும், பிறர் படிப்பதற்காகவும் புத்தகங்களை சேகரிக்கும் பழக்கத்தை இச்சிறு வயதிலிருந்தே குப்புசாமி வளர்த்துக் கொண்டார். இன்று வரை இந்தப் பழக்கம் அவரிடம் இருந்து வருகிறது. பள்ளிப்பருவத்தில் அறிவிற் சிறந்து விளங்கிய அவர் அறிவை மென்மேலும் வளர்த்துக் கொள்ளுவதில் ஆர்வம் உடையவராக இருந்தார். அதற்கான விஷயங்கள் எங்கிருந்து கிடைத்தாலும் அதனை நாடிப் பெற்றார்.

1901ல் கருமலைக் குன்றுக்கு ஆம்ட்ஹில் பிரபு என்னும் சென்னை ஆளுநர் விஜயம் செய்தபோது அவர் முன்னிலையில் உரையாற்றும் அளவுக்கு குப்புசாமி அறிவாற்றல் பெற்றிருந்தார். அன்று ஒரு இனிய வரவேற்புப்பாடலையும் அவர் பாடினார்.

அப்போது அவருக்கு பதினன்கு வயது. அவர் வயதில் உள்ள மாணவர்கள், ஐரோப்பிய ஆளுநரையும், பெரிய கூட்டத்தையும் கண்ட மாத்திரத்தில் நடுங்குவார்கள். ஆனல் குப்புசாமி இந்தப்பணியை துணிவுடனும், ஆற்றலுடனும், துடிப்புடனும் செய்து முடித்தார்.

உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்ததும் குப்புசாமி திருச்சிராப்பள்ளி எஸ். பி. ஜி. கல்லூரியில் மேற்படிப்புக்காகச் சேர்ந்தார். விரைவில் அவர் தனது முதல்வரின் கவனத்தை ஈர்த்தார் (பாகன்ஹாம் வால்ஸ் என்ற பெயருடைய அந்த முதல்வர் மிகச்சிறந்த ஆன்மீகத் தலைவராக உயர்ந்து நிற்கும் தனது 'பழைய' மாணவருடன் தொடர்பை புதுப்பித்துக்கொண்ட பின்னர் அண்மையில் இறைவன் திருவடி அடைந்தார்). முதல்வரும் பேராசிரியர்களும் குப்புசாமியிடம் அன்பு செலுத்தினர். அறிவிற் சிறந்து விளங்கிய குப்புசாமியிடம் பணிவு, கீழ்ப்படிதல் ஆகிய பண்புகளும் குடிகொண்டிருந்தன. அனைத்துக்கும் மேலாக அவர் கடுமையாக உழைக்கும் தன்மை உடையவர். இந்தப் பண்புகள் காரணமாக, அவரை நெருங்கிவரும் எவரும் அவரால் ஈர்க்கப் படுவர். அவர் அனைத்துத் தேர்வுகளிலும் சிறப்பு நிலையில் தேர்ச்சி பெற்ருர். தமிழ் இலக்கியத்தில் அவருக்குப் பேரார்வம் உண்டு. தமிழ்ச்சங்கம் நடத்திய தேர்விலும் அவர் சிறப்பாகத் தேறினர். இசையிலும், நடிப்பிலும் அவருக்கு ஆர்வம் கலந்த ஈடுபாடு இருந்ததால் அவர் அமெச்சூர் நாடகக் கலைஞர் என்ற பட்டம் பெற்ருர். கல்லூரியில் படித்த காலத்தில் கோடைகால இரவின் கனவு **(Mid-Summer Night's Dream)** என்ற நாடகத்தில் ஹெலினு என்ற பாத்திரத்தை ஏற்று நடித்தபோது அவருக்கு இந்தப் பட்டம் கிடைத்தது.

இண்டர்மீடியட் படிப்பு முடித்ததும் அடுத்து எந்தத் துறையைத் தேர்ந்தெடுப்பது என்பதில் குப்புசாமி சிந்தனையைச் செலுத்தினார். கலை, விஞ்ஞானம், மருத்துவம், இவற்றில் எந்தத் துறையைத் தேர்ந்தெடுப்பது என்று யோசித்தார். இறுதியில், மருத்துவப் படிப்பை மேற்கொள்ளுவதென முடிவு செய்தார். அவர் இதயத்தில் அன்பும், கருணையும் குடிகொண்டிருக்கும் போது வேறு எதனை அவர் தேர்ந்தெடுக்க முடியும்? கலைத் துறைப் பாடங்கள் வறட்டுத் தன்மை உடையதாகத் தோன்றியன. விஞ்ஞானத்தை அவர் நினைக்கவே மாட்டார். இன்றுகூட அவர் விஞ்ஞானிகளைப் பார்த்து வேடிக்கையாக: ''விஞ்ஞானிகள் இருளில் எதனையோ தேடிக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் வழி தவறிச் செல்லுகின்றனர். அவர்கள் தம்மையும், தமது பகுத்தறிவையும் கடந்து முன்னேறி ஆத்ம ஞானத்தில் ஈடுபட வேண்டும். அதுமட்டுமே உலகின் பிரச்னைகளைத் தீர்க்கும்'' என்று குருதேவர் கூறுவார். குருதேவரின் 18-வது வயதில் அவரது சக மாணவர்கள் விஞ்ஞானம் பற்றி பெருமை பேசுவார்கள். அவர்கள் ஒரு காலத்தில் விஞ்ஞான உலகுக்கு தலைமை தாங்க முடியும் என்றும், நாசம் விளைவிக்கும் ஆயுதங்களை தயார் செய்ய முடியும் என்றும் தமது விஞ்ஞான ஆராய்ச்சியின் மூலம் உலகையே அசைத்துவிட முடியும் என்றும் பேசுவார்கள். ''சகோதரன் ஒருவன் அனுபவிக்கும் வேதனை கண்டு இரக்கப் படாதவர்கள் விஞ்ஞான சாதனையால் உலகை அசைக்க கற்பனை காணுகிறார்கள். என்ன அறியாமை!'' என்று குப்புசாமியின் மனம் குமுறும்.

மருத்துவப் படிப்பு, எதிர்காலத்தில் குப்புசாமி தேர்ந்தெடுக்கும் பாதையில் சீராகச் செல்ல

அவரைப் பக்குவப்படுத்தியது. அனைத்துப் பாடங்களையும் ஆசிரியர்களும் சகமாணவர்களும் ஆச்சரியப்படும் அளவுக்கு படித்துத் தேர்ச்சி பெறுவார். முதலாண்டுப் படிப்பின்போதே அறுவை சிகிச்சை நடைபெறும் இடத்திற்குச் சென்று டாக்டர்களுக்கு உதவி செய்வார். இந்தத் துறையில் மென்மேலும் அறிவைப் பெருக்கிக் கொள்ள இது அவருக்கு வாய்ப்பளித்தது. குப்புசாமியிடத்தில் வர்ணிக்க முடியாத அளவில் லட்சியத் துடிப்பும், உற்சாகமும் குடிகொண்டிருந்தது. அவரது கையில் எப்போதும் ஒரு சிறு குறிப்பேடு இருக்கும். அவரது கவனத்தைக் கவரும் விஷயங்கள் பற்றி உடனடியாக குறிப்பு எடுத்துக் கொள்ளுவார். இவற்றிலிருந்து அவர் நிறைய விஷயங்களைக் கற்றுக் கொண்டார். அவரது எதிர் கால வாழ்க்கை சிறப்புற இதுவும் உதவியது.

பள்ளிக்காலத்திலும், கல்லூரி நாட்களிலும் குப்புசாமி நேரத்தை திட்டமிட்டுச் செலவிடுவார். கிடைக்கும் ஓய்வு நேரத்தில் உடற் பயிற்சிகள் செய்வார். விளையாட்டுகளுக்கும், காலை உடலழகுப் பயிற்சிகளுக்கும் அவர் தவறாமல் நேரம் ஒதுக்கி அதில் தொடர்ந்து ஈடுபடுவார். இவற்றில் அவர் சிறந்து விளங்கினார். அவர் உயரமாகவும், வாட்டசாட்டமாகவும் இருப்பார். ஆரோக்கியமான வஜ்ரம் போன்ற உடல் அமைப்பு அவருக்கு இருந்தது. அறிவுக் கூர்மையும் திடகாத்திரமான, உடலமைப்பும் ஒருவரிடம் சேர்ந்து இருப்பது அரிது. ஒன்று மற்றொன்றை விழுங்கிவிடும். ஆனால் குப்புசாமி இதற்கு விதிவிலக்காக விளங்கினார். அவர் தேர்வுகளிலும் முதல் மாணவனாகத் தேறினார். விளையாட்டுத் துறையிலும் சாதனை படைத்துப் பரிசுகள் பெற்றார். அவர் காலையில் உடற்பயிற்சிகள் செய்வார். மாலையில் விளையாடு

வார். ஆயினும் வீட்டுப் பாடங்களைச் செய்வது உட்பட அனைத்துப் பாடங்களையும் நன்கு படித்து விடுவார். இதனை அவர் எவ்வாறு சாதிக்க முடிந்தது. இவற்றை இடையறாது செய்து வந்ததுதான் சாதனைக்குக் காரணம். அரை நூற்றாண்டுக்குப் பின்னர் அவர் தனது சீடர்களுக்கு இந்த ரகசியத்தை வெளியிட்டார். இது சம்பந்தமாக ஏராளமான சம்பவங்களை பின்வரும் அத்தியாயங்களில் காண்போம்.

அவரது கல்லூரிக் காலத்தில் உடல், புத்தி, இதயம் அனைத்தும் ஒருங்கிணைந்து வளர்ச்சி பெற்று வந்தன. வகுப்பில் அவர் பெற்றிருந்த நிலை, பேராசிரியர்களுடன் அவருக்கிருந்த நெருக்கம் ஆகியவை அவர் ஆத்ம பரிசோதனை செய்து கொள்ளவும், உயர்வு மனப்பான்மை, அகந்தை ஆகியவற்றைக் களைந்தெறியவும் அவருக்கு வாய்ப்பு அளித்தன. பேராசிரியர்களுடனும் வகுப்பிலேயே மிகவும் மந்தமான புத்தி உடைய மாணவனுடனும் அவர் ஒரே மாதிரியாகப் பழகிப் பேசுவார். உயர்ந்தவர்களையும் தாழ்ந்தவர்களையும் ஒரே மாதிரி அணுகுகிற பண்பை அவர் இதன் மூலம் வளர்த்துக் கொண்டார். விளையாட்டுத் துறையில் அவர் பெற்ற பயிற்சிகள், அவர் சமுதாயப் பணி செய்யத் தகுந்தவராகவும் பிற்காலத்தில் உலகையே வழி நடத்தும் தலைவராகவும் உயர்ந்திட உதவின.

அவர் உடலழகுப் பயிற்சிகளை கற்றுக் கொள்ளும்போது இத்துறையில் சிறப்பான கலை ஒன்றை அவருக்குக் கற்றுக் கொடுத்து அவருக்கு குருவாக விளங்கியவர் தாழ்த்தப்பட்ட சாதி எனக் கருதப்படும் சாதியைச் சார்ந்தவர். ஆனால் குப்புசாமிக்கு அவர் வணக்கத்துக்குரிய குருநாதர்.

குப்புசாமி தனது தெய்வீகப் பண்பை வளர்த்துக் கொள்ள இந்த மனப்பக்குவம் உதவியது.

குப்புசாமியின் குருபக்திக்கு நல்ல பரிசு கிடைத்தது. உடற்கல்வியில் மற்ற பாடங்களைப் போலவே, அவர் அதிக சிரமமின்றி விஷயங்களைக் கற்றுக்கொண்டார். அவருக்கு உடலழகுப் பயிற்சி ஆசிரியராக விளங்கியவர் திரு சாம்பசிவ ஐயர். அவர் பயிற்சி தருவதற்கு வரமுடியாத நாட்களில் குப்புசாமியை பொறுப்பாளராக நியமித்து விடுவார். இந்த மாணவனிடத்தில் ஆசிரியர் அந்த அளவுக்கு நம்பிக்கை வைத்திருந்தார். திரு சாம்பசிவ ஐயர் பல ஆண்டுகளுக்குப்பின் தனது 'பழைய மாணவனுடன்' தனக்குள்ள தொடர்பைப் புதுப்பித்துக் கொண்டார். இதனிலும் சிறப்பு யாதெனில் அவர் தனது பழைய மாணவனின் தெய்வீகத் தன்மையினை உணர்ந்து அவரது சீடராகவும் ஆகியதுதான். குருதேவர் அவருக்கு சந்நியாச தீக்ஷை அளித்து சுவாமி சதாசிவானந்தா என்ற திருநாமத்தைச் சூட்டினர்.

குருதேவர் வாழ்க்கையின் இந்தக் கால கட்டத்தை நினைவு கூர்ந்து அவரது வகுப்புத் தோழர்களில் ஒருவரான டாக்டர் பி.-எஸ். அன்னுசாமி ஐயர் பின்வருமாறு எழுதுகிறார்:

''சுவாமிஜி பிற்காலத்தில் சிறந்து விளங்குவார் என்பதற்கு அவரது பள்ளிப் பருவத்திலேயே சான்றுகள் கிடைத்தன. இதனை எண்ணிப் பார்க்கும்போது உள்ளம் உவகை கொள்ளுகிறது. இரண்டு ஆண்டுகளில் படிக்க வேண்டிய பாடத்தை அவர் ஒரே ஆண்டில் படித்து முடித்து விடுவார். இது கண்டு பேராசிரியர்கள் ஆச்சரியப்படுவார்கள். சக மாணவர்கள் அவரை உயர்வாக மதிப்பார்கள்.

அவர் ஓய்வு நேரங்களில் தனிமையில் இருப்பார். அவர் உளத்திருந்த ஆத்ம ஒளியும், ஆன்மீகக் காட்சியும் அவருக்கு ஆனந்தம் அளித்தன. தேர்வு நெருங்கும் நாட்களில் அவர் புத்தகங்களை மூடிவிட்டு சிந்தனையில் ஆழ்ந்து விடுவார். ஒவ்வொரு பாடத்திலும் அதிகபட்சமான மதிப்பெண்களைப் பெறுவார். அவரது கம்பீர மான தோற்றம் சுவாமி விவேகானந்தரை நினைவு படுத்தியது. எந்தப் புத்தகத்திலிருந்தும் எந்த விஷயத்தையும் ஒருமுறை படிக்கக் கேட்டால், ஒவ்வொரு வார்த்தையையும் அவர் திரும்பச் சொல்லுவார். இதன் காரணமாக பேராசிரியர்கள் மற்றும் சக மாணவர்கள் அவரைப் பாராட்டவும் செய்தனர்; அவரைக் கண்டு பொறாமைப்படவும் செய்தனர். அவரிடத்தில் இருந்த அன்பு, சத்தியம், நேர்மை ஆகிய பண்புகள் அவரை நெருங்கி வரும் எவரையும் காந்தம்போல் கவர்ந்து இழுத்தன''.

## 5. அம்ப்ரோசியா

மருத்துவத் துறையில் படித்து சிறப்பாகப் பட்டம் பெற்றுத் தேறிய அவர், மனித சமுதாயத் துக்கு நிறைய தொண்டு செய்ய விரும்பினார். அவர் ஞானக் களஞ்சியமாகத் திகழ்ந்தார். ஞானத்திற்கு செயல் வடிவம் தராவிடில் ஞானத் தினால் பயன் என்ன? குருதேவர் பிற்காலத்தில் ஆன்மீக வாழ்வில் தலைசிறந்து விளங்கியபோது இந்த எண்ணம் மனதில் ஆழப்பதிந்திருந்தது. அவரது மருத்துவப் பணியின் துவக்க காலத் திலேயே இந்த எண்ணம் அவர் மனதில் இடம் பெறத் தொடங்கியது.

ஏழைகளுக்கு மருத்துவ உதவியளிக்கும் பணியில் ஒரு டாக்டருக்கு உதவியாளராகச்

சேர்ந்து பணிபுரியத் தொடங்கினார். ஒன்றை இங்கு உறுதியாகக் குறிப்பிடவேண்டும். குருதேவர் ஆற்றலும் செயல் துடிப்பும் உடையவர். அவருக்கு பணம் சேர்ப்பதில் ஆசையில்லை. ஆனால் தொண்டு செய்வதில் அவர் ஒருபோதும் சளைத்ததில்லை. தொண்டு செய்யக்கிடைத்த வாய்ப்பை நழுவ விட்டால் அதனைப் பெரும் தோல்வியாக அவர் கருதுவார். ஒவ்வொருவரும் தனக்கு அருகில் அல்லல் பட்டுக்கொண்டிருக்கும் ஒருவருக்கு உதவுவது சிறந்த தொண்டாகும். ஆனால் நமது டாக்டர் இத்தகைய தொண்டினால் மட்டும் திருப்தி அடையவில்லை. தனக்கு அருகில் உள்ள நோயாளி போல் தொலைதூரத்தில் எத்தனையோ நோயாளி கள் இருக்கலாம் என்றும் அவர்களுக்கும் தொண்டு செய்யவேண்டும் என்றும் கருதினார்.

அவருக்கு ஒரு நல்ல யோசனை தோன்றியது. மருத்துவ ஆலோசனை வழங்கிட ஒரு பத்திரிகை ஒன்றை ஆரம்பிக்க எண்ணினார். அவ்வாறே செய்தார். அந்தப் பத்திரிகையின் ஆசிரியர், நிர்வாகி, அஞ்சல் எழுத்தர் அனைவரும் அவரே. ஆங்கில மருந்துடன் ஆயுர்வேத மருந்துகள் பற்றி யும் அவர் நிறைய அறிந்துகொண்டார். இவை இரண்டையும் இணைத்து நோயாளிகளை குணப் படுத்தி வழிகாட்டினார். பத்திரிகை ஆங்கில மொழியில் நடத்தப்பட்டது. ஆயினும் நோயாளி களுக்குத் தரும் சில சிகிச்சைக் குறிப்புக்களை தமிழில் குருதேவர் எழுதி வந்தார்.

இந்த பத்திரிக்கை பற்றி குருதேவர் பின் வருமாறு கூறியிருக்கிறார்.

"வீட்டில் தாயாரும், சகோதரரும் நான் வேறு ஏதாவது ஒரு துறையில் பணியாற்ற வேண்டும்

என்று விரும்பினர். ஆனால் மருத்துவத்துறையில் பணியாற்ற வேண்டும் என்பதில் நான் பிடிவாதமாக இருந்தேன். எனக்கு அதில் விருப்பம் இருந்தது. எனது ஓய்வு நேரங்களில் மருத்துவப் புத்தகங்களைத் தேடிக் கண்டுப்பிடித்துப் படிப்பதில்தான் செலவிடுவேன். மருத்துவப் பத்திரிகை ஒன்றைத் துவக்க எண்ணினேன். அதற்காகத் திட்டமிட்டேன். ஆரம்பச் செலவுகளுக்காக அன்னையாரிடமிருந்து ரூ. 100/- பெற்றுக்கொண்டேன். ஆயுர்வேதம் சம்பந்தமான கட்டுரைகள் எழுதித் தருமாறு ஆயுர்வேத டாக்டர்களை அணுகுவேன். நானே பல கட்டுரைகளை எழுதி புனைபெயரில் வெளியிடுவேன். பத்திரிகை விரைவில் பிரபலமாயிற்று. அன்னை ஒரு விரதம் அனுஷ்டிக்க விரும்பினார். அதற்கு ரூ. 150/- தேவைப்பட்டது. நான் அந்தத் தொகையுடன் ஆயத்தமாக இருந்தேன். இந்தப் பத்திரிக்கையை நடத்துவதால் எனக்கு மனத் திருப்தி ஏற்படவில்லை. ஏதேனும் ஒரு வேலையில் அமர எண்ணினேன். என்னுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும் பத்திரிக்கையைத் தொடர்ந்து நடத்தவும் இது வழிவகுக்கும் என்று கருதினேன்.

''அம்ரோசியா'' என்ற அந்தப் பத்திரிகை பல வாசகர்களுக்கு சுகமளித்தது. இந்தப் பத்திரிகை, நோய்க்கு மருந்தைத் தெரிவித்ததுடன் ஆரோக்கியமான வாழ்க்கையையும் அறிவுறுத்தியது. 'முன்னேற்றம்' என்ற பெயரில் முயற்சிகள் மேற்கொள்ளும் நாம் நமது முன்னோர்கள் அறிவுறுத்திய முறைகளைப் புறக்கணித்துவிடுகிறோம். 'மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்' மறைந்து கிடக்கும் மாணிக்கங்களைக் கண்டுபிடித்து மனித சமுதாயத்துக்கு வழங்குவதில் டாக்டர் குப்புசாமி பேரார்வம் கொண்டிருந்தார்.

அவரது வருமானமெல்லாம் பத்திரிகை நடத்துவதற்காகவே செலவிடப்பட்டு வந்தது. இக்கால பத்திரிகையாளர்கள் பணத்தைக் குவிக்கின்றனர். ஆனால் குருதேவர் விஷயத்தில் இது தலைகீழாக இருந்தது. இளமைக்காலம் முதல் அவர் பணத்தைப் பற்றி கவலைப்படுவதேயில்லை அண்மையில், ''அம்ரோசியா'' பத்திரிகையை புரட்டிக்கொண்டிருந்த குருதேவர் அதில் இருந்த ஒரு விளம்பரத்தைச் சுட்டிக்காட்டி, ''அந்தக் காலத்தில் முழுபக்க விளம்பரத்துக்கு ரூ 3/— கொடுப்பார்கள். அது எனக்குப் பெரிய தொகையாகத் தோன்றும்'' என்று கூறினார். பணத்தைப் பெறுகிறபோது அதனை உயர்வாகக் கருதவேண்டும். கொடுக்கின்றபோது அதனைக் குறைவாகவே மதிப்பிட்டு கொடுப்பதனால் ஏற்படும் மகிழ்ச்சிக்காகவே கொடுக்கவேண்டும். ரூபாய் நோட்டை வெறும் காகிதத்துண்டு என்று கருதிக் கொடுக்க வேண்டும். இந்த ஒரு மனப்பான்மை குருதேவர் வாழ்க்கையில் நிறைந்திருந்தது. மேலும் மருத்துவரின் ஆலோசனை அனைத்து மக்களுக்கும் கிடைக்க வேண்டும். அதற்காக பத்திரிகை தொடர்ந்து நடத்தப்பட வேண்டும். இந்த ஞான வேள்வியில் (இந்தப் பணியை குருதேவர் பிற்காலத்தில் அப்படித்தான் குறிப்பிட்டார்) யாரேனும் ஒரு நல்ல மனிதர் எவ்வகையிலேனும் ஈடுபட்டால் அது மகத்தான மகிழ்ச்சிக்குரிய சம்பவமாகும். அஞ்சல் அலுவலக அதிகாரி திரு. கோபால கிருஷ்ண ஐயர் குருதேவரை சாலையில் பார்த்தாலும், பத்திரிகைக்காக மணியார்டர் மூலம் பணம் வந்திருக்கிறது என்று தகவல் தருவார்.

டாக்டர் குப்புசாமி நல்ல முறையில் நோய்களை குணப்படுத்துவார். அதில் திறமைசாலி ஆனால்

அதற்காக நோயாளிகளிடமிருந்து பணம் வாங்கு வதில் அவருக்கு 'திறமை' போதாது.

அவர் பத்திரிக்கை நடத்தியதுடன் நிற்கவில்லை. அஞ்சல் வழியாக நோயாளிகளுக்கு ஆலோசனை வழங்குவதிலும் ஈடுபட்டு வந்தார்.

இந்த இரு முறைகள் மூலம் இளம் டாக்டர் நோயாளிகளை குணப்படுத்தினார், ஆரோக்கிய வாழ்க்கைக்கு குறிப்புக்கள் தருவதன்மூலம் மக்கள் நோய்கள் இன்றி சக்தி, வீர்யத்துடன் பூரண ஆரோக்கிய வாழ்க்கை வாழவும் இறுதியில் அவர்கள் மரணமிலாப் பெருவாழ்வு பெறவும் வழி காட்டினார்.

குப்புசாமி தனது தேவைகளையும், பத்திரிக் கையின் தேவைகளையும் பூர்த்தி செய்துக்கொள்ள ஒரு வேலை தேடினார் என்று முன்பே குறிப்பிட் டோம். அவர் சென்னை சென்று டாக்டர் ஹாலர் என்பவரின் மருத்துவ நிலையத்தில் சேர்ந்தார். பிற்காலத்தில் ஒரு நாள் ஆசிரமத்தில் உள்ள ஒரு அன்பர் தொண்டு செய்யும் வாய்ப்பு வந்தபோது இது என் வேலையல்ல என்று கூறிய வேளையில் டாக்டர் ஹாலரின் மருத்துவ நிலையத்தில் தான் பணியாற்றியதை குருதேவர் குறிப்பிட்டார்.

''அங்கு நான் கணக்கு எழுதுதல், மருந்து கொடுத்தல், நோயாளிகளை கவனித்தல் ஆகிய அனைத்துப் பணிகளையும் செய்ய வேண்டியிருந்தது. மிகக் கடுமையாக நான் உழைக்கவேண்டியிருந்தது. நான் இந்த வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு எனது பத்திரிகை வேலையையும் கவனிப்பேன். பத்திரிகையை சென்னைக்கு வரவழைத்து அங்கிருந்து பல அன்பர்களுக்கு இலவசமாக

அனுப்பிக்கொண்டிருந்தேன். இதனால் பலனடைந்தோர் ஏராளமானவர்கள். டாக்டர் ஹாலர் அவரது கூட்டாளியான டாக்டர் டாம்ரி ஆகிய இருவரும் பிரிந்து சென்றனர். அப்போது நான் இதைவிடப் பரந்த ஒரு களத்தில் தொண்டுசெய்ய வேண்டும் என விரும்பினேன். மலேயாவிலுள்ள பல அன்பர்களுடன் கடிதம் மூலம் தொடர்பு கொண்டேன். இறுதியில், மலேயாவுக்குச் செல்லத் தீர்மானித்தேன்.

---

## அத்தியாயம் இரண்டு

## தெய்வீகத்தின் வெளிப்பாடு

### 6. பந்தம் களைதல்

நடப்பது எல்லாம் நன்மைக்காகவே நடக்கிறது என்று ஒரு மனிதன் நம்புவதற்கு நிறைய அனுபவம் தேவைப்படுகிறது. பிறவி ஞானிகள் இதன் ரகசியத்தை உள்ளுணர்வால் அறிந்துகொள்ளுகின்றனர். அவர்கள் ஒருபோதும் பதறித் துடிப்பதில்லை.

குப்புசாமியின் குழந்தைப் பருவத்திலிருந்தே அவரது உள்ளப்பாங்கும் இறைவனின் திருவுள்ளமும் ஒருங்கிணைந்துவிட்டன. குழந்தைப் பருவத்திலிருந்து அவர் செய்கிற ஒவ்வொரு செயலும் இறைவனின் திருவுளப்பாங்கின் வெளிப்பாடாகவே இருந்து வந்தது. அகக் கண்ணில் அவருக்கு இறைவன் காட்சியளித்தான். உள்ளிருந்து ஒலிக்கும் தெய்வீகக் குரல் அவருக்குத் தெளிவாகக் கேட்டது.

டாக்டர் குப்புசாமி பொறுமை இழந்தார். அவரது மனம் பரந்து விரிந்தது. விரிவானதொரு களத்தில் தன்னலமற்ற சுதந்திரமாகப் பணி புரிந்திட அவர் மனம் விழைந்தது. உலகம் போகிற போக்கைப் பார்த்து அவர் அதிருப்தி அடைந்தார். உலகை வெறுக்காதவன் புலன் இன்பங்களை வெறுத்து ஒதுக்க முடியாது. பரம் பொருளை அடையவும் முடியாது. இத்தகைய சிந்தனைதான் டாக்டர் குப்புசாமியை கடவுளை நோக்கிச் செலுத்தி மனத்திருப்தி அடையச் செய்தது.

குப்புசாமி குழந்தைப் பருவம் முதல் அன்பு தன்னல மறுப்பு ஆகிய பண்புகளுடன் வாழ்ந்து வந்திருக்கிறார். குறுகிய வட்டத்தில் தொண்டு செய்வதில் அவருக்கு அதிருப்தி ஏற்படுவதற்கு அவரது இவ்விரு பண்புகளும் காரணமாக இருந்தன தண்ணீரிலிருந்து எடுத்து கரையில் விடப்பட்ட மீனைப்போல அவர் அவதிப்பட்டார்.

இறைவன் ஒரு வாய்ப்பைத் தந்தான். அவரைப்போல தகுதியுள்ள அன்பர்கள் மலேயாவில் அவசரமாகத் தேவைப்படுகிறார்கள் என்று அவருக்குத் தகவல் கிடைத்தது. அவர் எல்லையிலா மகிழ்ச்சி அடைந்தார். விரிவான ஒரு களத்தில் பணியாற்றி மக்களிடத்தில் அன்பு செலுத்தி தொண்டு புரியலாம் என அவர் மனம் ஆனந்தம் அடைந்தது.

டாக்டர் குப்புசாமி இதனை இறைவனின் கட்டளை என்று எடுத்துக்கொண்டார். அவர் உடனே பறந்துசெல்ல விரும்பினார். ஆனால் அவரது உறவினர்நிலை என்ன? வீட்டில் மூன்றாவதாக அல்லது கடைசியாகப் பிறந்த குழந்தையிடம்

அன்னை உயிரையே வைத்திருப்பாள். எந்தக் குடும்பத்திலும் இது இயற்கையாகவே நிகழும். மேலும் குப்புசாமி குழந்தைப் பருவம் முதலாகவே தனது இனிய பழக்கவழக்கங்களால் தனது உற்றார் உறவினர் அனைவரின் அன்புக்கும் உரியவராகத் திகழ்ந்து வந்தார். கோபியர் தமது சொந்தக் குழந்தைகளைவிட கண்ணன்மீது அதிகமான அன்பும் பாசமும் கொண்டிருக்கவில்லையா? இதற்குக் காரணமான அம்சம், குழந்தையின் புறத் தோற்றத்தில் இல்லை. அதன் தசைகளுக்குள்ளே ஊடுருவிப் பார்த்தால் உள்ளே தெய்வீக ஒளி பிரகாசித்துக்கொண்டிருப்பது தெரியும். குப்புசாமியின் நிலையும் அதுதான். அவரது பெற்றோர் மற்றும் நண்பர்களிடத்தில் அவருக்கு இருந்த உறவு மிகமிக உறுதியானது.

மாயையின் செயல் முறைகள் மர்மமானது. மாயைக்கு அதிபதியான கடவுளின் சக்தி அதைவிட மர்மமானது. குப்புசாமி தனது விருப்பத்தை வீட்டில் உள்ள உறவினர்க்குத் தெரிவித்தார். இதைக்கேட்ட பெற்றோரும், மற்றோரும் கண்ணீர் விட்டுக் கதறினர். அந்த நிலைமையை குப்புசாமி சாமர்த்தியமாக சமாளித்தார். குடும்பத்தினரை சாந்தப்படுத்தினார். பிறகு தன் மனத்தில் உள்ள உயர்ந்த லட்சியத்தை அவர்களுக்கு வெளிப்படுத்தினார். அவர் தத்துவத்தையும் நகைச்சுவையையும் சாமர்த்தியமாகக் கலந்து பேசுவார். அவர் ஒரு நல்ல டாக்டர். அதே நேரத்தில் ஒரு கருத்துக்காக ஆணித்தரமாக வாதிடும் திறமைசாலியும் ஆவார். புன்முறுவல் பூத்த முகத்துடன் பேசுகிற மகனுடைய உள்ளத்தில் அசைக்க முடியாத உறுதிப்பாடு இருப்பதனை அன்னை உணர்ந்து கொண்டார்கள். ''சாஸ்திரப்படி கடலைக் கடந்து செல்லக்கூடாது'' என்று அன்னையும்

மூத்த சகோதரரும் சொல்லிப் பார்த்தனர். ஆனால் டாக்டர் குப்புசாமி மனம் தளரவில்லை. அவர் இதுபோன்ற மூடநம்பிக்கைகளுக்கு அப்பாற் பட்டவர். இதுபோன்ற நம்பிக்கைகள் இந்தக் காலத்துக்கு ஒத்து வராது என்றும் பரந்த அளவில் தொண்டு செய்யும்போது இது போன்று பண்டு தொட்டு வரும் பழக்கங்களையெல்லாம் புறக் கணித்துவிட வேண்டியதுதான் என்றும் டாக்டர் குப்புசாமி அவர்களுக்கு பதிலளித்தார். நோயாளி கள் எழுப்பும் குரல் இறைவன் எழுப்பும் குரல் அல்லவா? இந்தக் குரலுக்கு செவிசாய்க்காமல் மூடப்பழக்கங்களுக்குப் பின்னே மறைந்து கொள்ளு தல் முறையா? இத்தகைய கருத்து டாக்டருக்குப் பிடிக்கவில்லை. இறுதியில் அன்னையும், சகோதரரும் அவரது கருத்தை ஒப்புக்கொண்டனர். இறை யருளால் முதல்வெற்றி கிடைத்தது. அவர்கள் இருவரும் டாக்டரின் திட்டத்துக்கு சம்மதம் தெரிவித்து வாழ்த்தினர். கண் கலங்கி நின்ற நண்பர் குழுவினரிடமும் புன்முறுவலுடன் பேசி அவர்களிடமிருந்து விடைபெற்றார். அவர்களும் டாக்டர் அவரது லட்சியப்பணியில் விரைந்து பணியாற்றி வெற்றிபெற வாழ்த்தினர். டாக்டரைப் பொறுத்த அளவில், அவரது தோளி லிருந்து பெரும் சுமை கீழே இறக்கிவைக்கப்பட்டது போன்ற உணர்வு அவருக்கு ஏற்பட்டது. இறைவன் தனது திருவுள்ளப்படி வழிகாட்ட டாக்டர் பிரார்த்தித்தார்.

## 7. மலேயாவுக்கு கப்பலில் பயணம்

இளம் டாக்டர் மலேயாவுக்கு கப்பல் மூலம் புறப்பட்டார். அவர் சென்று வாழப்போகும் நாடு பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. அந்த நாட்டு மக்களின் பழக்க வழக்கங்கள், அந்த நாட்டு மொழி

ஆகியவை பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. அவர் அந்த நாட்டுக்கு வருவதுபற்றி அந்த நாட்டு மக்கள் என்ன நினைப்பார்கள் என்பதும் அவருக்குத் தெரியாது

பகவான் கிருஷ்ணனின் அமுத வாக்கினை அவர் நினைவுபடுத்திக் கொண்டார். "கடமையைச் செய்வது மட்டுமே உனது உரிமை. அதன் பலனை எதிர்பார்க்க உனக்கு உரிமையில்லை. உனது செயல் மற்றும் செயலின்மையால் ஏற்படும் விளைவுகளைப் பற்றி நீ கவலைப்படாதே". இறைவனின் கட்டளைப்படியே டாக்டர் செயல்பட்டு வந்தார். அவர் கடந்துவந்தது, செயலின்மை அல்ல; அவரது கற்பனையளவுக்கு இல்லாமல் குறைந்த அளவில் செய்துவந்த தொண்டு மட்டும்தான். முன்பு மூச்சுத் திணறுவதுபோல உணர்ந்த அவர் இப்போது சுதந்திரக் காற்றைச் சுகமாக சுவாசிக்கிறார். அவர் தன்னை இறைவனிடம் ஒப்படைத்து விட்டார். மனித குலத்துக்குத் தீவிரமாகத் தொண்டு செய்ய அருள்புரியுமாறு அவர் இறைவனைப் பிரார்த்தித்தார். அந்தர்யாமியாக அவருக்குள் இருக்கும் இறைவன் இந்த பிரார்த்தனையைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

வீரச் செயலில் குருதேவருக்கு விருப்பம் அதிகம். தனது சீடர்களான இளைஞர்கள் வீரச் செயல்களில் ஈடுபடுவோராய் விளங்க வேண்டும் என அவர் அறைகூவல் விடுத்தார். 1946-ல் தன்னை தரிசிக்க வந்த சாதகர்களிடம் குருதேவர் பின் வருமாறு திருவாய் மலர்ந்து அருளினார். "வீரச் செயல் புரிவதில் ஒரு அழகு இருக்கிறது; வேறு எதிலும் கிடைக்காத திருப்தி உங்களுக்குக் கிடைக்கிறது. வீரச் செயல் புரிய வேண்டும் என்ற துடிப்பு உள்ளவர்கள்தான் இறைஞானம் பெற முடியும்.

புதிய ஊர்களுக்குச் செல்லவோ, இரவில் காடுகளில் அலையவோ, மலைகளில் ஏறவோ, நீ பயப்பட்டால், இறைஞானம் பெறுவதற்கு 'கத்திமுனை' போல் உள்ள பயணத்தில் நீ எப்படி ஈடுபட முடியும்? தைரியமாக இரு. கடவுள் மீது நம்பிக்கை கொள். சக்தி அனைத்துக்கும் ஆதார சக்தியாக இருக்கும் இறைவனிடமிருந்து பலம் பெறு''.

கப்பலில் பயணம் செய்தபோதுகூட டாக்டர் விழிப்புடன் இருந்தார். தொண்டுசெய்யும் வாய்ப்புக் கிடைக்குமா என்று எதிர்நோக்கிக் கொண்டிருந்தார். (ஸ்டெதாஸ்கோப்) சோதனைக் கருவியும், மருந்துப்பெட்டியும் அவர் அருகில் எப்போதும் இருக்கும். யாரேனும் தும்மினாலும் இருமினாலும் டாக்டர் ஓடோடிச் சென்று சோதித்து மருந்து கொடுப்பார். நோயாளி தன்னிடம் வர வேண்டும் என்று அவர் எதிர்பார்ப்பதில்லை. அவர் நோயாளியை நாடிச்சென்று தொண்டு புரிந்தார். அவரது சிரத்தை உணர்வு எவரையும் தன்வயப் படுத்தும். அவர் ஒரு புதிய அன்பரைப் பார்த்து வணக்கம் தெரிவித்தால், அந்த அன்பர் இவருடன் நீண்ட நாட்கள் பழகியவர்போல எண்ணிக்கொள்ளு வார். கள்ளங்கபடமற்ற இதயத்தால் அவர் புதிய வர்களையும் தன்வயப்படுத்திவிடுகிறார். பலனை எதிர்பாராமல் பணிபுரிபவர் அல்லது மனிதகுலத் தொண்டுக்கு தன்னை அர்ப்பணித்துக்கொள்ளுபவர் சிறந்த உதாரண புருஷராவார்.

மற்ற நேரங்களில் குப்புசாமி கப்பலின் மேல் தளத்தில் உலாவுவார். அவர் அடிக்கடி சிலைபோல் அமர்ந்து விடுவார். பரந்த ஆகாயத்தையும், விரிந்த கடலையும் அதன்மீது துள்ளி விளையாடும் அலைகளையும் அவர் பார்த்துக் கொண்டிருப்பார். சுட்டெரிக்கும் சூரியன், உயர்ந்தெழும் நீராவி,

திரண்டு வரும் மேகங்கள் அனைத்தும் அவரை தியான நிலைக்கு அழைத்துச் செல்லும்.

இந்தக் கப்பல் பயணம், இளம் டாக்டருக்கு வீரச் செயலைவிடச் சிறந்ததாகத் தோன்றியது. தொண்டு செய்வதில் அவருக்குள்ள அசாதாரண மான ஆர்வம் இந்தப் பயணத்தின்போது வெளிப் பட்டது. மலேயா சென்று தொண்டு புரிய வாய்ப்புக் கிடைப்பதை எண்ணிய மாத்திரத்தில் அவர் தன்னை மறந்தார்; பெருமகிழ்ச்சி அடைந் தார். தொண்டு செய்ய வாய்ப்புக் கிடைத்தபோது தனது சுகசௌகரியங்கள் பற்றி அவர் எண்ணிப் பார்க்கவில்லை. அவர் ஒருமுறை எங்களிடம் பின் வருமாறு கூறினார்: ''நெடுந்தொலைவு பயணம் செய்து எனக்குப் பழக்கமில்லை. பயணத்திற்குத் தேவையானவை என்ன, எவற்றை எடுத்துச்செல்ல வேண்டும் என்பதுபற்றி எனக்கு எதுவும் தெரியாது. பயணச் செலவுக்காக எவ்வளவு பணம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ண மும் கப்பலில் ஏறுவதற்கு முன் தோன்றவில்லை. நான் கொஞ்சம் லட்டு உருண்டைகளை எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டேன். பயணத்தின் போது அந்த லட்டு உருண்டைகளைத் தின்று கொண்டு தண்ணீரைக் குடித்து வந்தேன்''.

ஓரிரு லட்டு உருண்டைகளை சக பிரயாணி களுக்குக் கொடுப்பார். திடீரென்று மீன் அவர் நினைவுக்கு வரும். உடனே லட்டு உருண்டையை மீனுக்காக கடலில் வீசி எறிவார். இன்று வரை அவர் இத்தகைய தர்மத்தை விடாமல் செய்து வருகிறார். அவர் மலேயாவில் இருந்தபோது காலையில் தன் இருப்பிடத்தைக் கடந்து செல்லும் பசு, நாய் அல்லது ஒரு பறவைக்குக் கொடுப்பதற் காக உணவுப் பண்டங்களை எடுத்து வைத்திருக்க

வேண்டும் என்பதில் அவர் கவனம் செலுத்தி வந்தார். அவர் ஸ்வர்காஸ்ரமத்தில் இருந்தபோது தனக்குக் கிடைக்கும் பிக்ஷை (உணவில்)யில் ஒரு பகுதியை கங்கையில் நீந்தித் திரியும் மீன்களுக்குப் போட்டுவிட்டு மீதத்தைத்தான் அவர் உண்பார். இப்போதும் இப்பணி தொடருகிறது. அவரது மீன் நண்பர்கள் நண்பகலில் தவருது உணவு பெறுவர்.

1946-ஆம் ஆண்டில் நிகழ்ந்த சம்பவம் ஒன்றை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும்; அது ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலை நேரம், குருதேவர் ஞாயிற்றுக்கிழமைகளில் பாலும், பழங்களும் மட்டுமே உட்கொள்ளுவார். நான் அப்போது ஏதோ ஒரு வேலையாக குருதேவரின் குடிலுக்குச் சென்றேன். குருதேவர், ஆசிரமவாசி யான 'ஜி'யை அழைத்தார். 'ஜி' — குருதேவ ருக்குத் தொண்டு செய்வதையே தனது மதம் எனக் கருதி அவ்வாறே செய்து வந்தார். குருதேவர் அவரை அழைத்தார். "ஓஜி! அந்தப் பழக் கூடையை இங்கே கொண்டு வாருங்கள்" என்று கூறினர். அந்த நாட்களில் பழங்கள் அரிதாகவே கிடைத்தன. 'ஜி' தயங்கினர். உடனே குருதேவர் வேகமாக சமையலறைக்குள் நுழைந்து கூடையை எடுக்கப் போனர். 'ஜி' குருதேவருக்கு உதவி புரிய பின்னு லேயே ஓடி வந்தார். குருதேவர் பழக் கூடையை கையில் தூக்கிக் கொண்டு வெளியே வந்தார். 'ஜி' பின் தொடர்ந்து வந்தார். குருதேவர் கூடையில் உள்ள பழங்கள் மீது பார்வையைச் செலுத்திவிட்டு ஒரு ஆரஞ்சுப் பழத்தையும் ஒரு வாழைப் பழத்தையும் கையில் எடுத்தார். உடனே 'ஜி' முணுமுணுத்தார். "ஆரஞ்சுப் பழங்கள் சுவாமிகளுக்காக வாங்கி வரப்பட்டவை. கடைவீதியில் இந்தப்பழங்கள்

கிடைப்பது அரிதாக உள்ளது. சுவாமிகள் வேறு எந்தப் பழங்களையும் தின்பதையில்லையாதலால் இவை சுவாமிகளுக்காகவே பத்திரப்படுத்தி வைக்கப்பட்டுள்ளன. தயவுசெய்து ஆரஞ்சுப் பழத்தைமட்டும் யாருக்கும் கொடுக்க வேண்டாம்'' குருதேவர் அவரை ஒருமுறை பார்த்துவிட்டு, ''அப்படியா, இப்போது நடப்பதைப் பார்'' என்றார். ஒரு ஆரஞ்சுப்பழத்தை எடுத்து என்னிடம் கொடுத்தார். உடனே மற்றொரு சீடருக்குக் கொடுக்க இன்னும் ஒரு பழத்தை எடுத்தார். 'ஜி' க்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அவர் சுவாமிகளைப் பார்த்து, ''போதும் சுவாமிஜி, போதும் இன்னும் நான்கு பழங்கள் தான் இருக்கின்றன'' என்றார். ''எத்தனை பழங்கள் இருக்கின்றன? நான்கா? நான் அத்தனை பழங்களைத் தின்னப் போவதில்லை. இந்த ஆரஞ்சுப் பழங்கள் அரிதாகவே கிடைக்கின்றன என்றால் மீன்களும் அவற்றின் பங்கைப் பெற்றுக்கொள்ள வேண்டும்'' என்று குருதேவர் கூறினார். குருதேவர் என்ன செய்யப்போகிறார் என்று 'ஜி' அறிந்து கொள்ளுவதற்குள்ளாக குருதேவர் ஒரு பழத்தை எடுத்து தோலை உரித்தார். பிறகு நிவேதனம் தொடங்கியது. துண்டு துண்டாக ஆரஞ்சுப் பழம் அவர் கையிலிருந்து தண்ணீருக்குள் சென்றது. குருதேவர் பக்தி சிரத்தையுடன் அதனைக் கொடுத்துக் கொண்டிருந்தார். புதிய, மணம்மிக்க மலர்களை இறைவன் திருவடிகளில் சமர்ப்பணம் செய்வதுபோன்ற மனப் பக்குவத்துடன் குருதேவர் மீன்களுக்கு ஆரஞ்சுப் பழத் துண்டுகளைக் கொடுத்தார். ''கங்கை எனது தெய்வத் தாய்'' என்று சிவானந்த கீதையில் குருதேவர் கூறுகிறார். இயல்பாகவே, மீன்கள் அவரது உடன்பிறப்புக்களாக ஆகிவிடுகின்றன அல்லவா? அவற்றுடன் குருதேவருக்கு ஒரு அன்புப்

பிணைப்பு ஏற்பட்டு விட்டது. மீன்கள் ஆரஞ்சுத் துண்டைக் கவ்விக் கொண்டு செல்ல ஒவ்வொரு முறையும் தண்ணீரின் மேல்மட்டத்துக்குத் துள்ளிக்குதித்து எழும்போது குருதேவரின் இதயம் திருப்தியால் நிறையும்.

இவ்வாறு, பற்றற்ற இந்த மகாத்மாவைத் தாங்கிக் கொண்டு எஸ். எஸ். தாரா வங்கக் கடலின் மறுகரையை நோக்கிச் சென்றது.

## 8. மலேயாவில் மருத்துவத் தொண்டு

குருதேவ் மலேயா சென்றடைந்ததும் உடனடியாகத் தனது கடமைகளை நிறைவேற்றுவதில் ஈடுபட்டார். புதிய முகங்களைக் கண்டு அவர் திகைக்கவில்லை. முற்றிலும் புதிய சூழ்நிலையில் இருப்பது கண்டு அவர் நடுங்கவில்லை. அவரது புன்முறுவல் பூத்த முகம், போர்ட்டர்களையும், டாக்ஸி டிரைவர்களையும் கூடக் கவர்ந்து இழுத்தது. டாக்டர் தேவைக்கு அதிகமாக ஒரு விநாடியைக்கூட வீணாக்க மாட்டார். ''என் வேகத்துக்குத் தகுந்தாற்போல் நீ விரைந்து வரவேண்டும்'' என்று அவரது பாக்கெட் கெடிகாரத்திலிருந்து எழும் 'டிக் டிக்' ஒலி அவரது காதுகளில் உணர்த்துவதுபோல அவருக்குத் தோன்றும். பல ஆண்டுகளாகக் குழந்தைகளைப் பிரிந்திருந்த தாய் அவர்களைக் காண ஆவலுடன் விரைந்தோடி வருவதுபோல அவர் மருத்துவ மனையில் உள்ள நோயாளிகளைக் காண விரைந்து செல்லுவார்.

டாக்டர் தனது கப்பற் பயணத்தின்போது லட்டு மற்றும் தண்ணீரை மட்டுமே உணவாக உட்கொண்டார் என்பதை முன்பே அறிந்து கொண்டோம். இறைவன் அளிக்கும் பாதுகாப்பை அவர்

மலேயாவில் இறங்கியதும் உணர்ந்து கொண்டார். 1949-ல் கோடை காலத்தில் வைர விழா மண்டபத்துக்குள் ஒரு இளைஞர் நுழைந்தார். அவர் மயங்கிய நிலையில் இருந்தார். அலுவலகத்திலுள்ள அனைவரையும் அந்த இளைஞரை கவனிக்கும் பணியில் குருதேவர் ஈடுபடுத்தினார். அந்த இளைஞனுக்கு உதவுவதில்தான் அசாதாரணமான ஆர்வம் எடுத்துக் கொண்டதற்கு மலேயாவில் தனக்குக் கிடைத்த அனுபவங்களே காரணம் என்பதை விளக்கி குருதேவர் பின்வருமாறு கூறினார்: "மலேயாவுக்கு கப்பலில் சென்றபோது லட்டு மற்றும் தண்ணீரை மட்டுமே நான் உணவாக எடுத்துக் கொண்டேன். இத்தகைய உணவு எனக்குப் பழக்கப்படாத ஒன்று. மிகவும் களைப்புற்ற நிலையில் நேக்ரி—செம்பிலானை அடைந்தேன். நேராக மருத்துவமனை சென்றேன். அங்கு நான் தேடிச் சென்ற மருத்துவ அதிகாரி இல்லை. நான் அந்த நகரம் முழுவதும் சுற்றினேன். எங்கு உணவு கிடைக்கும் என்று தேடி அலைந்தேன். மலபார்க்காரர் ஒருவரைச் சந்தித்தேன். அவர் ஒரு ஆலயத்தைச் சுட்டிக்காட்டி அங்கு தயிரும் சாதமும் பெற்றுக்கொள்ளச் சொன்னார். அந்த ஆலய அர்ச்சகர்கள் பாராமுகத்தினராய் இருந்தனர். ஆயினும் நான் விடாமுயற்சி செய்து சாதமும் தயிரும் பெற்றுக்கொண்டேன். அவற்றை உண்டு பெருமளவுக்கு களைப்பைப் போக்கிக் கொண்டேன். ஒரு பயணச்சீட்டு பெற்றுக்கொண்டு ரப்பர் தோட்டத்தை அடைந்தேன். மருத்துவ அதிகாரியின் இல்லத்தைக் கண்டுபிடித்தேன். ஆனால் மருத்துவ அதிகாரி அப்போது வீட்டில் இல்லை. டாக்டர் ஹெரால்டு பர்சனை எங்கு காணலாம் என்ற தகவலை அவரது சகோதரர் திரு. வில்ஃப்ரெட் பர்சன் கனிவுடன் தெரிவித்தார். ஒரு ஆளைத் தேடிப்போனால் அவரைக்கண்டு பிடிக்கிற

வரை நான் ஓய்வு கொள்ளமாட்டேன். இறுதியில் நான் டாக்டரை சந்தித்தேன். அதிர்ஷ்டவசமாக அப்போது அவருக்கு ஒரு டாக்டர் தேவைப் பட்டார். ''ஒரு மருத்துவமனையை நீங்கள் முழுப் பொறுப்பேற்று கவனித்துக்கொள்ள இயலுமா?'' என்று அவர் என்னிடம் கேட்டார். ''நிச்சயமாக முடியும். என்னால் மூன்று மருத்துவ மனைகளைக்கூட கவனித்துக்கொள்ள முடியும்'' என்று நான் பதிலளித்தேன். நான் உடனடியாக வேலையில் அமர்த்தப்பட்டேன். முதலில் மருந்துக் கடையில் இருந்து அவருக்கு உதவி புரியப் பணிக்கப் பட்டேன். இது எனக்கு முற்றிலும் புதிய வேலை. இந்த வேலையைச் செய்துகொண்டிருந்த ஒரு சீனக்காரர் அப்போதுதான் இந்த வேலையிலிருந்து விலகிப்போயிருந்தார். உடனடியாக அங்கிருந்த மருந்துகள் பற்றி விரைவிலேயே விபரங்கள் அறிந்து கொண்டு பணியில் நன்கு ஈடுபடத் துவங்கினேன். நான் மருந்து கொடுக்க வேண்டும்; கணக்கு எழுத வேண்டும்; நோயாளிகளையும் கவனிக்க வேண்டும். வேலை கடுமையாகத்தான் இருந்தது. விரைவிலேயே இதனை உணர்ந்த டாக்டர் பர்சன் எனக்கு உதவியாக கணக்கு எழுதுவதற்கு ஒருவரை நியமித்தார். கம்பவுண்டர் ஒருவரையும் நியமித்தார். அவ்விருவரும் எனது இனிய சுபாவத்தைத் தவறாகப் பயன்படுத்திக் கொண் டனர். அவர்கள் தமது பணியை சரிவரச் செய் யாமல் சோம்பேறிகளாய் ஆகிவிட்டனர். ஆக, அவர்களது வேலைகளையும் நானே செய்யவேண்டி யிருந்தது. டாக்டர் பர்சனிடம் இதுபற்றிப் புகார் செய்யவும் மனமில்லை. நான் புகார் செய்தால் அவர் எனது உதவியாளர்களைக் கடுமையாகக் கண்டிப்பார் என்ற எண்ணத்தில் அவ்வாறு செய்ய வில்லை.

''டாக்டர் பர்சன் ஜோஹூர்பாருவிலுள்ள என்னை ஒரு ரப்பர் தோட்டத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கு ஒரு மருத்துவ மனைக்குப் பொறுப்பாளராக என்னை நியமித்தார். இங்கு நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள், அலுவலகப் பணியாளர்கள், அதிகாரிகள் ஆகியோருடன் எனக்கு நேரடித்தொடர்பு ஏற்பட்டது. அவர் களுக்கு நான் நன்கு சேவை செய்தேன். அவர் களின் அன்புக்குப் பாத்திரமாகும் அளவில் செயல்பட்டேன். கடுமையான உழைப்பில் எனக்கு விருப்பம் அதிகம். நான் மருத்துவமனையில் பணியாற்றிக் கொண்டே இருப்பேன்; மறு நிமிடம் அஞ்சல் அலுவலகத்தில் இருப்பேன். டாக்டர் பர்சனுக்கு என்னை மிகவும் பிடித்துவிட்டது. அவரது சொந்த வேலைகளில்கூட அவருக்கு நான் உதவி புரிந்து வந்தேன். அவ்வப் போது அவருக்கு நான் பணம் கடனுகத் தருவேன். கடைவீதியிலிருந்து அவருக்காக பொருட்களை வாங்கி வருவேன். இதற்குரிய தொகையை நான் அவரிட மிருந்து பிறகு பெற்றுக்கொள்ளுவேன். டாக்டர் பர்சனுக்கு வேண்டிய பொருட்களை வாங்கிக் கொடுப்பதற்காக சில சமயம் எனது வீட்டிலிருந்த விலையுயர்ந்த பொருட்களை அடகு வைத்து பணம் பெற்றுள்ளேன். நான் நிர்வாகத்துக்கும், தொழி லாளர்களுக்கும், நண்பனுக இருந்தேன். சுத்தி கரிப்புத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய் தால் டாக்டர் பர்சன் என்னைத்தான் அழைப்பார். நான் அங்குமிங்கும் ஓடி அவர்களை மீண்டும் வேலைக்கு அழைத்து வருவேன்.

''என்னுடைய வேலையைச் செய்து முடித்த துடன் நிற்காமல் மற்ற மருத்துவ மனைகளுக்கும் செல்வேன். மருத்துவ பரிசோதனைகள் பற்றிய புதுப்புது விஷயங்களைத் தெரிந்துகொள்வேன். இந்த

நேரத்தில் நான் படித்து முடிக்காத மருத்துவம் சம்பந்தமான புத்தகம் எதுவும் இல்லை. இத்துடன் எனது உதவியாளர்களுக்கு நான் உதவி செய்வேன். நான் அவர்களுக்குப் பயிற்சி அளித்து மற்ற மருத்துவ மனைகளுக்கு அனுப்புவேன். அவர்களுக்குத் தேவையான சிபாரிசுக் கடிதம், ரயில் கட்டணம், வழிச் செலவுக்குரிய தொகை அனைத்தும் கொடுத்தனுப்புவேன். விரைவில் நான் ஜோஹூர்பாருவில் பிரபலமடைந்து விட்டேன். வங்கி நிர்வாகி எந்த நேரத்திலும் எனது செக்கிற்கு (Cheque) பணம் கிடைக்க ஆவன செய்வார். விடுமுறை தினத்தில்கூட இவ்வாறு கிடைக்க வழி செய்வார். ரயில் நிலைய அதிகாரி எனக்காக ரயிலை நிறுத்தி வைத்திருப்பார். என்னுடைய சமுதாய உணர்வு, தொண்டு இவற்றின் மூலம் நான் அனைவர்க்கும் நண்பனாக ஆனேன். எனக்குப் பதவி உயர்வும் அதன் மூலம் ஊதிய உயர்வும் விரைவாகக் கிடைத்தது.''

இந்த அத்தியாயம் எழுதப்படுகிற நேரத்தில் இறைவன் திரு. நரசிம்ம ஐயர் என்பவரை சிவானந்தாஸ்ரமத்துக்குக் கொண்டுவந்து சேர்த்தார். திரு. நரசிம்ம ஐயர், மலேயாவில் டாக்டர் குப்புசாமியின் சமையல்காரராக ஆறு மாதங்கள் பணியாற்றியவர். குருதேவருக்குத் தொண்டு செய்ய அவருக்கு மீண்டும் ஒரு வாய்ப்புக் கிடைத்தது. அவருக்கு குருதேவர் சந்நியாச தீக்ஷை அளித்தார். குருதேவருடன் மலேயாவில் ஆறு மாதங்கள் இருந்தபோது நிகழ்ந்த சம்பவங்களை அவர் எடுத்துரைத்தார். அந்த நிகழ்ச்சிகளின் தொகுப்பு வருமாறு:

டாக்டர் குப்புசாமி தன்னுடன் பணியாற்றிய டாக்டர்களின் நன்மதிப்பைப் பெற்றார். மருத்துவ

மனையில் அவருக்கு மேலதிகாரிகளாக இருந்த டாக்டர் பர்சன், டாக்டர் கிரீன் ஆகியோர் அவரை மிகவும் நேசித்தனர். அவரது கனிவான இயல்பு, கண்ணியமான பழக்கம், தன்னலமற்ற தொண்டு ஆகியவை உயர் அதிகாரிகளின் நன் மதிப்பைப் பெற்றன. அவர் உயர் அதிகாரிகளின் 'வலது கை'யாகத் திகழ்ந்தார். அவர்களின் முழு நம்பிக்கைக்கு உரியவரானார். இவ்வாறு மருத்துவ மனையின் முழு நிர்வாகமும் அவர் கைக்கு வந்து சேர்ந்தது. மருத்துவ மனை வளாகத்துக்குள் அவருக்கு ஒரு வீடு தரப்பட்டது. மருத்துவ மனைப் பணியில் தான் விரும்பும் அளவுக்கு நேரத்தைச் செலவிட இது உதவியது. அவர் தனது சொந்த வேலைகளுக்கு அதிக நேரம் எடுப்பதில்லை. வேலை நேரம், ஓய்வு நேரம் என்று அவருக்கு இல்லை. அவருக்கு எப்போதும் வேலை நேரம்தான். காலை யிலும் இரவிலும் உணவுக்கும் ஓய்வுக்கும் சிறிது நேரத்தை அவர் எடுத்துக் கொள்ளுவார். இது அவருக்கு நற்பெயரை ஈட்டித் தந்தது. மலேயா முழுவதும் அவரது புகழ் காட்டுத்தீபோலப் பரவியது. அவரது சிரத்தை, முழுமையான கவனம், தொண்டு உள்ளம், அனைத்துக்கும் மேலாக அவரிடமிருந்து எப்பொழுதும் வெளிப்படும் ஒரு சிறந்த பண்பு ஆகியவை காரணமாக சிறந்த டாக்டர்கள்கூட குணமாக்க முடியாது என்று கைவிட்ட நோயாளிகளையெல்லாம் டாக்டர் குப்புசாமி குணப்படுத்தினார். இதனால் ஏராளமான நோயாளிகள் குறிப்பாக ஏழை எளிய மக்கள் அவரது மருத்துவ மனைக்குப் பெரும் எண்ணிக் கைகளில் வந்தனர். பூத உடல் மறையும் வரை பிறருக்குத் தொண்டு செய்வது என்று தான் மேற்கொண்டுள்ள லட்சியப் பணி பூர்த்தி அடையவே இந்த வாய்ப்புக்கள் கிடைக்கின்றன என்று குருதேவர் கருதுவார். அவர் எப்போதும்

சிரித்த முகத்துடன் இருப்பார். எந்த நேரத்திலும் நோயாளிகளை வரவேற்று சேவை செய்ய அவர் காத்துக் கொண்டிருந்தார். அவர் அனைவரிடத்திலும் குறிப்பாக ஏழை எளிய மக்களிடம் புன்முறுவல்பூத்த முகத்துடன் பழகுவார்.

டாக்டர் குப்புசாமி ஏழைகளை இறைவனாகவே நோக்குவார். ஏழ்மை ஒரு சாபக்கேடா அல்லது வரப்பிரசாதமா? இதுபற்றி சிந்தனையாளர்கள் தீர்மானிக்கட்டும். ஆனால் அறத்தில் நாட்டம் கொண்ட ஒரு ஹிந்து முக்தி பெறுவதற்காக ஏழ்மையைத் தழுவிக்கொள்ளுவான். உலகாயத வாதி செல்வத்தை சேர்த்து வைப்பதிலேயே நாட்டம் கொள்ளுவான்; முக்திபெறும் வழியில் மனத்தைச் செலுத்தமாட்டான். டாக்டர் குப்புசாமி கருணை உள்ளம் கொண்டவராகத் திகழ, ஏழ்மை வாய்ப்பளித்தது. பணக்காரர்களைவிட ஏழைகளே இவர் தொண்டு செய்ய அதிக வாய்ப்பளித்தனர். குடிசைப்பகுதியில் சுகாதாரத்துக்குக் கேடு விளைவிக்கும் சூழ்நிலையில் வாழும் ஒரு ஏழை, நோயால் பாதிக்கப்பட்டால் டாக்டர் குப்புசாமி ஒரு மலைப்பிரதேசத்தில்போய் தங்கியிருக்கவேண்டும் என்று அறிவுரை கூறமாட்டார். அந்த நோயாளியை தனது வீட்டுக்கே கொண்டு வந்து படுக்கை தந்து தங்கவைப்பார். தனது குடும்பத்தில் ஒருவர்போல அவரைக் கவனித்துக் கொள்ளுவார். தொடர்ந்து அந்த நோயாளியை கவனிக்க ஒரு நர்ஸை அங்கு நியமித்து விடுவார். மருத்துவமனைக் கடமைகளிலிருந்து அவ்வப்போது சிறிது நேரம் ஓய்வு கிடைத்தால் தன் வீட்டில் இருக்கும் நோயாளியைக் காண ஓடோடி வருவார். நோயாளி குணமடைந்ததும் அவரிடம் கொஞ்சம் பணம் கொடுத்து வீட்டுக்கு அனுப்பி வைப்பார். இவ்வாறு பலனடைந்த நோயாளி தான் பெற்ற

மகிழ்ச்சியைத் தன்னுடன் மட்டும் வைத்துக் கொள்ளாமல் அனைவருடன் பகிர்ந்து கொள்ளுவார். டாக்டரைப்புகழ்ந்து பேசுவார். டாக்டரிடம் ஏராளமான நோயாளிகளை அழைத்து வருவார்.

நோயாளிகளுக்குத் தன்னலம் மறுத்துத் தொண்டு செய்வது வேதாந்த தியானத்துக்குச் சமமானது என்று குருதேவர் இன்று உறக்கச் சொல்லுகிறார். அவர் தனது அனுபவத்தின் அடிப் படையில் இவ்வாறு பேசுகிறார். இதனை அவர் தன் வாழ்க்கையில் உணர்ந்திருக்கிறார். தொண்டினால் அவரது உள்ளத்தில் ஏற்பட்ட மகத்தான மறு மலர்ச்சி, மலேயாவிலுள்ள நோயாளிகளுக்குத் தொண்டு செய்ததன் மூலம் அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி மற்றும் ஆன்மீக விழிப்புணர்வு ஆகியவை அவர் ஸ்வர்க்காசிரமத்தில் இருந்து தவம் செய்த போதும் தொடர்ந்து இத்தகைய தொண்டு செய்ய ஊக்குவித்தன; அடுத்து வந்த ஆண்டுகளில் இந்தத் தொண்டுக்கு அவர் ஒரு இயக்க வடிவம் கொடுக்கத் தூண்டின.

## 9. புனிதச் சொல்

இப்போது இருப்பது, முன்பு இருந்தது, நாளை இருக்கப் போவது அனைத்தும் 'ஓம்' என்ற ஒரு எழுத்தில் தோன்றியவை, அல்லது அதனை தன்னகத்தே கொண்டிருப்பவை என்று மாண்டூக்ய உபநிடதத்தின் ஆரம்பத்தில் அறிவிக்கப்படுகிறது. பைபிளும் இதையே சொல்லுகிறது: "முதலில் ஒரு சொல் இருந்தது. அந்தச் சொல் இறைவ னுடன் இருந்தது. அந்தச் சொல்லே இறைவன்". பிரம்மத்தை மூன்று பெயர்களில் குறிப்பிடுகிறோம்; அவற்றுள் ஒன்று பிரணவ மந்திரம் என்று கீதையில்

பகவான் குறிப்பிடுகிறார். ஆகவேதான், பிராமணர்கள் சமயச் சடங்குகளின் ஆரம்பத்திலும் ஓம் என்னும் பிரணவ மந்திரத்தை ஜபம் செய்கின்றனர். ஹிந்துவுக்கு இந்த பிரணவ மந்திரம் மிகப் புனிதமானது. அவன் நான்காவது ஆசிரமத்தை — சந்நியாச ஆசிரமத்தை — அடைந்ததும் ஒவ்வொரு மூச்சிலும் பிரணவ மந்திரத்தை ஜபம் செய்கிறான். இது அவனுக்கு முக்தி அளிக்கிறது. 1950-ல் குருதேவர் பாரதத்திலும், இலங்கையிலும் சுற்றுப் பயணம் செய்தபோது ஓம், ஆமென், அமின் ஆகிய மூன்றும் ஒன்றுதான் என்று குறிப்பிட்டிருக்கிறார். ஆக பிரணவ மந்திரம் ஹிந்து, கிறிஸ்தவர், முஸ்லீம் ஆகிய மூவருக்கும் புனிதமான ஒரு சொல்.

அதுபோல 'ராம்' என்ற சொல், ஒரு பக்தனுக்கு முக்கியமானது. இது தாரக மந்திரம். உலக வாழ்க்கை எனும் சமுத்திரத்தினைத் தாண்டிச் செல்ல இந்த மந்திரம் உதவுகிறது. ஒரு வேதாந்திக்கு 'ஓம்' என்ற சொல் எவ்வளவு முக்கியமானதோ அந்த அளவுக்கு ராம் என்ற சொல் ஒரு பக்தனுக்கு முக்கியமானது.

மற்றொரு புனிதச் சொல் இருக்கிறது. குருதேவர் இருபத்து நான்கு மணி நேரமும் இதை ஜபம் செய்து கொண்டே இருந்தார். இது வேதாந்தததின் சாரம் என அவர் நினைத்தார். இந்தச் சொல்லை அவர் தனது ரத்தத்தால் தனது இதயத்தில் எழுதி வைத்திருக்கிறார். அவரது இதயம் ஒவ்வொரு முறை துடிக்கும்போதும், ஒவ்வொரு முறையும் அவர் சுவாசிக்கும்போதும் அவர் இந்த மந்திரத்தை நினைவுபடுத்திக் கொள்ளுகிறார். 'கொடு' — இதுதான் அந்த மந்திரம். குருதேவருக்கு இறைவன் அருளிய கை பெரியது.

அவர் கைப் பிடியளவு கொடுக்கும் பிரசாதத்தை ஒருவர் வயிறு நிறைய உண்ணலாம். இறைவன் அருளியதை அவர் நன்கு பயன்படுத்துகிறார். இயற்கையாகவே அவர் தாராள மனம் உடைய வராகத் திகழ்ந்து வந்தார்.

தன்னிடம் உள்ளதைப் பிறருக்குக் கொடுப்பது என்பது குருதேவரின் பள்ளிப் பருவம் முதல் தொடர்ந்து அவரிடம் இருந்து வந்த பழக்கம் ஆகும். ஒருவரது உடல் ஆரோக்கியம் அவரது மனம் அல்லது இதயம் எவ்வாறு உள்ளது என்பதைப் பொறுத்து அமைகிறது. தாராள மனம் உடையவர் நல்ல ஆரோக்கியம் உடைய வராக இருப்பார். சமநிலைப்பட்ட மனம் உடையவர் அளவான உடல் அமைப்புக்கள் உடையவராக இருப்பார். குருதேவருக்கு குறுகிய மனம் என்றால் என்னவென்று தெரியாது. அவரது உடல் நலம் குன்றியதில்லை; நோய் எதுவும் அவரை வருத்தியதில்லை; அவர் கடுமையான தவ வாழ்க் கையினை மேற்கொண்டிருந்தபோது பக்கவாதம் போன்ற நோய்கள் அவரைப் பிடித்திருந்தாலும் அவை அவரை வருத்தவில்லை. அவை தமது இயலாமையை ஒப்புக்கொண்டு குருதேவருடன் ஒப்பந்தம் செய்துகொண்டன. குருதேவர் நோயை விரட்டக்கூடாது; நோய்களும் அவரை வருத்தமாட்டா. இதுதான் ஒப்பந்தம் :

அவரை தரிசித்து சத்சங்கத்தில் ஒரு சில நிமிடங்கள் செலவிடும் வாய்ப்புக் கிடைத்தவர்கள் அவரது தாராளமனத்தைப் புரிந்து கொண்டிருக்க முடியும். சாதாரணமாக அவரை தரிசிக்க வந்தி ருப்பவர்கள் அவரது கொடை உள்ளத்தைக் கண்டு அதிசயப்படுவர். ஆசிரமம், தெய்வீக வாழ்க்கைச் சங்கம் எல்லாம் அவரது கவனிப்பில்

உள்ளன என்பதை அறிந்து கொள்ளுபவர்கள் மேலும் ஆச்சரியப்படுவர். ஸ்தாபனங்கள், இயக்கங்கள் நிறுவி அதனை நடத்தி வருபவர்கள் பேராசை உடையவர்களாக இருப்பர் என்பது பொதுவான கருத்து. ஆனால் குருதேவரிடம் இத்தகைய பேராசை எதுவும் இருந்ததில்லை.

குருதேவரின் குழந்தைப் பருவத்தில் அவரிடம் இந்த அருங்குணம் எவ்வாறு அமைந்திருந்தது என்பது முன்பே குறிப்பிடப்பட்டது. முன்பு விளையாட்டாகச் செய்ததை பிற்காலத்தில் சிரத்தையுடன் தொடர்ந்து செய்கிறார்; அவ்வளவுதான். அவர் மாணவராக இருந்தபோது இந்தப் பண்பால் பல நண்பர்களின் இதயத்தை வென்றார். குருதேவர் அவர்களுக்கு ஏராளமாகப் பொருளும், அறிவும் தந்திருக்கிறார். ஏற்கனவே குறிப்பிட்டது போல இளம் டாக்டராகவும், பத்திரிக்கையாசிரியராகவும் விளங்கிய அவர் மருந்துகளையும், மருத்துவ ஆலோசனைகளையும், தனது சொந்த பத்திரிக்கையையும் இலவசமாகக் கொடுத்து வந்தார்.

பெரிய கடலின் கரைக்கு நாம் வந்திருக்கிறோம். அந்தக் கடல் அலைகள் 'கொடு' என்ற சொல்லை ஜபம் செய்கின்றன. இந்த எண்ணமே நம்மை உற்சாகப்படுத்துகிறது.

அவரிடமிருந்து மருந்து அல்லது ஏதேனும் ஒரு பொருளை மக்கள் விரும்பினர். ஆனால் அவர் தன்னையே கொடுத்தார். வளர்ந்து வரும் ஒரு இளம் டாக்டர் அல்லது இக்காலத்து இளைஞர் இவ்வாறு செயல்படுவது அசாதாரணமான செயலாகும். தெருவில் ஒரு பிச்சைக்காரன் போவதைக் காணும் அவரது மனம் கருணையால் கரைந்துவிடும். அவர் தனது வருமானத்தை தானம் செய்தே

கரைத்தார். அவர் பணத்தை பிறருக்குக் கொடுக்கக் கொடுக்க இறைவனும் அவருக்கு பணத்தைக் கொடுத்து வந்தான். இவ்வாறு நிகழும்போது மேலும் மேலும் தொண்டு செய்ய இறைவன் தனக்கு வாய்ப்பளிப்பதாக அவர் எண்ணிக்கொள்ளுவார். அவரது புகழ் மலேயா முழுவதும் பரவியது. டாக்டர் குப்புசாமி இதை வேறு ஒரு கோணத்தில் பார்த்தார். தனது புகழ், பரவுவதன் மூலம் தான் தொண்டு செய்ய ஒரு பரந்த பிரதேசத்தை இறைவன் தனக்குச் சுட்டிக்காட்டுகிறார் என்று அவர் கருதினார். தன் அருகில் வந்தவர்களுக்கும் தனக்குத் தொண்டு செய்தவர்களுக்கும் அவர் தனது சக்தியையும் பணத்தையும் செலவிட்டார். மலேயாவில் உள்ள அனைவரின் உதடுகளும் டாக்டரின் புகழ் பாடின. டாக்டரின் வீட்டுக் கதவுகளும் ஒவ்வொருவருக்காகவும், திறந்தே யிருந்தது. மலேயாவுக்கு வந்த யாரேனும் ஒருவர் செல்லுமிடம் அறியாது திகைத்து நின்றாலோ அல்லது வேறு ஏதேனும் உதவி நாடினாலோ அவரை மக்கள் ஜோகூர்பாருவில் உள்ள டாக்டரிடம் அனுப்பிவிடுவர். டாக்டரின் வாசலுக்கு எதிர் பார்ப்புடன் வந்த எவரும் ஏமாற்றத்துடன் திரும்பியதில்லை.

## ஏழைப் பங்காளன்

ஒரு பிச்சைக்காரர் தெருவில் நின்று கொண்டு பின்வருமாறு அலறுகிறார்; ''ஐயா, புண்ணிய வானே! எனக்குப் பசிக்கிறது. கடந்த இரண்டு நாட்களாக சாப்பிடவில்லை. நான் ஆரோக் கியத்தை இழந்து சாவை நெருங்கிக் கொண்டிருக் கிறேன். நான் இப்படி தொடர்ந்து துன்பப் படுமாறு வைத்து இறைவன் கொடுமை செய்து விட்டார்'' —இப்படிச் சொல்லிக் கொண்டு அவர்

தலையில் அடித்துக் கொள்ளப்போனுர். பிச்சைக் காரர் டாக்டரிடம் இதனைச் சொல்லவில்லை. அவர் பொதுவாகச் சொன்னுர். ஆனல் இதனைக் கேட்ட டாக்டர் அவரை நோக்கிச் சென்றுர். ''சகோதரரே, என்னுடன் வருக'' என்று சொல்லி அவரை தனது வீட்டுக்கு அழைத்துக் கொண்டு சென்றுர். அங்கு அந்தப் பிச்சைக்காரரை சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொள்ளச் சொன்னுர். நரசிம்ம ஐயரை அழைத்து அவருக்கு ஒரு டம்ளர் தண்ணீர் கொடுக்கச் சொன்னுர். நரசிம்ம ஐயர் தண்ணீர் கொடுத்துக் கொண்டிருக்கும்போது டாக்டர் சமையலறைக்குள் சென்று பார்த்தார். உணவு தயாராக இருந்தது. டாக்டருக்கும் ஒரு யோசனை தோன்றியது. அவர் வெளியே ஓடி வந்தார். ''நரசிம்ம தீக்ஷிதர்! சாதம் மற்றும் பதார்த்தங்களில் பாதியை எடுத்துக் கொண்டு வாருங்கள். நல்ல இலையை எடுத்து ஒரு தட்டில் போட்டு அதில் சாதத்தையும், பதார்த்தங்களையும் வைத்து உடனே எடுத்து வாருங்கள், சீக்கிரம்''; என்று கூறினுர். நரசிம்ம தீக்ஷிதரும் உள்ளே சென்று உணவு கொண்டு வந்தார். பெரியவரே, இந்த உணவை உட்கொண்டு களைப்பாறுங்கள், என்று குருதேவர் பிச்சைக்காரரிடம் கூறினுர். பிச்சைக்காரருக்கு தன் கண்களையே நம்ப முடிய வில்லை. கண்ணைக் கசக்கிப் பார்க்கிறுர். தான் காண்பது கனவா, நனவா என்று எண்ணிப் பார்க்கிறுர். ''சாப்பிடுங்கள், ஏன் தயங்குகிறீர்கள்?'' என்று டாக்டர் பிச்சைக்காரரைப் பார்த்துக் கேட்கிறுர். நன்றிப் பெருக்குடன் அந்த பிச்சைக் காரர் அந்த உணவை உட்கொள்ளத் தொடங்கு கிறுர். அவரது கண்களில் நீர் பெருக்கெடுத்து ஓடிவருகிறது. அதனைத் தடுக்க முயற்சித்துப் பார்க் கிறுர் முடியவில்லை. உணவு உட்கொண்டுவிட்டு பிச்சைக்காரர் கை கழுவச் செல்கிறுர். டாக்டர்

அவருக்கு அருகில் நின்று தண்ணீர் ஊற்றுகிறார். கணப்பொழுதில் அந்தப் பிச்சைக்காரர் டாக்டரின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி அவர் பாதங்களை இரு கரங்களால் இறுகப் பற்றிக்கொண்டார். டாக்டர் அன்புடன் அவரைத் தாங்கிப் பிடித்து உயர்த்தி நிறுத்தினார். அவரை சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொல்லி, பிறகு இருநாட்கள் செலவுக்குத் தேவைப்படும் தொகையை அவரிடம் கொடுத்து அனுப்பிவைத்தார். டாக்டர் செய்வதெல்லாம் நரசிம்மய்யருக்கு விளங்கவில்லை. திகைத்து நின்ற அவரைப் பார்த்து "வாருங்கள் இப்போது நாம் பசியாறலாம்" என்று டாக்டர் அழைத்தார். பாவம், நரசிம்மய்யர் என்ன செய்வார்? அவர் இரண்டு பேருக்குத்தான் உணவு தயாரித்து வைத்திருந்தார். அதில் பாதி பிச்சைக்காரருக்குப் பரிமாறப்பட்டுவிட்டது. "நீங்கள் சாப்பிடுங்கள். நான் மீண்டும் உணவு தயார் செய்து சாப்பிடுகிறேன்" என்றார் நரசிம்மய்யர். "வேண்டாம், வேண்டாம். இருப்பதை நாமிருவரும் பகிர்ந்து உண்போம். வழக்கமாகச் சாப்பிடுவதில் பாதியளவுக்கு ஒரு நாள் சாப்பிடுவதில் என்ன ஆகிவிடப் போகிறது? பசி அனைவரிடத்திலும் ஒரே மாதிரியாகவே உள்ளது. பிச்சைக்காரருக்கு உணவு கொடுத்ததன்மூலம் நாம் பசியாறியிருக்கிறோம். அவர் பசியாறினால், நாம் பசியாறியதற்குச் சமம். இரண்டும் ஒன்று தான்" என்று சொல்லிக்கொண்டே உணவருந்த டாக்டர் உட்கார்ந்து விட்டார்.

இவ்வாறு குருதேவர், கீதையின் மகத்தான போதனையை மனித குலத்துக்கு செயலளவில் உணர்த்தினார்.

யக்ஞசிஷ்டாசின: ஸந்தோ முச்யந்தே
ஸர்வகில்பிஷை: 1
புஞ்சதே தே த்வகம் பாபா யே
பசந்த்யாத்மகாரணாத் 11

(யாகத்தில் மிஞ்சியதை உண்ணும் நல்லோர் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகின்றனர். ஆனால் தங்கள் பொருட்டே சமைக்கும் பாபிகள் பாபத்தை உண்கின்றனர்).

இதுபோன்ற மற்றொரு சம்பவத்தையும் நரசிம்மய்யர் நினைவு கூர்ந்தார்.

ஒரு நாள் டாக்டர் வீட்டின் முன் ஒரு பிச்சைக்காரர் வந்தார். உணவு உண்ண காசு கேட்டார். டாக்டர் நரசிம்மய்யரை அழைத்து உணவு தயாராக உள்ளதா என்று கேட்டார். உணவு தயாராக இன்னும் சிறிது நேரமாகும் என நரசிம்மய்யர் தெரிவித்தார். டாக்டர் பிச்சைக்காரரைப் பார்த்து, ''ஒரு வேளை சாப்பாட்டுக்கு எவ்வளவு பணம் தேவைப்படும்?'' என்று கேட்டார். ''முப்பது செண்ட் தேவைப்படும்'' என்றார் பிச்சைக்காரர். ''அப்படியா'' என்று சொல்லிக் கொண்டே தன் மேல்சட்டைப் பையில் கையை நுழைத்து ஐம்பது செண்ட் எடுத்து பிச்சைக்காரரிடம் கொடுத்தார். ''இதை வாங்கிக் கொள்ளுங்கள். நன்றாக சாப்பிடுங்கள். திருப்திதானே'' என்றும் சொன்னார். பிச்சைக்காரர் அதிசயத்தில் ஆழ்ந்து போனார். அவரது வாழ்நாளில் அவர் இப்படியொரு மனிதரைக் கண்டதில்லை. அவர் கண்டதெல்லாம் உதையும், ஏச்சும்தான். அவருக்கு நிறையக் காசுகொடுத்து ''போதுமா?'' என்றும் கேட்கிறார். ஆனால் பிச்சைக்காரர் பதில் பேசவில்லை. அவருக்கு இந்த

உலக சிந்தனையே இல்லை. அவர் பேசாமல் நிற்பதைப் பார்த்த டாக்டர் மேலும் ஐம்பது செண்ட் கொடுத்து, ''இதையும் வைத்துக் கொள்ளுங்கள். உணவுக்குப் பணம் பற்றாக்குறை யாக இருந்தால் மீண்டும் என்னிடம் வாருங்கள். தருகின்றேன்'' என்று கூறினார். தனது கையில் மேலும் ஐம்பது செண்ட் வந்து சேர்ந்ததும் பிச்சைக்காரருக்கு உலக நினைவு வந்தது. அவர் டாக்டரைப்பார்த்து, ''நீங்கள் தர்மத்தின் திரு வுருவம் நீங்கள் பல்லாண்டுகள் சுகமாக வாழ வேண்டும்'' என்று மனதார வாழ்த்தினார். பிறகு அங்கிருந்து புறப்பட்டார்.

டாக்டரின் சட்டைப் பையில் எப்போதும் சில்லறை நாணயங்கள் இருக்கும். டாக்டர் தனது வீட்டின் முன்பகுதியில் உலவும் போதும், காலை யில் சாலையில் நடக்கும்போதும் அவரது கை சட்டைப் பைக்குள் செல்லும். அங்கு நாணயங்கள் இருப்பதை உறுதி செய்து கொள்ளும். ஒருநாள் காலையில் வழக்கமாக செய்ய வேண்டிய தான தர்மத்தைச் செய்யாவிட்டால் அவர் வருத்தப் படுவார்.

## சமையல்காரருடன் நட்புறவு

பிச்சைக்காரரிடம் அசாதாரணமாக அன்பு செலுத்தும் டாக்டர், தனது சமையல்காரரிடம் எப்படி அன்பு செலுத்துவார் என்பதை நம்மால் கற்பனை செய்து பார்க்க முடியும். டாக்டரைவிட தான் தாழ்ந்திருப்பதாக சமையல்காரருக்கு எண்ணம்வராத அளவுக்கு டாக்டர் அவரிடம் அன்புடனும் பண்புடனும் நடந்து கொண்டார். சமையல் வேலை முடிந்ததும் டாக்டர் சமையல் அறைக்குள் வருவார். உணவருந்தும் மேஜையை

விரித்துப்போடச் சொல்லுவார். நரசிம்மய்யர் வேலைக்கு சேர்ந்த முதல் நாள் டாக்டர் உணவருந்த வந்தார். நரசிம்மய்யர் பொதுவாக சமையல் காரருக்குரிய பணிவுடனும் மரியாதையுடனும் டாக்டர் அமருவதற்கு தரையில் பலகை ஒன்றைப் போட்டு அதன் முன்பு ஒரு வெள்ளித் தட்டை வைத்தார். சமையல்காரர் உணவு பரிமாறத் தயாராக நின்றார். ஆனால் எஜமானருக்கு வேறொரு எண்ணம் இருந்தது. ''நீங்களும் உட்காருங்கள். இருவரும் சேர்ந்து சாப்பிடலாம்'' என்று அவர் கூறினார். எஜமானுடன் அமர்ந்து உணவு உட்கொள்ளுவது என்பது நரசிம்மய்யரைப் பொறுத்தவரையில் புதுமையான விஷயம்''. எனது இடது பக்கம் அமருங்கள். உணவு வகைகள் அனைத்தையும் நடுவில் வைத்துவிடுங்கள். ''நமக்கு நாமே பரிமாறிக்கொண்டு இருவரும் உணவு உட்கொள்ளுவோம்''.

அவர்கள், இவ்வாறு பரிமாறிக் கொள்ளும்போது நெய் பரிமாறப்பட்டது. கிண்ணத்திலிருந்த நெய்யில் சிறிதளவு டாக்டர் எடுத்துக்கொண்டார். மீதமிருந்த அவ்வளவு நெய்யையும் நரசிம்மய்யர் தட்டில் ஊற்றிவிட்டார். அவர் ஆச்சரியப் பட்டார். தயிர் பரிமாறும்போதும் டாக்டர் இவ்வாறே செய்தார். டாக்டர் தனது இடதுபுறம் அமருமாறு தன்னைப் பணித்ததின் பொருளை இப் போதுதான் நரசிம்மய்யர் புரிந்து கொண்டார். சமையல்காரர் இடதுபுறம் அமர்ந்தால் தான் பரிமாறுவதற்கு வசதியாக இருக்கும் என்பதற் காகத்தான் டாக்டர் அவ்வாறு அமரச் செய்திருக்கிறார்.

''விருந்தினர் உனது கடவுளாக இருக்கட்டும்'' என்று தைத்திரீய உபநிடதத்தில் கூறப்பட்டுள்ளது.

அந்தக் காலத்தில் விருந்தினரை வரவேற்று சிறப்பாக உபசரித்து கௌரவித்து வந்திருக்கிறோம். இதனால், நம் நாட்டுக்குப் பெருமை. ஒரு மனிதன், மற்றொரு மனிதனின் பசியைப் போக்காமல், உணவருந்த மாட்டான் என்று சொல்லப்படுகிறது. விருந்தினர் அவமதிக்கப்படுவதை சுருதிகள் கடுமையாகக் கண்டித்திருக்கின்றன. ''நசிகேதன் என்னும் இளைஞன் தனது தந்தையின் ஆணைப்படி யமனுலகம் செல்லுகிறான். அங்கு மூன்று நாட்கள் தங்கியிருக்கிறான். அவனை யாரும் கவனிக்கவில்லை; உபசரிக்கவில்லை. மூன்றாம் நாள் இறுதியில் யமன் இதுபற்றி அறிந்தபோது மிகவும் வேதனை அடைந்தான். ''அதிதியாக வரும் ஒரு பிராமணர், ஒரு இல்லத்துக்குள் நுழையும்போது தீப்பிழம்பாக வருகிறார். அறியாமையில் உழலும் ஒருவன் இல்லத்தில் அதிதியாக வந்துள்ள பிராமணர் உணவு எதுவும் உட்கொள்ளாமல் தங்கியிருந்தால், நம்பிக்கை, நல்லவர்களுடனான தொடர்பு, நட்புறவு, தியாகம், அன்பளிப்புகள், புதல்வர்கள், கால்நடைகள் ஆகிய அனைத்தையும் இழந்து அந்த வீட்டுக்குரியவன் அல்லற்படுவான்'' என்று கடோபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது. விருந்தினரை வணங்கி உபசரிப்பதுபற்றி புராணங்களிலும் மகாபாரதத்திலும் விரிவாக விளக்கப் பட்டிருக்கிறது.

குருதேவர் பிச்சைக்காரர்களை எவ்வளவு கருணையுடன் உபசரித்து வந்தார் என்பதை ஏற்கனவே அறிந்து கொண்டோம். அவரது மலேயா வாழ்க்கையின் துவக்க காலத்தில் அவர் புகழ்பெற்றதற்கு முக்கியமான காரணம், அவரைச் சுற்றி ஏராளமான எண்ணிக்கையில் நண்பர்கள் உருவானதுதான். ''எல்லாம் இறைவன் மயம்'' (வாசுதேவ: சர்வம்) என்ற கருத்து குருதேவர்

உள்ளத்தில் உறுதியாக இடம் பெற்றிருந்தது. குருதேவரின் அன்பு இதயத்தில் ஒவ்வொருவருக்கும் இடம் இருந்தது. இதனுல் டாக்டருக்கு இருவகை யில் நன்மை ஏற்பட்டது. ஒன்று, இந்த நண்பர் கள் அடிக்கடி டாக்டரின் விருந்தினர்களாக விஜயம் செய்வர். இரண்டாவதாக இவர்கள் மற்ற நண்பர்களை டாக்டருக்கு அறிமுகம் செய்து வைத் தனர். கலைநோக்குடனும் விஞ்ஞான அறிவுடனும் குருதேவர் விருந்தினரை உபசரித்து வந்தார். டாக்டர் இல்லத்துக்கு விருந்தினர் வந்தாலும் பிறர் இல்லத்துக்கு டாக்டர் விருந்தாளியாகச் சென்று லும் சிறப்பான விருந்துக்கு ஏற்பாடு செய்யுமாறு டாக்டர் சொல்லிவிடுவார். இதனுல் இரண்டு நாட்களுக்கு ஒருமுறை விருந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது என்று நரசிம்மய்யர் குறிப்பிட் டார். விருந்தினர் தேநீர் மட்டும் அருந்துவதற் காக வந்திருந்தாலும் டாக்டர் மற்ற தின்பண்டங் களையும் அவருக்கு நிறையத் தருவார்.

தன்னிடம் இருப்பதைப் பிறருடன் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பதில் டாக்டர் பேரார்வம் கொண்டு வாழ்ந்து வந்தார். நரசிம்மய்யர் பின் வரும் சம்பவத்தைக் குறிப்பிட்டார்.

ஒரு நாள் நரசிம்மய்யர் வாழைக்காய் கறி தயாரித்துக் கொண்டிருந்தார். அப்போது குருதேவர் உள்ளே நுழைந்தார். வாழைக்காய் கறி அடுப்பில் இருக்கும்போதே சில துண்டுகளை எடுத்து குருதேவர் ருசி பார்த்தார். அதனைத் தின்று கொண்டே அவர் பின்வருமாறு கூறினுர், "நரசிம்ம தீக்ஷிதர் பணக்காரர்களுக்கு மகிழ்ச்சி என்றுல் என்னவென்று தெரியுமா? மன்னர்கள் எந்த அளவுக்கு மகிழ்ச்சியை அனுபவிக்கிறுர்கள்? இதனைப் பாருங்கள். இதற்கு இணையாக உலகில்

வேறு எதுவும் உள்ளதா? வாழைக்காய் கறி மிகச் சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டிருப்பதாக குருதேவர் உணர்ந்தார். கையில் தட்டு மற்றும் கரண்டியை வைத்துக்கொண்டு அவர் தொலை பேசி (டெலிபோன்)யை நோக்கி ஓடினார். அவரது நண்பர் ஒருவருக்கு வாழைக்காய் கறி என்றால் மிகவும் பிடிக்கும். அவருடன் தொலைபேசியில் பேசுவதற்காகவே குருதேவர் தொலைபேசி அருகில் சென்றார். அவருடன் பேசினார்: ''சுப்பிரமணிய ஐயர்! நான் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்று உங்களுக்குத் தெரியுமா? அருமையாகத் தயாரிக்கப் பட்ட வாழைக்காய் கறியைத் தின்றுகொண்டிருக் கிறேன்...... ஆமாம், ஆமாம்.... உங்களுக்கு உடனே அனுப்பிவைக்கிறேன். அதை அடுப்பி லிருந்து இறக்கி வைத்தாயிற்று.... இல்லை இல்லை, அடுப்பிலிருந்து இறக்குவதற்கு முன்பாகவே நான் தின்றுவிட்டேன், எனது சமையல்காரர் நரசிம்மய்யர் ஆள் வாட்டசாட்டமாக இருப்பார். இடுப்பில் துண்டு அணிந்திருப்பார். அவர் உங்கள் வீட்டுக்கு வாழைக்காய் கறியுடன் வருவார். அவருக்கு உங்கள் வீடு தெரியாது. ஆகவே அவருக் காக வெளியே காத்துக் கொண்டிருங்கள்''.

அவர் தொலைபேசியில் பேசி முடித்ததும் நரசிம்ம தீக்ஷிதர் டாக்டரை உணவருந்த அழைத்தார். டாக்டர் நரசிம்ம தீக்ஷிதரை நோக்கி, ''முதலில் தட்டு நிறைய வாழைக்காய் கறியை எடுத்துக் கொண்டுபோய் சுப்பிரமணிய ஐயரிடம் கொடுத்துவிட்டு வாருங்கள். உங்களுக்கு அவர் வீடு தெரியுமா? தெரியாதா? தெருவில் யாரையாவது கேளுங்கள். அடையாளம் காட்டு வார்கள். அவருக்கு முதலில் கொடுத்துவிட்டு வாருங்கள். பிறகு நாம் சாப்பிடுவோம்'' என்று

கூறினார். ''கொடுத்துவிட்டு எடுத்துக்கொள்'' (Give and take) என்ற ஆங்கிலப் பழமொழிக்கு குருதேவர் புதிய விளக்கம் தந்தார்; நம்மிடம் உள்ளதை பகிர்ந்து ஒரு பகுதியை பிறருக்குக் கொடுக்க வேண்டும். அதன் பிறகு மீதமுள்ளதை நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

1955 மே 21-ந் தேதி மலேயாவில் குருதேவர் இருந்தபோது அவரது நண்பராகப் பழகிய திரு. ஆறுமுகத்திடமிருந்து எங்களுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் அவர் குருதேவருக்குப் பின் வருமாறு எழுதியிருந்தார்; ''தங்களின் உற்சாகம், அன்பு, உதவி, ஊக்கமூட்டும் சொற்கள் ஆகியவை என் நினைவுக்கு வருகின்றன. நான் மாலை நேரங்களில் வங்கியிலிருந்து திரும்பும்போது தங்கள் இல்லத் துக்கு வருவதையும் தாங்கள் என்னை அன்புடன் உபசரித்து கேக் கொடுத்து வந்ததையும்கூட நான் நினைத்துப் பார்க்கிறேன்''.

## திக்கற்றவர்களுக்கு அடைக்கலம் தந்த உத்தமர்

ஜோஹூர்பாருவில் டாக்டர் குப்புசாமி வாழ்ந்து வந்த இல்லம், மலேயாவில் மூதன் முறையாக வந்து இறங்கும் அன்பர்களுக்குத் தேவையான உதவிகளை அளிக்கும் இல்லமாக விளங்கியது. குரு தேவரின் தலைசிறந்த பண்புகளில் இதுவும் ஒன்று. வாழ்க்கையில் தான் கற்றுக்கொண்ட பாடங்களை குருதேவர் ஒருபோதும் மறந்ததில்லை. மலேயாவுக்கு முதன்முதலாக வந்தபோது அவர் அனுபவித்த அல்லல்களை அவர் ஒருபோதும் மறக்கவில்லை. தான் கஷ்டப்பட்டதுபோல மற்றவர்களும் கஷ்டப்படக் கூடாது என்று கருதியே குருதேவர் இவ்வாறு பிறருக்கு உதவி புரிந்து வந்தார். வெளிநாடு ஒன்றில்

முதன்முதலாகப் போய் எவ்வித அறிமுகமும் இன்றி இறங்குகிற ஒருவரின் அனுபவம் எப்படிப்பட்டதாக இருக்கும் என்பது குருதேவருக்கு நன்கு தெரியும். ஆகவேதான் மலேயாவுக்கு முதன்முறையாக வருகிறவர்கள் தங்குவதற்கு இடம் இன்றி கஷ்டப் பட்டால் அவர்களுக்குத் தன்னாலான உதவிகளைச் செய்தார். நரசிம்ம ஐயர் பின்வரும் சம்பவத்தைக் கூறினார்: 24 வயதுடைய சுப்ரமணியன் என்ற இளைஞர் ஒருநாள் காலையில் டாக்டர் வீட்டுக்கு வந்தார். அவர் மெட்ரிகுலேஷன் வரை படித்திருந் தார். ஒரு நல்ல வேலை தேடி அவர் மலேயா வந்திருந்தார். அவர் சிங்கப்பூருக்குச் சென்று தென்னிந்திய பிரமுகர் ஒருவரைச் சந்தித்தார். அந்தப் பிரமுகர் இந்த இளைஞரிடம், ''நீங்கள் ஜோஹூர்பாரு சென்று டாக்டர் குப்புசாமியைப் பாருங்கள். அவர் உங்களுக்கு வேண்டியதைச் செய்வார். இந்தப் பகுதியிலேயே அன்பும், பண்பும் கொண்டு சிறந்து விளங்கும் அன்பர் அவர். அவர் உங்களுக்கு உதவி செய்ய முடியாவிட்டால் இந்தப் பகுதியில் வேறு யாரும் உங்களுக்கு உதவ முடியாது'' என்று கூறினார். இளைஞர் உள்ளத்தில் சந்தேகமும், குழப்பங்களும் எழுந்தன. 'பெரிய' மனிதர்கள் எவ்வாறு உதவி செய்வார்கள் என்பது குறித்து இந்த இளைஞர் நன்கு தெரிந்து கொண் டிருந்தார். ஆகவே, டாக்டர் குப்புசாமி இதற்கு விதிவிலக்காக இருப்பார் என அவர் நினைக்கவில்லை. ஆயினும், வேறு எதுவும் செய்ய முடியாத நிலையில் அவர் ஜோஹூர்பாருக்குச் சென்றார். அவர் டாக்டர் வீட்டுக்குள் நுழையும்போது இருவிதமான உணர்வுகள் அவரது உள்ளத்தில் இடம் பெற்றிருந்தன. பழைய அனுபவம், அவரது உள்ளத்தில் அவநம்பிக்கையைத் தோற்றுவித்தது. ஆனால் இந்த டாக்டர் உதவி செய்வார் என்ற நம்பிக்கையும் உற்சாகமும் அவரது உள்ளத்தில்

இருந்தது. அவர் டாக்டர் இல்லம் சென்றபோது டாக்டர் உலாவச் (walk) சென்றிருந்தார். நரசிம்ம ஐயரும் உடன் சென்றிருந்தார். அவர்கள் இருவரும் திரும்பி வரும்போது இரவுப் பொழுதாகி விட்டது. டாக்டர் இல்லம் வந்தவுடன் அந்த இளைஞரைப் பார்த்துப் பேசினார். தான் ஏதேனும் செய்ய முடியுமா என்று வினவினார். சுப்ரமணியம் தனது வருகையின் நோக்கத்தை விளக்கி, தனக்கு ஒரு வேலைதேடித்தரும்படி கூறினார். டாக்டர் அளித்த பதில் அந்த இளைஞரை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது; ''நிச்சயமாக உங்களுக்கு வேலை வாங்கித் தருகிறேன். இப்போதைக்கு நீங்கள் என்னுடனேயே தங்கலாம். உங்கள் வீட்டில் இருப்பதுபோன்ற உணர்வுடன் இங்கே தங்கியிருக்க லாம். இது உங்கள் வீடு. வாருங்கள், உணவு உட்கொள்ளலாம்'' என்று டாக்டர் அன்புடன் கூறினார். அந்த இளைஞர் எந்த அளவுக்கு மகிழ்ச்சி அடைந்திருப்பார் என்று நீங்களே எண்ணிப் பாருங்கள்.

அந்த இளைஞர் டாக்டருடன் தங்கினார். டாக்டர் அந்த இளைஞரை தனது சகோதரர் போலக் கருதினார். அன்புடன் கவனித்துக்கொண் டார். ஒரு மாதம் கடந்து விட்டது. அதன்பிறகு டாக்டர், அந்த இளைருக்கு வேலை தேடும் முயற்சியில் இறங்கினார். இதில் ஒரு கருத்து உள்ளது. அந்த இளைஞர் வந்தவுடனேயே டாக்டர் வேலை தேடிக் கொடுத்திருந்தால் 'தொல்லைவிட்டது என்று டாக்டர் சீக்கிரமே வேலைதேடிக் கொடுத்து விட்டார்' என்று அந்த இளைஞர் எண்ணியிருக்கக் கூடும் அல்லவா? ரயில் போக்குவரத்துத் துறையில் பணியாற்றிக் கொண்டிருந்த தனது நண்பர் ஒருவரிடம் டாக்டர் அந்த இளைஞர் பற்றி கூறினார். அந்த நண்பரும் ஒரு சில நாட்களில்

வேலை தேடித் தந்தார். அந்த இளைஞரும் வேலையில் சேர்ந்தார். மாதம் 40 டாலர் ஊதியம். அந்த இளைஞர் தன்னை வேறு எங்காவது தங்குமாறு டாக்டர் சொல்லி விடுவாரோ என்று எண்ணினார். உணவருந்தும் வேளையில் அந்த இளைஞரிடம் டாக்டரே இதுபற்றிப் பேசினார். அந்த இளைஞர் வேறு எங்கேனும் தங்குவதுபற்றி சிந்திக்கத் தேவையில்லையென்றும், தனது இல்லத்திலேயே தொடர்ந்து தங்கலாம் என்றும் கூறினார். சுப்பிரமணியன் அங்கு ஒரு மாதம் தங்கினார். முதல் மாதம் சம்பளம் வாங்கியதும் அவர் தனது சொந்தக் கால்களில் நிற்க விரும்பினார். அவரது மன நிலையை அறிந்த டாக்டரும் அதற்கு சம்மதித்தார். அடுத்த நாளே அந்த இளைஞர் தங்குவதற்கு ஒரு நல்ல வீடு அமர்த்திக் கொடுத்தார். அந்த இளைஞரின் உடைமைகளையெல்லாம் புது வீட்டிற்கு எடுத்துச்செல்ல ஏற்பாடுகள் செய்தார். நரசிம்ம ஐயரை அழைத்து அந்த இளைஞர் சமையல் செய்வதற்குத் தேவையான பாத்திரங்களையும், ஒரு மாதத்திற்குத் தேவையான உணவுப் பொருட்களையும் கொடுத்தனுப்புமாறு கூறினார். அந்த இளைஞருக்குத் தேவைப்படும் பொருட்களை கடனாகக் கொடுக்கும்படி ஒரு கடைக்காரரிடம் தானே நேரில் கூறியிருப்பதை அந்த இளைஞரிடம் டாக்டர் தெரிவித்தார். மேலும் ஏதேனும் உதவி தேவைப்பட்டால் தனது இல்லத்திற்கு தயங்காமல் வருமாறு அந்த இளைஞரிடம் டாக்டர் கூறினார். டாக்டர் எவ்வளவு அக்கறையோடு உதவி செய்திருக்கிறார் பார்த்தீர்களா! ஒரு உதவியை நாம் செய்கிறபோது அந்த உதவியைப் பெறுகிற மனிதர் நன்றி பாராட்டவேண்டும் என்று எதிர்பார்க்கக்கூடாது. நம்மால் முடிந்த அளவிற்கு அவருக்கு உதவி செய்தோமா என்று எண்ணிப் பார்க்கவேண்டும்.

டாக்டர் அந்த இளைஞருக்கு சிறப்பான விருந்து ஒன்று அளித்தார். பிறகு அந்த இளைஞருடன் புதிய இல்லத்திற்குச் சென்று அங்கு பொருட்களை ஒழுங்கு படுத்தி வைப்பதில் உதவினார். டாக்டர் தனது வீட்டிற்குத் திரும்பி வரும்பொழுது மகிழ்ச்சியுடன் காணப்பட்டார். உதவி நாடி நின்ற ஒரு ஆத்மாவுக்கு உதவிய திருப்தி அவரது உள்ளத்தில் நிறைந்திருந்தது. ''மேன்மைக்குரிய செயலில் மென்மேலும் ஈடுபடு'' என்ற தம்மபதச் சொற்கள் அவரது நினைவிற்கு வந்தன. அவரது உள்ளத்தில் உவகை பொங்கியது.

டாக்டர் நோயாளிகளுக்கும்கூட இத்தகைய தொண்டினைச் செய்வார். மருத்துவமனையில் போதிய வசதி இல்லையென்றால் தனது வீட்டிற்கு அழைத்து வந்து தேவையான உதவிகளைச் செய்வார். ஒருசமயம் தொண்டையில் கடுமையான உபாதை ஏற்பட்டு அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஒரு நோயாளி டாக்டரிடம் வந்தார். டாக்டரும் அவரைப் பரிசோதித்தார். அந்த நோயாளிக்குத் தேவையான அறுவை சிகிச்சை அளிப்பதற்கு உள்ளூர் மருத்துவமனையில் போதிய வசதிகள் இல்லையென்ற காரணத்தால் சிங்கப்பூரிலுள்ள ஒரு டாக்டரிடம் இந்த நோயாளியை அனுப்பிவைக்க அவர் தீர்மானித்தார். உடனே சிங்கப்பூர் மருத்துவமனையிலுள்ள தனது நண்பர்களில் ஒருவருக்குத் தனிப்பட்ட முறையில் கடிதம் ஒன்றை எழுதினார். அந்த நோயாளியிடம் சிங்கப்பூர் செல்வதற்கான பயணச் சீட்டையும், செலவிற்குத் தேவையான பணத்தையும் டாக்டரிடம் தரவேண்டிய கடிதத்தையும் கொடுத்தார். சிங்கப்பூரில் மருத்துவமனைக்குச் செல்லும் வழியையும் சொல்லிக் கொடுத்தார். பெரிய மருத்துவமனைகளிலுள்ள டாக்டர்களெல்லாம் டாக்டர்

குப்புசாமியிடம் நன்மதிப்புக் கொண்டிருந்தனர் என்றும், அவர் சிபாரிசு செய்து அனுப்பிய நோயாளிகளுக்குத் தனிக் கவனம் செலுத்தி சிகிச்சை அளித்தனர் என்றும் நரசிம்ம ஐயர் கூறினார். சிங்கப்பூருக்கு டாக்டர் அனுப்பிய நோயாளி பூரணமாக குணமடைந்து திரும்பினார். இந்த நோய் பற்றி மக்களுக்குப் பரவலாக தெரியப் படுத்த வேண்டுமென்று டாக்டர் குப்புசாமி விரும்பினார். ஆகவே இதுபற்றி ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றை எழுதி பல பத்திரிகைகளில் பிரசுரம் ஆகும்படி செய்தார்.

## பிறர் நலம் பேணும் பண்பு

நரசிம்ம ஐயர் வேலைக்கு வந்து ஒரு மாதம் ஆயிற்று. டாக்டர் அவருக்கு மாத ஊதியமாக 25 டாலர் நிர்ணயித்திருந்தார். அடுத்த மாதம் முதல் தேதியன்று காலைப் பொழுதில் டாக்டர் சமைய லறைக்குள் நுழைந்தார். அவர் கையில் ஒரு கவர் இருந்தது. அதில் 35 டாலர் பணம் இருந்தது. அந்தக் கவரை டாக்டர் நரசிம்ம ஐயரிடம் கொடுத் தார். நரசிம்ம ஐயர் கவரைப் பிரித்து அதில் இருந்த தொகையை எண்ணிப் பார்த்தார். 10 டாலர் அதிகம் இருந்ததற்கான காரணம் அவருக்குப் புரிய வில்லை. கடைவீதிக்குச் சென்று பொருட்கள் ஏதேனும் வாங்கி வருதற்காக அந்த 10 டாலர் வைக்கப்பட்டுள்ளதோ என்று நரசிம்ம ஐயர் எண்ணினார். அவர் எஜமானரை நோக்கினார். ''தீக்ஷிதர், இது உங்களுக்குரிய சம்பாவனை போதுமா?'' என்று டாக்டர் அன்புடன் கேட்டார். அன்புடனும், பக்தியுடனும் தருவது சம்பாவனை யாகும். குருதேவர் தன்து பணியாளர்களுக்கு பணம் கொடுக்கும் போது ''சம்பளம்'', ''ஊதியம்'', ''கூலி'' என்ற வார்த்தைகளை

பயன்படுத்தமாட்டார் என்று நரசிம்ம ஐயர் கூறினர். டாக்டர் தனது பணியாளர்களை தெய்வமாகவே கருதினர். அவ்வாறு இருக்கும்போது தரக்குறைவான வார்த்தைகளைப் பயன்படுத்து வாரா? ஒருபோதும் அவ்வாறு செய்யமாட்டார். தனது பணியாளர்களுக்கு அவர் கொடுத்த பணத்தை இறைவனுக்கு அர்ப்பணம் செய்கிறோம் என்ற உணர்வுடனேயே கொடுத்தார்.

இச்சம்பவம் நிகழ்ந்து ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டன. குருதேவரிடத்தில் இன்றும் கூட இந்தப்பண்பு இருப்பதைக் காண்கிறோம். இன்று இதற்கு அதிக முக்கியத்துவம் உள்ளது. நமக்கும் இப்பொழுது தெளிவாகப் புரிகிறது. நாம் கண்ணால் காண்கிற அனைத்தும் இறைவனின் வடிவங்கள் என்பது குருதேவரின் அடிப்படையான உபதேசம். அந்த உபதேசத்தை அவர் அப்படியே தனது வாழ்க்கையில் கடைப்பிடித்து வந்தார். அவர் சீடர்களை வரவேற்கும் பொழுதும், சீடர்களுக்கு அல்லது விருந்தினர்களுக்கு பிரசாதம் கொடுக்கும் பொழுதும் பணியாளர்கள் அல்லது பண்டிதர்கள் அல்லது அறிஞர்கள் ஆகியோருக்கு அன்பளிப்பு செய்யும் பொழுதும் அவர் இறைவனுக்கு அர்ப்பணம் செய்து வணங்குவதாகவே கருதுவார். பண்டிதர்கள் அல்லது சமயச் சொற்பொழிவாளர்கள் அவரிடம் எதிர்பார்த்ததெல்லாம் அவருடைய அருளாசியைத்தான். அன்பளிப்புக்களை அல்ல. அந்த மகான், கீதையில் சொல்லப்பட்டுள்ள ''பத்ரம், புஷ்பம்'' என்ற வார்த்தைகளைச் சொல்லி பண்டிதர்களுக்கு அன்பளிப்புக்களை வழங்குகின்றபொழுது அவர்கள் ஆச்சரியத்தில் ஆழ்ந்துபோவர். அவர்கள் தாம் படித்த சாஸ்த்திரங்களிலிருந்து கற்றுக் கொண்டவைகளைவிட அதிகமாகவே இந்த மகான் திருவாய்

மலர்ந்து அருளிய சொற்களிலிருந்து கற்றுக் கொண்டதாகக் கூறுவர்.

''தகுதிக்குத் தகுந்த பதவி, தேவைக்குத் தகுந்த உதவி'' என்பது குருதேவர் செயலில் கடைப் பிடித்த கொள்கை. இதுவும் அவரது பிறவிக் குணம். தேவைக்குத் தகுந்த உதவியை அளிப்பதில் குருதேவர் தனிக்கவனம் செலுத்துவார். ஒவ்வொருவருடைய தகுதிக்குத் தகுந்தாற்போல் வேலையை அவர்களிடம் திணிக்கமாட்டார். ஒவ்வொருவரும் தமது தகுதியை உணர்ந்து அதற் கேற்றவாறு தொண்டு செய்ய முன் வரும் வரை குருதேவர் பொறுமையுடன் காத்திருப்பார். ''ஒவ்வொருவருக்கும் செய்கின்ற தொண்டு இறை வனுக்குச் செய்கின்ற தொண்டு. ஒவ்வொரு வருக்கும் செய்கின்ற உதவி இறைவனிடத்தில் செய்யப்படும் சமர்ப்பணம்'' என்ற கொள்கையை குருதேவர் எப்பொழுதும் கடைப்பிடித்து வந்தது தான் இதற்குக் காரணம். மலேயாவில் அவர் வாழ்ந்திருந்த காலத்தில்கூட அவரிடத்தில் இந்த தெய்வீகப்பண்பு இருந்தது என்பதைச் சுட்டிக் காட்ட ஆதாரம் உள்ளது.

டாக்டருக்கு ஒரு உதவியாளர் இருந்தார். டாக்டரின் கடிதப் போக்குவரத்தைக் கவனித்துக் கொள்ளுவதும், மருந்துகளைக் கொடுப்பதும் அவரது வேலை. ஆனால் குருதேவரே இந்த இரு வேலை களையும் விருப்பமுடன் செய்து விடுவார். அப்போது தான் நாராயண சேவை பூர்த்தியாகும் என்பது குருதேவர் கருத்து. பகல் அல்லது இரவில் டாக்டர் உணவு அருந்தும் நேரத்தில் அவருடன் இருந்து உணவருந்த அவரது உதவியாளர் தவறாமல் வந்து விடுவார். அவர் தாமதமாக வந்தாலும், உணவில் விசேஷமான தயாரிப்பு எதுவும் இருந்தால் அதில்

ஒரு பகுதியை தனது உதவியாளருக்காக டாக்டர் எடுத்து வைத்து விடுவார்.

## துறவிகளுக்குத் தொண்டு

மலேயாவில் நரசிம்ம ஐயர் டாக்டரிடம் பணியாற்றிக் கொண்டிருந்த பொழுது நிகழ்ந்த மற்றுமொரு சம்பவம் அவரது நினைவில் பசுமையாக இருக்கிறது. துறவிகளிடத்தில் குருதேவர் கொண்டிருந்த ஆழ்ந்த பக்தியை இந்தச் சம்பவம் தெளிவாக விளக்குகிறது. ஒரு நாள் காலையில் ஒரு சாது சிங்கப்பூருக்குச் செல்லும் வழியில் டாக்டரைக் காண வந்திருந்தார். அந்த சாது மலேயாவில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்த பொழுது தானம் மற்றும் கருணை உள்ளத்தின் திருஉருவமான டாக்டரைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டார். அவரைக்காண நேரில் வந்தார். சாதுவைக் கண்டதும் டாக்டர் மகிழ்ச்சியும், உற்சாகமும் அடைந்தார். சாதுவை உபசரிக்க இங்குமங்கும் ஓடினார். அவரது பாதங்களைக் கழுவினார். ஒரு சாய்வு நாற்காலியில் அமரச் செய்தார். விசிறி கொண்டு அவருக்கு வீசினார். அதே நேரத்தில் சாதுவுக்கு சூடாக பால் கொண்டு வருமாறு நரசிம்ம ஐயரிடம் கூறினார். டாக்டரின் விருந்தோம்பல் கண்டு சாது மனம் மகிழ்ந்தார். சாது தன்னுடன் காலவரையறையின்றி பல நாட்கள் தங்க வேண்டும் என்று டாக்டர் கேட்டுக் கொண்டார். சாது அவரது வேண்டுகோளுக்கு இணங்கி இரண்டு நாட்கள் தங்கினார். சிங்கப்பூரில் தனக்கு முக்கியமான சில நிகழ்ச்சிகள் இருப்பதால் மேலும் டாக்டருடன் தங்க இயலாது என்று சாது கூறினார். இதைக்கேட்ட டாக்டர் வருத்தத்துடன் ரயில் நிலையத்துக்குச் சென்றார். சாது, சிங்கப்பூர் செல்ல முதல் வகுப்பில் தூங்கும் வசதியுடன் ஒரு

இடத்தைப் பதிவு செய்தார். பின்னர் வீடு திரும்பினார். சாதுவுக்குத் திருப்தியாக உணவளித்தார். பயணத்தின்போது சாது உண்பதற்காக தென்னிந்திய உணவு வகைகள் சிலவற்றை தயாரித்துக் கொடுத்தார். சாதுவுடன் ரயில் நிலையத்திற்குச் சென்றார். கண்களில் நீர் பெருக சாதுவை வழியனுப்பி வைத்தார். சாது ஜோஹூர் பாருக்கு மீண்டும் விஜயம் செய்யும் நாளைக் குறிப்பிட்டு கடிதம் எழுதுமாறு சாதுவிடம் டாக்டர் கேட்டுக்கொண்டார். டாக்டரின் தூய, தன்னலமற்ற, தெய்வீக அன்பு சாதுவின் உள்ளத்தையும் உருக்கியது. சாது அவ்வாறே செய்வதாக வாக்குறுதி அளித்தார். ஜோஹூர் பாருக்கு மீண்டும் வரும்பொழுது முன்னதாகவே டாக்டருக்கு கடிதம் எழுதிவிட்டார். ஆனால் இம்முறை அவர் அங்கு இறங்கித் தங்க முடியவில்லை டாக்டர் குப்புசாமி ரயில் நிலையத்திற்குச் சென்று சாதுவை தரிசித்தார். ஒரு பெரிய தர்மாஸ் குடுவை (Flask) நிறைய காபி மற்றும் தென்னிந்திய உணவு வகைகள் ஆகியவற்றை உடன் எடுத்துச் சென்று சாதுவுக்குக் கொடுத்தார். டாக்டரை மீண்டும் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்ததற்காக சாது மகிழ்ச்சியடைந்து அவருக்கு மனதார ஆசி வழங்கினார்.

## உன்னதமான செய்தி

கொடு, கொடு, கொடு, இதுதான் குருதேவரின் சமயம், வாழ்க்கைத் தத்துவம், வாழ்வின் மூச்சுக் காற்று. இந்தப் பண்பு அவரது பிறவிக் குணம். தானதர்மத்தை மனிதனின் இதயத்தில் இடம்பெறச் செய்வதற்காக தெய்வம் நமது மத்தியில் தோன்றியிருக்கிறது. சிவானந்த அவதாரத்தின் மகத்தான முக்கியமான அம்சம்

இதுதான். மனித சமுதாயம் இன்று எதிர்நோக்கியுள்ள பிரச்னைகள் அனைத்திற்கும் இதுதான் பரிகாரம். அறம் செய்வது பாவச் சுமைகளை கரைக்கிறது. மனிதகுலத்தின் மகிழ்ச்சிக்கும், வளமைக்கும், அமைதிக்கும் இதுவே திறவுகோல். உலக அமைதியும், வளமும் இதனை அடிப்படையாகக் கொண்டுதான் ஏற்படமுடியும். அறத்தை அடிப்படையாகக் கொண்டுதான் மனித சகோதரத்துவத்தையும், நல்லெண்ணத்தையும் உருவாக்க முடியும்.

குருதேவர், அகில இந்திய சுற்றுப்பயணம் செய்தபோதும், மற்ற சுற்றுப் பயணங்களின் போதும் நிகழ்த்திய சொற்பொழிவுகளின் மூலம் உன்னதமான உயிரூட்டுகிற, வாழ்க்கையைத் திருத்தியமைக்கிற செய்தியினைத் தந்து அருளினார். ஆன்மாவைத் தட்டி எழுப்பும் தனது எழுத்தின் மூலம் உலகம் முழுவதும் இச்செய்தி பரவச் செய்தார்; எல்லாவற்றுக்கும் மேலாகத் தனது தெய்வீகமான, ஒளிமயமான வாழ்க்கையின் மூலமும் இச்செய்தியைப் பரப்பினார்.

தானம் செய்வது ஆசிரமத்தில் தினமும் காணக் கிடைக்கும் காட்சி ஆகும். ஆசிரமத்துக்கு வரும் பக்தர்கள் பழங்கள் கொண்டு வந்து குருதேவருக்கு சமர்ப்பிப்பார்கள். குருதேவர் உடனே அவற்றை ஆசிரமத்திலுள்ள சாதகர்களுக்கு வினியோகித்துவிடுவார். ஆசிரமத்தைக் காண வந்திருப்போருக்கும் பழங்களைக் கொடுப்பார். ஆசிரமத்திற்கு வந்திருக்கும் பக்தர்கள், ஏதேனும் ஒன்றை குருதேவர் விரும்பி உட்கொண்டால் மறுமுறை வரும்போது அதனைக் கொண்டு வருவார்கள். இம்முறையும் குருதேவர் அதனை ருசித்து உண்பார் என எண்ணுவர். ஆனால் குருதேவர்

அதனை விசேஷமான பிரசாதமாக பக்தர்களுக்கு வினியோகம் செய்வதைக் கண்டு பெருத்த ஏமாற்றம் அடைவர். வினியோகம் செய்யப்பட்டதில் சிறிதளவு மீதம் இருக்கும். இதனைக் கண்ட குருதேவர், "ஓ! ஜி, அதனை எனக்குக் கொடுங்கள். இதனைக் கொண்டு வந்த அன்பர் எனக்காக விசேஷமாகக் கொண்டு வந்திருக்கிறார்" என்று கேட்பார். குருதேவரின் தெய்வீக நடவடிக்கைகளைப் புரிந்து கொள்ளாத பக்தர்களை திருப்திப்படுத்துவதற்காக இவ்வாறு சொல்லுவார். பழங்கள் கொண்டு வந்தவர்கள் முன்னிலையிலேயே அவற்றை வினியோகித்ததன் மூலம் குருதேவர் மௌனமாக ஒரு செய்தியை வெளிப்படுத்தினார்: நம்மிடம் இருப்பதை நாம் அனைவருடனும் பகிர்ந்துகொள்ள வேண்டும். ஒரே பரமாத்மா தான் அனைத்து உயிர்களிடத்திலும் குடிகொண்டிருக்கிறது என்ற நம்பிக்கையுடன் இவ்வாறு செய்ய வேண்டும். பரந்த மனப்பான்மையும் தெய்வீக விழிப்புணர்வும் பெற இதுவே சிறந்த வழியாகும்.

## 10. துறவு மனப்பான்மையுடைய எளிய டாக்டர்

குருதேவரிடத்தில் அனைத்துப் பண்புகளும் குடிகொண்டிருக்கின்றன. குழந்தையைப்போன்ற எளிய சுபாவம் அவை அனைத்திலும் சிறந்ததாக இருக்கின்றது. 1948-ஆம் ஆண்டு ஆசிரமத்தில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. குருதேவர் ஹரிகிருஷ்ணன் என்னும் ஒரு இளம் சாதகரை அழைத்து குடிலை சுத்தப்படுத்தச் சொன்னார்.

ஹரிகிருஷ்ணன் வெளியில் சென்றதும் குருதேவர் தனக்கு அருகில் நின்று கொண்டிருந்தவர்களைப் பார்த்து புன்முறுவல் பூத்துவிட்டு, "இது

போன்ற வேலைகளைச் செய்யுமாறு ஹரிகிருஷ்ண னிடம்தான் என்னால் சொல்ல முடியும். அவர் இன்னும் இளைஞராக இருக்கிறார். ஒரு சாதகரின் முகத்தில் மீசை வளர்ந்துவிட்டால் எனக்கு அச்ச மாக இருக்கிறது. அவரிடம் பேசக்கூட எனக்கு அச்சமாக இருக்கிறது'' என்று குருதேவர் கூறினார். அவர் வேடிக்கையாக இப்படிக் கூறினாலும் அதில் பொருள் பொதிந்திருந்தது; ஒரு முக்கியத்துவம் இருந்தது.

குருதேவர் தாடி, மீசையைக் கண்டு அச்சம் கொள்ளுகிறார் என்று எண்ணத் தேவையில்லை. அவர் சிங்கத்தின் தாடியைக் கண்டாலும் அஞ்ச மாட்டார். அச்சம் அவர் மனத்திலிருந்து என்றோ அகன்றுவிட்டது. இங்கு அவர் தாடியைக் குறிப் பிட்டுச் சொன்னது அகந்தை, பிடிவாதம் ஆகிய வற்றைத்தான். ஒரு மனிதனுக்கு இந்த மீசை வளருவதற்கு முன்பாக அவன் குழந்தையைப் போல இருக்கிறான். அவனுடைய பழக்க வழக்கங் களில் பணிவு, தன்னல மறுப்பு, அன்பு, இணக்கம் ஆகியவை கலந்திருக்கின்றன. அவனிடத்தில் அகந்தை குடிகொண்டுவிட்டால் அவன் பெரியவர் களின் சொற்படி நடப்பதில்லை. தனது குருநாதரின் சொல்லையும் கேட்பதில்லை. வெறுக்கத்தக்க அகந்தை அவனது ஆன்மீக முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கிறது. அது பல வடிவங்களை எடுக்கிறது. இங்கு பிடிவாதம், முரட்டுத்தனம், பணிவின்மை, பிறரை மதிக்காத பழக்கம் ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. இவை அனைத்தும் அகந் தையின் வடிவங்கள்.

''நீங்கள் குழந்தைகளைப்போல மாறாவிட்டால் மோட்ச சாம்ராஜ்யத்தை நீங்கள் அடைய முடியாது'' (மாத்யூ 18.3) என்பதைத்தான்

குருதேவர் வலியுறுத்திஞர். மெய்யடியார்கள் அனைவரும் இவ்வாறே சொல்லியிருக்கின்றனர். இந்தச் சிறந்த பண்பை அவர்கள் தீவிரமாக வலியுறுத்தி வந்திருக்கிறார்கள். குழந்தையிடத்தில் தூய சிந்தனை, பணிவு, அச்சமின்மை, வெறுப்பின்மை, பொறுமையின்மை, நல்ல எண்ணம் ஆகியவை உள்ளன. சாதி, சமயம், இனம், நிறம், தேசம், காலம் என்ற வேறுபாடுகள் குழந்தைக்குத் தெரியாது. குழந்தை குதூகலத்துடன் துள்ளிக் குதித்து மகிழ்ச்சியில் நடனம் ஆடுகிறது. தன் அருகில் வரும் அனைவரிடத்திலும் அது அன்புடன் பழகுகிறது.

ஆன்மீக சாதகர்களிடத்தில் இருக்கவேண்டிய அருங்குணம் இது. மற்ற நற்குணங்களைப்போல இந்தப் பண்பும் குருதேவரின் பிறவிக் குணமாக விளங்கியது. அவர் இத்தகைய பண்புகளை வளர்த்துக் கொண்டார் என்று சொல்லத் தேவை இல்லை. இது பலருக்கு மர்மமாக உள்ளது. தொண்டு செய்தல், தான தர்மம் செய்தல் ஆகிய தெய்வீகச் செல்வம் இந்த மகத்தான பண்பின் மூலம் வெளிப்படுகிறது. குழந்தையைப்போன்ற அவரது சுபாவம் இதயத்தை மென்மையாக்குகிறது. இதன் மூலம் துன்பப்படுபவரின் கண்ணீர் துடைக்க மனிதன் விரைந்து ஓடுகிறான். இத்தகைய பண்புகொண்ட மனிதனால் பிறர் துன்பம் கண்டு சகிக்க முடியாது. அவர்கள் துயர் துடைக்கும்வரை அவனுக்கு நிம்மதி இருக்காது. இத்தகைய மனிதனிடத்தில் குழந்தை உள்ளம் இருக்கிறது.

குருதேவர் தமது குழந்தைப் பருவத்தில் அனைத்துக் குழந்தைகளிடத்திலும் அன்புடன் கலந்து பழகுவார். அவரது வீட்டுக்கு அருகில் வசித்து வந்த வைதிக பிராமணர்கள் குருதேவர்

தாழ்த்தப்பட்ட சாதி எனக் கருதப்படும் சாதியைச் சார்ந்த குழந்தைகளுடன் கலந்து பழகுவதை வெறுத்தனர்; அவரைத் தடுக்க முயற்சித்தனர்; ஆனால் முடியவில்லை. குழந்தை குப்புசாமி தான் கட்டியிருக்கும் பட்டுத் துண்டை தெருவில் வரும் பிச்சைக்காரருக்கு அணிந்து அழகு பார்ப்பார். அவரது அன்னை 'இப்படிச் செய்யலாமா?' என்று செல்லமாகக் கண்டிப்பார். 'அம்மா, அந்த பிச்சைக் காரரும் துண்டை அணிந்து கொள்ளுகிறாரே, சாக் கடையில் போடவில்லையே' என்று குப்புசாமி அன்னைக்கு பதில் அளிப்பார்.

குருதேவர் தனது வீட்டு வேலைக்காரர்களிடம், தமது உறவினர்களுடன் பழகுவதுபோலப் பழகு வார். தமது வீட்டில் பண்டிகை, விரத காலங் களில் பெற்றோர் வேலைக்காரர்களை மறந்து விட்டாலும் குப்புசாமி மறப்பதில்லை. அவர்களுக் காக இனிப்புப் பண்டங்களை முதலில் எடுத்து வைத்துவிட்டு, பிறகு தான் உண்பார். மற்ற குழந் தைகளுடன் விளையாடுவதுபோல தமது வீட்டு வேலைக்காரர்களின் குழந்தைகளுடனும் விளையாடு வார். அவரது இந்தச் செயலுக்கு பெற்றோர்களின் ஆதரவும் இருந்தது. பெற்றோர்கள் அவரை நல்ல முறையில் வளர்த்து வந்த காரணத்தால் அவர் துணிவும், சக்தியும், பக்தியும் கொண்டு விளங்கினார்.

குப்புசாமியின் இந்தப் பண்புகள், பள்ளிப் பருவத்தில் அவருக்கு நிறைய நண்பர்களைத் தேடித் தந்தன. அவரது பேச்சில் உண்மையும், நேர் மையும் இருந்தன. மாணவர்கள் தம்முள் சண்டை யிட்டுக் கொண்டால் தீர்ப்பு வழங்குமாறு கோரி குப்புசாமியை நாடி வருவர். அத்தகைய நல்ல மாணவராக அவர் விளங்கினார்.

குப்புசாமியின் உள்ளம் குழந்தை உள்ளமாக இருந்தபடியால் இவரிடம் பேசுகிற அன்பர்கள் தயக்கமின்றிப் பேசினர்; மனந்திறந்து பேசினர். திருச்சிராப்பள்ளியில் அவரை நாடி வந்த நோயாளிகள் மனதில் உள்ளதை அப்படியே எடுத்துரைத்தனர். இதன்மூலம் நோயாளிகள் தங்கள் நோயைப் பற்றிய முழு விவரத்தையும் டாக்டரிடம் தயங்காமல் எடுத்துரைத்தனர்.

குப்புசாமி, மலேயாவில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது அவரது இந்தப் பண்பு பன்மடங்கு வளர்ந்தது. அவருக்கும் மற்ற டாக்டர்களுக்குமிடையில் ஒரு வித்தியாசம் இருந்தது. அவருடன் பணியாற்றுவோர் அவரைத் தம் நலம் நாடும் நல்லவராகக் கண்டனர். அவரிடத்தில் முழு நம்பிக்கை கொண்டிருந்தனர். அவரது அதிகாரிகளும் இவ்வாறே எண்ணம் கொண்டிருந்தனர்.

டாக்டர் குப்புசாமி அனைவரிடமும் மனந்திறந்து பழகுவார். குழந்தையிடத்தில் சொல்லும், செயலும் ஒன்றாக இருக்கும். நவீன மனிதனிடத்தில் இந்தப் பண்பைக் காணோம். குழந்தையிடத்தில் சொல், செயல், சிந்தனை மூன்றும் ஒரே நேர்கோட்டில் இருக்கிறது. ஆனால் மனிதனிடத்தில் அவை வளைந்து நெளிந்து செல்கின்றன. அவன் நினைப்பது ஒன்று, சொல்லுவது மற்றொன்று; செயல்படுவது முற்றிலும் வேறான ஒன்று. ''அனைவரையும் சிறிது காலம் ஏமாற்றலாம்; சில மனிதர்களை எல்லா நாட்களும் ஏமாற்றலாம். ஆனால் அனைத்து மனிதர்களையும் அனைத்து நாட்களுக்கும் ஏமாற்ற முடியாது''. மக்கள் திருடனை விரைவில் கண்டுபிடித்துவிடுகின்றனர்; அவனிடமிருந்து தம்மைக் காத்துக் கொள்ளுகின்றனர். திருடன் மக்களின் நம்பிக்கையைப்

பெற முடியாது. அவனுக்குப் புரிகிற மொழியில் அவர்கள் பேசுகிறார்கள். அவனிடத்தில் இனிய சொற்களைப் பேசுகிறவர்கள், அவன் இல்லாத இடத்தில் அவனைக் குறை கூறிப் பேசுகிறார்கள். அத்தகைய மனிதன் சிறப்பாக எதனையும் சாதிக்க முடியாது. தன் அருகில் வாழும் மக்களின் ஒத்துழைப்பை அவன் பெற முடியாது. சந்தேகம், தவறாகப் புரிந்து கொள்ளுதல், ஏமாற்றுதல் ஆகிய குணங்களுடன் அவன் மற்றவர்களிடம் பழகுகிறான். மற்றவர்களும் அவ்வாறே அவனிடம் பழகு கிறார்கள். இன்றைய உலகில் இத்தகைய வேட தாரிகள்தான் நிறைந்திருக்கிறார்கள். பொய்யர்கள் நிறைந்த இருட்டறையில் ஞானச் சுடராக விளங்கிய குருதேவர் எளிமையும், நேர்மையும் கொண்டு விளங்கினார். குழந்தை உள்ளம் கொண்ட டாக்டரின் இத்தகைய பண்பைக் கண்ட மலேயா மக்கள் அவரைப் பெரிதும் மதித்துப் போற்றினர். இதனால் பல நன்மைகள் விளைந்தன. அவர் பிரபல மானார். அவர் சொல்லுக்கு அனைவரும் கட்டுப் பட்டு நடந்தனர். சில நேரங்களில் அவர் ஏமாற்றப் பட்டார். ஆயினும் அவர் தனது போக்கை மாற்றிக் கொள்ளவில்லை.

சில நேரங்களில் நரசிம்ம ஐயர் டாக்டருடன் கடைவீதிக்குச் செல்லுவார். டாக்டர் பொருட்களை வாங்கிக்கொண்டே செல்லுவார். கடைக்காரரர் கேட்கும் தொகையைக் கொடுத்து விடுவார். இப்படிச் செய்யக் கூடாது என்று நரசிம்ம ஐயர் துவக்கத்திலேயே சொன்னார். வாடிக்கையாளர்கள் பேரம் பேசுவதால் கடைக் காரர்கள் பொருட்களின் விலையை வாடிக்கை யாளர்கள் எதிர்பார்ப்பதைவிட அதிகமாக உயர்த்தியிருக்கிறார்கள் என்றார். டாக்டர் இதற்குப் பதிலளித்தார். ''எனக்கு அதுபற்றிக்

கவலையில்லை. நான் பேரம் பேசமாட்டேன். அவன் ஒரு ஏழை, அவன் தனக்கு நியாயமாகச் சேரவேண்டியதைவிட அதிகமாகவே பெற்றுக் கொள்ளட்டும். அவன் எனது இயல்பைப் புரிந்து கொண்டால் விலையை உயர்த்திச் சொல்லுவதைத் தானாகவே நிறுத்தி விடுவான்''. வாடிக்கையாளர் அனைவரும் கடைக்காரரிடம் இவ்வாறு நடந்து கொண்டால், பேரம் பேசுவது என்ற பேச்சுக்கே இடமில்லாமற் போய்விடும். கடைவீதியில் உண்மை நிலைத்திருக்கும்.

குருதேவர் பிறர் பேசுவதை அப்படியே ஏற்றுக் கொள்ளுவார். கேள்வி கேட்பதில்லை, ஐயப்படுவதில்லை. அவர் மலேயாவில் இருக்கும்போது ஒரு கார் வாங்க விரும்பினார். இதற்காக ஒருவர் அவரிடம் சிறிதளவு தொகையைப் பெற்றுக் கொண்டார். ஆனால் அந்த நபர் டாக்டரை ஏமாற்றி விட்டார். ஆனால் டாக்டர் கவலைப்படவில்லை. ''அதனால் என்ன, பரவாயில்லை. இதுவும் இறைவன் திருவுள்ளப்படியே நிகழ்ந்திருக்கிறது'' என்று கூறிவிட்டார். குற்றமற்ற ஒருவன் சந்தேகிக்கப்படுகிறபோது அவன் மனம் வேதனை அடையும். ஒருவன் பொய்யன் என்று நிரூபிக்கப் படுகிற வரையில் அவனது உள் நோக்கம்பற்றி நாம் எப்படி வர்ணிக்க முடியும்? குற்றமற்ற ஒருவரை குறையுடையவராக வர்ணிப்பது குற்றம் என்று குருதேவர் கருதினார். ''திருடனையும் நம்பு. அவன் திருந்துவதற்கு வழி இருக்கிறது'' என்று குருதேவர் கூறுகிறார்.

டாக்டர் குப்புசாமி இத்தகைய குழந்தை உள்ளத்தால் மலேயாவை வென்றார். ஏற்கனவே குறிப்பிடப்பட்டதுபோல குழந்தை உள்ளம்

கொண்டவர்கள் ஒவ்வொருவரின் இதயத்திலும் குடிபுகுந்து அற்புதங்களை நிகழ்த்த முடியும். குருதேவர் மலையாவில் இருந்தபோது மருத்துவ மனையில் பணியாற்றிய துப்புரவுப் பணியாளர்கள் (Scavengers) வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். கண்காணிப்பாளரும் மற்ற அதிகாரிகளும் இதில் கடைப்பிடித்த அணுகுமுறை சிக்கலை அதிகரித்தது. பிறகு டாக்டர் குப்புசாமி தொழிலாளர் தலைவர்களை அழைத்துப் பேசினார். வேலைக்குத் திரும்பும்படி கேட்டுக் கொண்டார். அவர்களின் குறைகளைப் போக்குவதாக வாக்குறுதி அளித்தார். பிறகு அவர் தொழிலாளர்களின் குறைகளைப் பட்டியல் போட்டுக்கொண்டு மேலதிகாரிகளிடம் பேசினார். தொழிலாளர்களின் கோரிக்கை நியாயமானவை என்று அவர்களிடம் எடுத்துரைத்தார். அவர்களும் இதற்கு ஒப்புக் கொண்டனர். டாக்டர் எவ்வாறு அவர்களைத் தம் கருத்துக்கு இணங்க வைத்தார் என்பதை அவர்களாலேயே விளக்க முடியவில்லை. அந்த அளவுக்கு டாக்டர் மேலதிகாரிகளிடம் திறமையாகப் பேசியிருக்கிறார். எடுத்துக்கொண்ட பணியை சிரத்தையுடனும், நேர்மையுடனும், அனுதாபத்துடனும் செய்து முடிப்பதில் அவர் தலைசிறந்து விளங்கினார்.

சமுதாயத்தில் உள்ள உயர்வு, தாழ்வு என்னும் வேறுபாடுகளை குழந்தை அங்கீகரிப்பதில்லை. அதனைப் பொறுத்தவரை, அது தனது சகோதரனுடன் விளையாடுவதுபோல ஒரு துப்புரவுப் பணியாளரின் குழந்தையுடனும் விளையாடுகிறது. சாதிவெறி இடையறாது அதன் நாடி நரம்புகளில் பாயுமாறு செய்யப்படுவதால் அந்தக் குழந்தை தனது போக்கை மாற்றிக் கொள்ளுகிறது. அன்புக்குத் தாள் போடுகிறது. குருதேவர்

தனக்கு இவ்வாறு ஒரு நிலை ஏற்பட ஒருபோதும் அனுமதித்ததில்லை. அவர் குழந்தையாக இருந்த போதும், சிறுவனாக இருந்தபோதும், அறிஞராக விளங்கும்போதும் தன்னை நெருங்கிவரும் அன்பர்களுடன் அன்புடன் பழகுவார். குருதேவரின் இச்செயலை பெற்றோர்கள் விரும்பினார்களோ, இல்லையோ தெரியாது. ஆயினும் தமது புதல்வனின் இச்செயலுக்குக் குறுக்கே நிற்க அவர்கள் விரும்பவில்லை.

குருதேவரின் இந்தப் பண்பு மலேயாவில் மேலும் வளர்ச்சி அடைந்தது. மீண்டும் நரசிம்மய்யர் சொல்லுவதைக் கேட்போம். நரசிம்மய்யர் டாக்டர் குப்புசாமியிடம் பணியாற்ற வருவதற்கு முன்பாக வேறு பல அதிகாரிகளிடம் பணியாற்றி வந்திருக்கிறார். அவர்களிடம் எவ்வாறு பழக வேண்டுமென்பதை அறிந்து வைத்திருந்தார். எஜமானர்களிடம் வலுக்கட்டாயமாக மரியாதை செலுத்த வேண்டும் என்பது அவர் அறிந்திருந்த ஒன்று. டாக்டர் குப்புசாமியிடம் அவர் வேலைக்குச் சேர்ந்த பின்னர் அவரது இந்தப் பழக்கம் தொடர்ந்தது. அவர் டாக்டரிடம் பேசுவதற்கு அஞ்சுவார். அவர் முன்னிலையில் உட்காருவதற்கு அஞ்சுவார். டாக்டர் வருகிறபோது வேலை எதுவும் செய்யாமலிருந்தால் அதற்காகவும் அஞ்சுவார். அவர் வேலைக்குச் சென்ற முதல் நாள் அவரை அதிர்ச்சியில் ஆழ்த்திய சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அன்று காலையில் காபி தயாரானதும் டாக்டர் குப்புசாமி தானே இரு கோப்பைகளில் காபியை ஊற்றி ஒன்றை தான் எடுத்துக்கொண்டு, மற்றொன்றை நரசிம்ம ஐயரிடம் கொடுத்தார். தனக்கு முன்பாகவே காபி குடிக்க வேண்டும் என்று வற்புறுத்தினார். நரசிம்மய்யருக்கு இது புது அனுபவமாக இருந்தது.

மாலை நேரங்களில் டாக்டர் உலாவச் செல்கிற பொழுது நரசிம்மய்யரையும் அழைத்துச் செல் வார். அவர்கள் இருவரும் நடந்து செல்வதைப் பார்க்கிறவர்களுக்கு அவர்களது உண்மையான உணர்வு தெரியாது. அவர்கள் இருவரும் மிக நெருங்கிய உறவினர்களாக இருக்கவேண்டும் என்றே எண்ணுவர். டாக்டர் நரசிம்மய்யருக்கு முதன் முறையாக அளித்த அறிவுரையில் பின்வரு மாறு கூறினர். ''உங்களுக்கும் எனக்கும் என்ன வேறுபாடு இருக்கிறது? நீங்கள் சிறிதளவு குறை வாக ஊதியம் பெறுகிறீர்கள். நான் சிறிதளவு அதிகமாக ஊதியம் பெறுகிறேன். அவ்வளவுதான். இருவரும் ஒரே உணவைத்தான் உட்கொள்கிறோம். இருவரும் உறங்கியாக வேண்டும். இவ்வாறு நம் இருவரிடத்திலும் காணப்படும் பழக்கவழக்கங்கள் ஒரே மாதிரியானவையாக உள்ளன உண்மை இவ்வாறு இருக்கும்போது நான் வரும்வரை நீங்கள் ஏன் உணவு உட்கொள்ளாமல் இருக்க வேண்டும்? எனக்குப் பசிக்கிற நேரத்தில் உங்களுக் கும் பசிக்கிறதல்லவா? எனக்கு முன்னே ஏன் நீங்கள் நின்றுகொண்டேயிருக்கிறீர்கள்? எனக்குக் கால் வலிப்பது போல்தான் உங்களுக்கும் வலிக்கும். நீங்கள் ஏன் அழுக்கு உடைகளை அணிந்துகொள் கிறீர்கள். ஆரோக்கியம், உடல்நலம் ஆகியவை பற்றிய விதிமுறைகள் இருவருக்கும் பொதுவான வைதான். எனக்குள்ளதுபோல் உங்களுக்கும் சுய கௌரவம் உண்டு. கர்வம் பிடித்த சில பணக் காரர்கள் உயர்ந்தது, தாழ்ந்தது என பாகுபடுத்திப் பார்ப்பது முட்டாள்தனமாகும். அத்தகைய பணக்காரர்களின் பழக்க வழக்கங்களை நான் அறிவேன். தங்களுடைய வேலைக்காரர்களுக்கு கொடுப்பதற்காக கெட்டுப்போன உணவையும், அழுகிப்போன பழங்களையும் பத்திரப்படுத்தி வைத்திருப்பார்கள். இத்தகைய எண்ணத்தையே

நான் வெறுக்கிறேன். நீங்கள் எனது குடும்பத்தின் உறுப்பினர்களில் ஒருவராக இருப்பீர்கள். இனி மேல் என்னிடத்தில் எந்தவிதமான தயக்கமும் இல்லாமல் பழகுங்கள்.

இந்தச் சம்பவம் நரசிம்மய்யரின் உள்ளத்தில் ஒரு புதிய ஆர்வத்தை ஏற்படுத்தியது. டாக்டருடைய நடவடிக்கைகளை அவர் உற்று நோக்கியிருந்தார். அதன் காரணமாகத்தான் குருதேவர் மலேயாவில் வாழ்ந்தபோது நிகழ்ந்த சம்பவங்களை அவரால் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு நினைவு படுத்தி தொகுத்துக் கூறமுடிந்தது.

ஒருநாள் இரவில் டாக்டர் உறங்கச் செல்வதற்கு முன்பாக நரசிம்மய்யரை அழைத்தார். ''நரசிம்ம தீக்ஷிதரே! தலைகீழாக நிற்பது எப்படி என்பது உங்களுக்குத் தெரியுமா? வாருங்கள் நான் முதலில் தலையை பூமியில் வைத்துக் கொண்டு தலைகீழாக நிற்கிறேன். முதலில் நீங்கள் எனக்கு உதவி செய்யுங்கள். பிறகு அவ்வாறு செய்ய உங்களுக்கு நான் உதவி செய்கிறேன். டாக்டர் கச்சை கட்டிக்கொண்டு சிரசாசனம் செய்யத் தயாரானர். அவர் தனது தலையை ஒரு தலையணையில் வைத்து கால்களை செங்குத்தாக உயர்த்தி சுவரருகே கொண்டு சென்ருர். ''கால்களைப் பிடித்துக்கொள்ளுங்கள், அவை நடுங்குகின்றன, அவற்றைப் பிடித்து சுவற்றை நோக்கி அழுத்துங்கள். இப்பொழுது சரியாகிவிட்டது'' என்று கூறினுர். பிறகு அவர் பழைய நிலைக்கு வந்தார். ''இப்பொழுது நீங்கள் செய்யுங்கள் என்று நரசிம்மய்யரைப் பார்த்துக் கூறினுர். நரசிம்மய்யர் சிரசாசனம் செய்து பழக்கப்பட்டவராக இருந்தாலும் சரியாகச் செய்யவில்லை. உடனே டாக்டர், ''கவலைப்படாதீர்கள், நான்

உங்கள் கால்களை கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறேன்'' என்று கூறி கால்களைப் பிடித்துக் கொண்டார். மாலையில் டாக்டருடைய அறிவுரைகளை அவர் கேட்டிருந்தபோதிலும் இப்பொழுது தனது எஜமானர் தனது கால்களைப் பிடிக்கின்ற பொழுது அவருக்கு தர்மசங்கடமாக இருந்தது.

நரசிம்மய்யர் சமய நூல்களைப் படிப்பது வழக்கம். தனக்கு ஓய்வு கிடைக்கும்போது தமிழ் அடியார்கள் இயற்றிய நூல்களை அவர் படித்தார். டாக்டர் திடீரென்று சமையலறைக்குள் நுழைவார். ''என்ன, பட்டினத்தார் வாழ்க்கை வரலாரு? நீங்கள் இதையெல்லாம் படிக்கிறீர்களா?'' (இவ்வாறு சொல்லிக்கொண்டே அந்தப் புத்தகத்திலுள்ள பாடல்களை டாக்டர் இசையுடன் பாடுவார். பள்ளிக்கூடத்தில் தான் கற்றுக்கொண்ட பாடல்களை பெற்ரோர்களிடம் பாடிக்காட்டுகின்ற குழந்தைகளைப்போல் டாக்டரும் தான் கற்றுக்கொண்ட பாடல்களை இசையுடன் பாடிக்காட்டுவார்.) நரசிம்மய்யர் தயங்கி நின்ருர். டாக்டர், ''நல்ல புத்தகம்; படியுங்கள், படியுங்கள்'' என்று சொல்லி விட்டு அங்கிருந்து நகர்வார்.

நரசிம்மய்யர் வேலைக்குச் சேர்ந்த முதல் நாள் இரவில் டாக்டர் நரசிம்மய்யரை அழைத்து தனது அறையில் உள்ள ஒரு கட்டிலைக் காட்டி, ''நீங்கள் இதில் படுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி விட்டு அவர் தரையில் படுத்துக் கொள்ள ஆயத்தமாஞர். ''இந்தப் பகுதிகளில் தரையில் படுத்துக் கொள்ளுவது உடல் நலத்துக்கு ஏற்றதல்ல; ஆயினும் இது எனக்குப் பழக்கப்பட்டுப் போயிற்று''. ஆனால் நீங்கள் இந்த சிக்கலான சோதனையில் இறங்க வேண்டாம்'' என்று டாக்டர் நரசிம்மய்யரிடம் கூறினார். நரசிம்மய்யர் ஒரு

பணியாள்; டாக்டர் சொல்லுகிறபடி செய்ய எவ்வாறு அவரால் முடியும்? ஆயினும் அவர் டாக்டரின் சொல்லுக்குக் கட்டுப்பட்டாக வேண்டிய சூழ்நிலைதான் அங்கு நிலவியது.

நரசிம்மய்யர் டாக்டரிடம் பணியாற்றிய காலத்தின் இறுதிக் கட்டத்தில் டாக்டரிடம் பணி யாற்றிய நினைவாக ஒரு புகைப்படம் எடுத்துக் கொள்ள நரசிம்மய்யர் விரும்பினார். அவரது ஆவலைப் புரிந்து கொண்ட டாக்டர் உடனே வெளியில் புறப்பட்டு சிறிது நேரத்தில் திரும்பினார். ''புகைப்படம் எடுப்பவர் தயாராக இருக்கிறார், புறப்படுங்கள்'' என்று நரசிம்மய்யரை அழைத் தார். டாக்டர் தனது உடைகளை நரசிம்மய் யருக்குக் கொடுத்து அணிந்து கொள்ளச் செய்து ஸ்டுடியோவுக்கு அழைத்துச் சென்றார். அங்கு நாற்காலி, பூக்கூடை இவற்றையெல்லாம் தானே ஒழுங்குபடுத்தி வைத்தார். நரசிம்மய்யரின் முக அலங்காரத்திலும் கவனம் செலுத்தினார். புகைப் படம் எடுக்கப்பட்டவுடன், டாக்டர், நரசிம்மய்ய ரைப் பார்த்து, ''இந்த உடையில் நீங்கள் வழக்கறிஞர் போலக் காட்சியளிக்கிறீர்கள்'' என்று சொல்லிவிட்டு கலகலவெனச் சிரித்தார். பிறகு இருவரும் வீடு திரும்பினர். நரசிம்மய்யர் இடுப்பில் துண்டைக் கட்டிக் கொண்டு இட்டிலிக்கு மாவாட்டத் தொடங்கினார். இந்த நேரத்தில் சமையலறைக்குள் டாக்டர் வந்தார். இடிமுழக்கம் போன்ற சிரிப்பொலிக்கு நடுவில் அவர் நரசிம்மய்ய ரிடம் பின்வருமாறு கூறினார்: ''நரசிம்ம தீக்ஷிதர்! இப்போது நீங்கள் மிகவும் அழகாக இருக்கிறீர்கள். இப்போது உங்களைப் படம் பிடிக்க புகைப்படக் காரரை அழைத்து வரட்டுமா?'' மீண்டும் ஒருமுறை இதயபூர்வமாகச் சிரித்துவிட்டு அங்கிருந்து சென்றார். நண்பர்களிடம் இவ்வாறு நகைச்சுவை

யுடன் பேசுவது குருதேவரின் பழக்கம். ஆனால் அந்த நகைச்சுவைப் பேச்சிலும் உயர்ந்த கருத்து பொதிந்திருப்பதை நுண்ணறிவுடையவர்கள் உணர்ந்து கொள்ள முடியும். இங்கு குறிப்பிடப் படுவது அவர் தன்னிடம் பணியாட்களாக இருந்த வர்களிடம் எப்படி நடந்து கொண்டார் என்பது தான். அவர் ஒருபோதும் வேலைக்காரர்களை வேலைக் காரர்களாக நடத்தியது கிடையாது. அவர், வேலைக்காரர்களிடம் அன்பு கொண்டிருந்தார். அவர்களிடம் நகைச்சுவை கலந்து பேசி விளையாடு வார். வேலைக்காரர்களின் கண்களுக்கு அவர் தெய்வமாகவே காட்சியளித்தார்.

இப்போது நாம் காண்பதென்ன? குருபூர்ணிமா தினத்தன்று குருதேவரை வணங்க குருதேவரின் குடில் நோக்கி சீடர்கள் ஊர்வலமாகச் செல்லுவர். ஆனால் குருதேவர் கைகளில் மலர்களுடனும் பக்தி யுணர்வுடனும் எதிரே வருகிறார். அந்த மலர்களை சீடர்களின் பாதங்களில் சமர்ப்பித்து பக்தி சிரத்தை யுடன் வணங்க வருகிறார். முதலில் அவர்தான் சீடர்களை வணங்குவார். அவர் எவரையும் 'ஏக வசனத்தில்' குறிப்பிட்டுப் பேசியதில்லை. எப்போதும் 'நீங்கள்', 'தாங்கள்' என்று குறிப்பிட்டுத்தான் பேசுவார். அவர் தனது சொந்த சீடர்களிடம் நடந்து கொள்ளும் முறை வர்ணிக்க இயலாதது. மிகவும் மர்மமானது; உற்சாகம் தரக்கூடியது. அவர் தனது சீடர்களை சீடர்களாகக் காண்பதில்லை, தெய்வங்களாக, தனது சொந்த ஆத்ம சொரூபம் உடையவர்களாகக் காணுகிறார். அவர் ஆன்மீக உபதேசங்களைத் தனது சீடர்களுக்கு வழங்குகிற போது அவர்களின் மனநிலை அறிந்து மெதுவாக வழங்குகிறார். அவர்களின் மனச் சமநிலை மாறாத வகையில் உபதேசங்களை அருளுகிறார். சீடர்களின் தவறுகளை அவர் பொருட்படுத்த மாட்டார்.

அவற்றை சுட்டிக்காட்ட விரும்பினால், மறைமுக மாகச் சுட்டிக்காட்டுவார். தகுந்த நேரம் வரும் வரை காத்திருந்து தவறைச் சுட்டிக்காட்டுவார். சீடர்களின் உணர்வுகளுக்கு அவர் அந்த அளவுக்கு மதிப்புக் கொடுத்தார். மகான்களிடம் காண்ப தற்கரிய அருங்குணம் இது.

ஆசான் என்றதும் கையில் குச்சியுடன் இருக்கும் ஆசிரியர்தான் பொதுவாக மனிதர்களின் நினைவுக்கு வருவார். ஆனால் குருதேவர் கற்றுக் கொடுத்த முறையே தனிச்சிறப்பானது. அதுபற்றி மற்றொரு அத்தியாயத்தில் காண்போம்.

இந்த வகையில், குருதேவர் குழந்தை உள்ளம் கொண்டிருப்பதையும், எந்தச் சூழ்நிலையிலும் தன்னைச் சரிசெய்து கொள்ளுவதையும், சீடர்கள் மற்றும் பணியாட்களின் மனநிலை அறிந்து அதற் கேற்றவாறு பழகுவதையும் கண்போம். நரசிம்ம ஐயர், ஆசிரமத்தில் குருதேவரின் சீடராகச் சேர்ந்த பிறகு, ஒருநாள் காலையில், சமைத்த உணவைச் சூடுபண்ணி மாலையில் குருதேவருக்குக் கொடுத்தார். குருதேவர் எதுவும் சொல்லாமல் அதனை உட்கொண்டார். மற்றொரு நாள் நரசிம்ம ஐயர் குருதேவருக்கு கண்ணாடி டம்ளரில் பால் கொண்டு வந்தார். அது தவறிக் கீழே விழுந்து விட்டது. உடனே நரசிம்மய்யர் வேறு ஒரு டம்ளரில் பால் கொண்டு வருவதாகக் கூறினார். ஆனால் குருதேவர், 'தேவையில்லை, கவலைப்பட வேண்டாம். இன்று காலை நான் பால் குடிக்காம லேயே இருந்து விடுகிறேன். நடப்பதெல்லாம் நன்மைக்கே. இன்று காலை நான் பால் அருந்தா திருப்பது உடல் நலத்துக்கு உகந்ததாக இருக்கும் என நினைக்கிறேன்'' என்று சொல்லிவிட்டார்.

உணவு சரிவர சமைக்கப்படவில்லையெனில் குரு தேவர் அதுபற்றிக் குறைப்பட்டுக் கொள்ள மாட்டார். மகிழ்ச்சியோடு அதனை உட்கொள்ளு வார். ஆனால் பொருத்தமான வேளையில் தவறைச் சுட்டிக்காட்டுவார்.

குழந்தை சுபாவம் எளிதில் அமையாது. இந்த சுபாவம்தான் எண்ணற்ற ஆன்மீக சாதகர்களிட மிருந்து மகான்களைப் பிரித்துக் காட்டுகிறது. கடவுள் தனது கருவியாக யாரைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறாரோ அவரிடம் இந்தப் பண்பு நிறைந்திருக்குமாறு அருளப்படுகிறது. இந்தப் பண்பு இருப்பதற்கு அடையாளம் இதயம் முழு வதும் நிறைந்திருக்கும் அன்புதான். இந்த அன்பு பிறப்பதற்கு அடிப்படை, ஈசாவாஸ்ய உப நிடதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளதுபோல இறைவன் உலகம் முழுவதும் நிறைந்திருக்கிறான் என்பதை உணருவதுதான்.

## 11. ஒரு மகான் உருவாகிறார்

மலேயாவில் குருதேவர் இருந்த காலத்தில் அங்கு பணியாற்றிய டாக்டர் ஒருவர், மலேயாவில் வசதியுடன் வாழ்ந்து வந்த இந்தியர்களில் ஒரு சிலர்தான் மதுவுக்கும் மங்கைக்கும் மயங்காதவர் களாக இருந்தனர் என்று குறிப்பிட்டார். டாக்டர் குப்புசாமி தனது தூய வாழ்க்கையால் அனை வருடைய மதிப்பையும் அப்பொழுதே பெற்றார் என்று அந்த டாக்டர் குறிப்பிட்டார்.

இளமையும் செல்வமும் டாக்டர் குப்புசாமி யிடம் இருந்தது. அத்தகையவர் தீய சக்திகளை எதிர்த்தது எப்படி? மன உறுதியையும், ஆன்மீக பலத்தையும் வளர்த்துக்கொள்ளும் நோக்கில்

மகான்கள், துறவிகளுடன் பழகும் வாய்ப்பு அவருக்குக் கிட்டவில்லை. ஆனால் அவர் மறைமுக சத்சங்கத்தில் தொடர்ந்து ஈடுபட்டிருந்தார். இதில் அவருக்கு அலுப்புத் தட்டவில்லை.

இல்லறத்தில் இருப்பவர்கள் சமய நூல்களைப் படிப்பது, துறவி மற்றும் மகான்களின் தொடர்பில் இருக்கிற அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்று குருதேவர் வலியுறுத்துகிறார். மனிதனின் வாழ்க்கை லட்சியத்தை அவை நினைவுபடுத்து கின்றன. மனிதன் அந்த லட்சியத்தை அடைய அவை ஊக்குவிக்கின்றன. மனிதன் மனோபலம் இழந்து நிற்கிறபோது அவை அவனுக்கு சக்தி அளிக்கின்றன. காரிருள், விரக்தி, அதிருப்தி என்னும் தற்காலிகத் தடைகளைக் கடந்து செல்ல அவை உதவுகின்றன. மனிதன், சிரத்தையுணர் வில் நிலைத்து நின்று உள்ளத்தில் ஆன்மீகச் சுடரொளி என்றும் பிரகாசிக்குமாறு பார்த்துக் கொள்ள அவை வழிகாட்டுகின்றன. ஞான சூரியனாகத் திகழும் ஒரு மகானின் அருளுரை ஞான தீபமாகும். அதன் உதவியுடன் சாதகர்கள் குறிக் கோளை நிச்சயமாக அடைய முடியும்.

குப்புசாமி, சிறுவனாக இருக்கும்போது, சமய நூல்களை பிறர் பாராயணம் செய்வதை ஆர்வத் துடன் கேட்பது வழக்கம். குப்புசாமி தனது இளமைக் காலத்தில் யோகம் சம்பந்தமான புத்தகங்களை நிறைய சேகரித்து வைத்தார். புத்தக விற்பனை நிலையத்துக்குச் செல்லும் ஒவ்வொரு முறையும் புதிதுபுதிதாகப் புத்தகங்களை வாங்கி வருவார். நூலகம் வளர்ந்துகொண்டே வந்தது. அவர் இந்தச் செல்வத்தை மலேயாவுக்குக் கொண்டு சென்றார்.

மலேயாவில் இந்தப் புத்தகங்களுடன் மேலும் பல புத்தகங்கள் சேர்க்கப்பட்டன. டாக்டர் தன்னிடம் உள்ள நூல்களின் பட்டியலை எப்போதும் தன்னிடம் வைத்திருப்பார் என்று நரசிம்மய்யர் கூறுகிருர். டாக்டர் அவ்வப்போது இந்தப் பட்டியலுடன் புத்தக விற்பனை நிலையத்துக்குச் செல்லுவார். அந்தப்பட்டியலை கடைக்காரரிடம் கொடுப்பார். அந்தப் பட்டியலில் இல்லாத புத்தகங்கள் நிலையத்தில் இருந்தால் அவற்றைத் தனக்கு அனுப்பி வைக்குமாறு கூறுவார். சில புத்தகங்கள் அந்நிய மொழிப் புத்தகங்கள். ஆயினும் அவை பிறர் படிக்க உதவும் என்ற கருத்தில் டாக்டர் அவற்றையும் வாங்குவார். அவர் எதைப் படித்தாலும் ஆர்வத்துடனும், மகிழ்ச்சியுடனும் படிப்பார். நரசிம்மய்யர் டாக்டரிடம் வேலைக்குச் சேர்ந்த முதல்நாளே, டாக்டர் தனது நூலகத்தை நரசிம்மய்யருக்குக் காட்டி, சமய நூல்களைப் படிக்கத் தூண்டினுர். தன்னை நாடிவரும் அனைவரிடத்திலும் தன்னிடம் உள்ள நூல்களைப் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டு வார். ஆன்மீக ஞானத்தைப் பரப்புவது அவரைப் பொறுத்தவரையில் ஒருபெரும் வேள்விக்குச் சமம். மதிப்புமிக்கு இத்தகைய தொண்டில் அவர் அப்பொழுதே தீவிரமாகவும், பெரு மகிழ்ச்சியுடனும் ஈடுப்பட்டார். இந்த நூல்களைப் படிக்க விரும்பிய அனைவருக்கும் அவரது நூலகம் எப்போதும் திறந் திருந்தது. அவரது இனிய சுபாவத்தால் ஏராள மானவர்கள் அவரது நண்பர்களாக ஆயினர். அவர்கள் அனைவரும் இந்த நூலகத்தின் உறுப்பினர்களாக ஆகினர்.

இதன்மூலம் டாக்டருக்கு இருவகை சத்சங் கங்கள் வாய்த்தன. அவருக்கு ஓய்வு நேரம் இருக்கும்போது நிறைய நூல்களைப் படிக்கிருர்.

இதனால் எண்ணற்ற மகான்களின் தொடர்பு கிடைக்கிறது. இதைவிட முக்கியமானது என்ன வென்றால் அவர் வீட்டிலோ அல்லது மருத்துவ மனையிலோ அல்லது கடைவீதியிலோ அல்லது கடற் கரையிலோ இருக்கும்போது அவரை நண்பர்கள் சூழ்ந்து கொள்ளுவர். அவருக்கும் அவரது நண்பர் களுக்குமிடையில் உள்ள பொதுவான விஷயம் ஆன்மீகம். மற்ற தலைப்புக்களில் ஒரு சில நிமிடங்கள் மட்டுமே பேசுவர். டாக்டரின் நண்பர்களில் யாரேனும் ஒருவர் அவரைச் சந்திக்கும்போது ''அந்த யோகி எழுதியுள்ள அந்தப் புத்தகத்தில் இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது'' என்ற முன்னுரையுடன்தான் பேச்சைத் துவங்குவர். இனிய உரையாடல் அதனை அடுத்து நிகழும். இத்தகைய கலந்துரையாடலில் டாக்டர் ஈடுபட் டிருக்கும்போது உண்மை என்னும் முத்தைத் தேடிப் பிடிக்க ஆன்மீக ஞானம் என்னும் கடலில் ஆழ்ந்து மூழ்கிவிடுவார். டாக்டர் இரவு நேரங் களைப் பெரும்பாலும் இத்தகைய சிந்தனையிலேயே கழித்ததாகவும், அவர் வீட்டைச் சுற்றி நடந்து கொண்டிருப்பார் என்றும், தான் படித்ததையெல் லாம் நினைவுபடுத்திப் பார்த்துக் கொண்டிருப்பார் என்றும் நரசிம்மய்யர் கூறினார். மாறிவரும் உலகம், மின்னலென வந்து போகும் காலம், முடிவிலாது நீடிக்கும் இன்பம் மற்றும் துன்பம், அனைத்து உயிர்களின் வாழ்க்கைக்கும் ஆதாரமாக இருக்கும் விருப்பம் மற்றும் வெறுப்பு ஆகியவை பற்றி அவர் எப்போதும் சிந்தித்துக் கொண்டிருப்பார். சமுதா யத்தின் 'மேட்டுக்குடி' மக்கள் சிலர் செய்கிற தவறு களால் சாலையில் திரியும் பிச்சைக்காரர்களும், தெரு மூலையில் நிற்கும் தொழு நோயாளியும், மருத்துவமனையில் வேதனை அனுபவிக்கும் நோயாளி களும், வறுமையில் வாடுவோரும் அமைதியாகத் தமது துன்பங்களைத் தாங்கிக்கொண்டிருக்கின்றனர்.

இது விஷயமாக குருதேவரின் மனத்தில் ஆழமாக ஏற்பட்டுள்ள உணர்வின் காரணமாக அவர் தனது சுற்றுப்பயணங்களின்போது ''மனிதர்கள் அளவிலாது அல்லற்படுவதைப் பற்றி எண்ணிப் பாருங்கள்'' என்று குறிப்பிடுவார். மக்கள் உலக இன்பங்களை வெறுத்து ஒதுக்கிவிட்டு தன்னலமற்ற தொண்டு நிறைந்த வாழ்க்கையை மேற்கொள்ளுமாறு உபதேசம் செய்வார்.

நாட்கள் செல்லச் செல்ல அவரது சிந்தனை உள்முகமாகச் சென்றது. மின்னிமறையும் தன்மை உடையவற்றுக்கு மத்தியில் எது நீடித்திருக்குமோ, மாறிக்கொண்டிருப்பவைகளுக்கு மத்தியில் எது நிலைத்திருக்குமோ அதனைத் தேடி அவர் ஆழ்ந்து சிந்தித்து வந்தார். இத்தகைய தியான நேரத்தில் அடிக்கடி அவர் முழுமையாக உலக சிந்தனையிலிருந்து விடுபட்டுப் போனார்.

அவர் யோகம் பயிலத் தொடங்கினார். ஒருவனிடம் வண்டியளவு ஞானம் இருந்தாலும் துளியளவுகூட அதனை அவன் செயலில் பயன் படுத்தாவிடில் அதனால் பயன் என்ன என்று தாமஸ் ஏ கேம்பிஸ் சொன்னது அவர் நினைவில் இருந்தபடியால் அவரும் செயலில் இறங்கினார்.

அவர் கீதையைக் கையில் எடுத்துப் பிரித்து ஒரு சுலோகத்தைப் படித்தார். அந்த சுலோகம் வருமாறு :

''அநித்யமசுகம் . லோகமிம்
ப்ராப்த பஜஸ்வ மாம்''

(மாறிக்கொண்டிருக்கிற, துன்பம் நிறைந்த இந்த உலகில் பிறவி எடுத்துள்ள நீ என்னை வணங்கு).

இறைவனுடைய திருநாமத்தை ஜபம் செய்வதில் அதிகமான நேரத்தைச் செலவிட அவர்

அப்போதே நிச்சயித்தார். முறையான வழிபாட்டின் போதும், சாதாரண நேரத்திலும், அடியார்களின் மகத்தான வரலாறுகளைப் படிக்கிறபோதும் அமைதியாக நாமஜபம் செய்ய அவர் உறுதி எடுத்துக்கொண்டார்.

அதன் பிறகு அவர் தொடர்ந்து கீர்த்தனை பாடுவதில் ஈடுபட்டார். சங்கீத வித்வானும் பொறுமைப்படும் அளவுக்கு அவரது குரல் இனிமையாக இருந்தது. இசைக் கருவிகளுடன் கீர்த்தனை செய்தால் இறைவன் மகிழ்ச்சி அடைவார் என்றும் தானும் அதிகமாக பரவச நிலையினை எட்டிப்பிடிக்க முடியும் என்றும் அவர் எண்ணினார். அவர் ஹார்மோனியம் கற்றுக்கொள்ள விரும்பினார். இதற்காக ஒரு ஆசிரியரையும் ஏற்பாடு செய்து கொண்டார். ஒன்றரை மாதத்தில் மிகச் சிறப்பாக ஹார்மோனியம் வாசிக்கக் கற்றுக்கொண்டார். ஆசிரியர் எதிர்பார்த்த தொகையைப் போல் பத்துமடங்கு தொகையை அவருக்குக் கொடுத்தார். ஹார்மோனியம் வாசிக்கும்போது அனுபவத்தில் மேலும் பல விஷயங்களை கற்றுக்கொண்டார். டாக்டர் தனது பூஜை அறையில் ஒவ்வொரு நாளும் மாலையில் நரசிம்மய்யர் மற்றும் சில நண்பர்களுடன் கீர்த்தனையில் ஈடுபட்டிருக்கும்போது அவரது கண்களிலிருந்து நீர் பெருகி வந்து கன்னங்களில் வழிந்தோடும். அந்த அளவுக்கு அவர் பக்திப் பரவசத்தில் ஆழ்ந்து விடுவார். பூஜை அறையிலிருந்து எல்லோரும் சென்றுவிட்ட பின்னரும் இரவு வெகு நேரம் வரை டாக்டர் திவ்ய நாம பஜனை செய்து கொண்டிருப்பார். இவ்வாறு பகலும் இரவும் கடவுளின் குழந்தைகளுக்குத் தொண்டு செய்வதிலும், கடவுள் பெயரை ஜபம் செய்வதிலும் அவர் பெரும்பகுதி நேரத்தைச் செலவிட்டார். அவரது சொந்த வேலைகளுக்கும் ஓய்வுக்கும் மிகக்

குறைவான நேரத்தை மட்டும் ஒதுக்கிக் கொள்ளுவார்.

டாக்டர் தனது வீட்டிலுள்ள ஒரு ஹாலை நாடகம் நடத்துவதற்காக ஒதுக்கினார். அங்கு ஒரு மேடை அமைத்து அலங்கரித்தார். அருகிலுள்ள குழந்தைகளை அழைத்துவந்து மகான்களின் வாழ்க்கை வரலாற்று நாடகங்களில் பயிற்றுவித்து நடிக்க வைத்தார். சில சமயங்களில் தானும் இந்த நாடகத்தில் பங்கு கொள்ளுவார். மகான்களின் உயர்ந்த லட்சியம் அவரது மனக்கண்முன் எப்போதும் பசுமையாகத் தெரிந்தது.

டாக்டரின் தொடர்பில் வந்த அனைவரும் அவரிடத்தில் உள்ள அருங்குணங்களால் கவரப் பட்டனர். முதலில் அவரைக் கேலி செய்தவர்கள் பிறகு அவருடன் சேர்ந்து கொண்டனர். நரசிம்ம ஐயரும் டாக்டரின் சொல்லிலும் செயலிலும் உற்சாகம் பெற்றார். அவர் பிராணாயாமம், த்ராடக் மற்றும் பிற ஹடயோகப் பயிற்சிகளைச் செய்யத் துவங்கினார். அவருக்கு அப்போதுதான் திருமணம் ஆகியிருந்தது. இல்லற இன்பத்தை அவர் இன்னும் அனுபவிக்கவில்லை. இந்த நிலையில் அவர் அழுக்கேறிய, கிழிந்த ஆடைகளை உடுத்தத் துவங்கினார். வாழ்க்கையின் அடிப்படைத் தேவை களைப் புறக்கணித்தால், பேரானந்தத்தைத் தரும் அமர வாழ்வு பெறலாம் என அவர் எண்ணினார். அவர் முடிதிருத்திக் கொள்ளுவதை நிறுத்தினார். காதில் அணிந்திருந்த தோட்டைக் கழற்றி வைத்து விட்டார். சுருங்கச் சொன்னால் அவர் தன் உருவத்தை மாற்றிக்கொண்டார். அவருக்கு ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் அறைக்குள் அமர்ந்து பிராணாயாமம் அல்லது சிரசாசனம் செய்வதில் ஈடுபடுவார். இதனால் அவரது உடல்

நலம் பாதிக்கப்பட்டது. அவர் ஹடயோகம் பற்றிய புத்தகத்தைப் பார்த்து யோகப் பயிற்சிகளைச் செய்தார். எவருடைய உதவியையும், வழிகாட்டு தலையும் அவர் பெறவில்லை. அவரது உடல் நலம் குன்றியது. பயிற்சிகளை முறையாகச் செய்யாதது தான் இதற்குக் காரணம். உள்ளுக்குள் குடி கொண்டிருந்த வாசனைகளும் அவரை வாட்டின.

நரசிம்மய்யரிடத்தில் ஏற்பட்ட மாற்றத்தை டாக்டர் கவனித்தார். குருதேவர் எவருடைய நிகழ் முறையிலும் திடீரென்று மாறுதல் செய்ய மாட்டார். அன்றும் இன்றும் அப்படித்தான். பிறர் செய்வது தவறு என்றாலும் அதைத் திருத்து வதில் அவசரப்படமாட்டார். ஒரு நாள் காலையில் நரசிம்மய்யர் பிராணாயாமம் செய்து கொண்டிருந்த இடத்துக்கு டாக்டர் எதிர்பாராதவிதமாக வந்து சேர்ந்தார். அந்த நேரத்தில் சிறிதளவு உபதேசம் செய்தார்; "நீங்கள் இதில் இப்போது இவ்வளவு தீவிரமாக ஈடுபட்டிருக்க வேண்டாம். இந்தப் பயிற்சிகள் சம்பந்தமான நூல்களை எழுதுகிற ஆசிரியர்கள், இந்தப் பயிற்சியில் ஈடுபடுகிற சாதகர் களின் நடைமுறைக் கஷ்டங்களைப் பற்றிக் கவலைப் படாமல் மனதுக்குத் தோன்றியதையெல்லாம் எழுதுகிறார்கள். அவர்களுடைய எழுத்துக்கள் ஒருதலைப்பட்சமாக இருக்கிறது. அவர்கள் ஒருங் கிணைந்த முறையினை விளக்கிச் சொல்லுவதில்லை. அவர்கள் அடிக்கடி அடிப்படையான விஷயங்களை அலட்சியம் செய்துவிட்டு, ஆன்மீகப் பயிற்சிகளில் முன்னேறிய நிலைகளைப்பற்றி விரிவாக விளக்கு கின்றனர். அவர்கள் தாம் விளக்கியுரைத்துள்ள பயிற்சிகளை ஒரு வழிகாட்டியில்லாமல் செய்யக் கூடாது என்று சொல்லுவதில்லை; அப்படிச் சொன்னால் தமது புத்தகங்கள் விற்பனையாகாது என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஹடயோகப்

பயிற்சிகளை அனுபவம் பெற்ற ஆசிரியர் ஒருவர் மூலம்தான் கற்றுக் கொள்ள வேண்டும். ஆனால் நாம ஜபம் செய்ய எவருடைய உதவியும் தேவை யில்லை. ஆகவே நாம ஜபம் செய்யுங்கள். இந்தப் பயிற்சிகளைச் செய்யாதீர்கள். உடல் ஆரோக் கியத்தைப் பேணுவதற்குத் தேவையான அளவில் மட்டும் பயிற்சிகளைச் செய்யுங்கள்''. டாக்டரின் கருத்து நரசிம்மய்யருக்குச் சரியெனப்பட்டது. அவ்வாறே செயல்படச் சம்மதித்தார்.

ஆனாலும் ஆன்மீகப் பாதையில் செல்ல அவர் பேரார்வம் கொண்டிருந்தார். டாக்டர் இதனைக் கவனித்தார். ஒரு நாள் நரசிம்மய்யர் டாக்டரிடம் பேசிக்கொண்டிருக்கும் போது தான் உலக வாழ் வைத் துறந்து இமயமலைக்குச் சென்று யோகி ஒருவரைக்கண்டு, இறைவனைக்காண வழிகாட்டும் யோகப் பயிற்சிகளைக் கற்றுக்கொள்ளப்போகிறேன் என்று சொன்னார். டாக்டர் குப்புசாமி இதைக் கேட்டு வாய்விட்டுச் சிரித்தார். ''பொறுமையாக இருங்கள். குடும்ப வாழ்க்கையைத் திடீரென்று துறந்துவிடாதீர்கள். திருமணம் செய்து கொண் டிருக்கிற நீங்கள், இல்லறக் கடமைகளை நிறை வேற்ற வேண்டும். இல்லையெனில் பராசக்தியின் சாபத்துக்கு நீங்கள் ஆளாக நேரிடும். அது உங்கள் ஆன்மீக வளர்ச்சியைத் தடை செய்யும். இன்னும் காலம் இருக்கிறது. கடவுள் உங்களுக்கு நல்வழி காட்டுவார். நீங்கள் குடும்ப பந்தத்திலிருந்து எப்போது விடுவிக்கப்படவேண்டும் என்பதை கடவுள் நிச்சயிப்பார். அப்போது கடவுளின் கருணையால் உங்களுக்கு வழிகாட்டும் யோகியை நீங்கள் இமயமலையில் சந்திக்கலாம்'' என்று டாக்டர் கூறினார். குருதேவர் அப்போது தனக்குள்ளே எழும்பிய ஒரு குரலை உணர்ந் திருப்பார் எனத் தோன்றுகிறது. டாக்டர்

விரைவிலேயே இந்த உலகைத் துறந்து, கடுந்தவம் புரிந்து அதன் மூலம் தனது பூர்வாஸ்ரமப் பணியாளாகிய நரசிம்மய்யரை தனது சீடனாக ஏற்றுக்கொள்ளும் தகுதியினைப் பெறப் போகிறார் என்ற செய்தியை அந்தக் குரல் தந்திருக்கக்கூடும். பிற்காலத்தில் அவ்வாறே நிகழ்ந்தது.

நரசிம்மய்யர் சொல்லிய சம்பவங்களின் இறுதிக் கட்டத்திற்கு நாம் வந்திருக்கிறோம். மேலே குறிப்பிடப்பட்ட சம்பவத்திற்குப் பிறகு நரசிம்மய்யர் டாக்டரை விட்டுப் பிரிய வேண்டியிருந்தது. நரசிம்மய்யரை சிங்கப்பூரில் தங்கி வியாபாரத்தில் ஈடுபடுமாறும் அதற்குத் தேவையான முழு உதவியையும் தான் அளிப்பதாகவும் டாக்டர் உறுதியளித்தார். ''ஒரு உணவு விடுதியைத் துவக்குங்கள். அதற்கான முதலீட்டுத் தொகையை நான் தருகிறேன். உங்களுக்குத் தேவையான வாடிக்கையாளர்களுக்கு நான் ஏற்பாடு செய்கிறேன். கடைக்குச் செல்லுங்கள்; உங்களுக்குத் தேவையான எல்லாப் பொருட்களும் என் பொறுப்பில் உங்களுக்குத் தரப்படும். ஒவ்வொரு மாதமும் முதல் தேதியன்று யார் யார் எவ்வளவு தரவேண்டும் என்று சொல்லுங்கள். மறு நாள் காலை உங்களுக்குக் காசோலை (Cheque) கிடைக்கும்'' என்று டாக்டர் கூறினார். ஆனால் இறைவன் திருவுள்ளம் வேறுவிதமாக இருந்தது. நரசிம்மய்யர் இந்தியாவுக்குத் திரும்ப வேண்டியிருந்தது. நரசிம்மய்யரிடம் பயணச் செலவுக்கு எவ்வளவு பணம் தேவைப்படும் என்று டாக்டர் கேட்டார். ''சுமார் 40 டாலர் தேவைப்படும்'' என்று நரசிம்மய்யர் பதிலளித்தார். டாக்டர் ரயில் நிலையத்துக்கு ஓடினார். சிங்கப்பூருக்கு இரண்டாம் வகுப்பு டிக்கெட் ஒன்றைப் பதிவு செய்து கொண்டு திரும்பி வந்தார். ரயில்

நிலையத்தில் நரசிம்மய்யரை வழியனுப்பும்போது டாக்டர் அவர் கையில் 64 டாலர்கள் கொடுத்து, ''இதை உங்கள் செலவுக்காக வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார். நரசிம்மய்யரால் எதுவும் பேச இயலவில்லை; அவர் உணர்ச்சிவயப்பட்டார். ''இது போதுமா? உங்களுக்கு ஏதேனும் கஷ்டம் ஏற்பட்டால் எனக்கு எழுதத் தவறாதீர்கள்'' என்று டாக்டர் கூறினார். நரசிம்மய்யர் விம்மி விம்மி அழுதுவிட்டார். இத்தகைய பண்பாளரான எஜமானரைப் பிரிந்து செல்வதா? நரசிம்மய்யர் அடைந்த வேதனையை விவரிக்கச் சொற்கள் இல்லை. டாக்டரும் கண்கலங்கிவிட்டார். ரயில் புறப்பட்டதும் கையை உயர்த்தி நரசிம்மய்யரை வழியனுப்பி வைத்தார். அப்போது டாக்டர் அடிக்கடி தனது முகத்தைத் துடைத்துக் கொண்டதை நரசிம்மய்யர் கவனித்தார்.

பயணம் செய்த நேரம் முழுவதும் நரசிம்ம ஐயர் டாக்டரையும் அவரது தெய்வீகக் குணங்களையும் மட்டுமே நினைவிற்குக் கொண்டு வந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். குருதேவரின் அன்பு என்னும் நெருப்பில் நரசிம்மய்யரின் இதயம் உருகியது. கண்ணனைப் பிரியும்போது கோபியர் அடைந்த வேதனையைப்போல் டாக்டரைப் பிரிந்த நரசிம்மய்யரும் வேதனை அடைந்தார். அவரது ஏக்கத்துக்குப் பலன் இல்லாமற் போகவில்லை. சில ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் தனது எஜமானரிடம் வந்து சேர்ந்தார். இப்போது அவர் பணத்தை நாடி வரவில்லை. அதைவிட உயரிய பொருளை நாடி வந்தார், வேலையாளாக வரவில்லை; சீடனாக வந்தார். மலேயாவில் டாக்டரைப் பிரிந்து சென்று 22 ஆண்டுகள் கழிந்த பின்னர் அவரை ஒரு துறவியாக கங்கைக்கரையில் நரசிம்மய்யர் தரிசித்தபோது அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. குருதேவரின்

வாக்கு அப்படியே உண்மையாகிவிட்டதே! குருதேவர், எதிர்காலத்தில் நிகழப்போவதை தீர்க்க தரிசனத்தால் கண்டு, சொல்லமுடியும் என்பதும் நூற்றுக்கு நூறு அப்படியே நிகழும் என்பதும் எவ்வளவு உறுதியாகிவிட்டது!

## 12. நன்றி, மலேயா!

மலேயாவுக்கு நன்றி தெரிவித்துவிட்டுப் புறப்படுவதற்கு முன்னதாக அங்கு வாழ்ந்திருந்த காலத்தில் டாக்டர் சாதித்தவற்றை மேற்போக்காகக் காண்போம். இந்தக் காலகட்டத்தில்தான் டாக்டர் ஒரு யோகியாக வளர்ந்து வந்தார் என்று கருதப்படுகிறது.

டாக்டர் குப்புசாமி செரம்பான் அருகில் எஸ்டேட் மருத்துவ மனையில் ஏழு ஆண்டுகள் பணியாற்றினார். அதன் பிறகு அவர் டாக்டர் பார்சன் ஆலோசனைப்படி ஜோஹுர் மருத்துவ மனையில் சேர்ந்தார். அவர் துறவு மேற்கொள்ளுவதற்கு முன்னதாக மூன்று ஆண்டுகள் இந்த மருத்துவ மனையில் பணியாற்றினார்.

அவர் மலேயாவில் இருந்தபோது சிங்கப்பூரிலிருந்து வெளிவரும் ''மலேயா டிரிப்யூன்'' என்ற பத்திரிகையில் பொது சுகாதாரம் பற்றிய பல கட்டுரைகளை எழுதியிருக்கிறார். குருதேவர் எழுத்துப் பணியில் ஈடுபடாத நாளே இல்லை. அவர் தன்னிடமுள்ள அறிவையும், ஞானத்தையும் பிறருடன் பகிர்ந்துகொள்ளுவதில் அந்த அளவுக்கு ஆர்வம் கொண்டிருந்தார்.

அவர் மலேயாவில் இருந்தபோது ''நோய் மற்றும் மருந்து சம்பந்தமான விசேஷ ஆராய்ச்சியில்

ஈடுபட்டிருந்தார். லண்டனில் உள்ள ராயல் இன்ஸ் டிட்யூட் ஆஃப் பப்ளிக் ஹெல்த் என்ற ஸ்தா பனத்தில் அவர் உறுப்பினரானார். லண்டன் ராயல் சானிடரி இன்ஸ்டிட்டியூட்டிலும் அவர் சேர்ந்தார். அவர் மருத்துவம் சம்பந்தமாகப் பல நூல்களை எழுதினார். அவற்றில் "வீட்டு வைத்தியம்" (House hold Remedies)" பழங்களும் ஆரோக்கியமும் (Fruits and Health), "நோய்களும் அவற்றின் தமிழ்ப் பெயர்களும் (Diseases and their Tamil terms) "பொது சுகாதாரம் பற்றிய பதினான்கு சொற்பொழிவுகள்" (Fourteen lectures on Public Health) ஆகியவை குறிப்பிடத்தக்கவை. "வீட்டு வைத்தியம்" என்ற நூல் மிகச் சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தது. அவர் மிகச் சிறந்த தகுதி வாய்ந்த டாக்டராக இருந்தபோதிலும் வீட்டு வைத்தியத்தில் அவருக்கு அபாரமான நம்பிக்கை இருந்தது சிறு சிறு நோய்களுக்காகக் கூட மக்கள் மருத்துவரை நாடிச் செல்ல வேண்டியதில்லை என்று அவர் கருதினார். இதன்மூலம் மக்களுக்கு நேரமும் பணமும் விரயமாவதைத் தவிர்க்கலாம் என்றும் அவர் கருதினார், குருதேவர், ஐம்பது ஆண்டு களுக்குப் பிறகு "நடைமுறை வீட்டு வைத்தியம்" என்ற பெயரில் மிகவும் பயனுள்ள புத்தகம் ஒன்றை எழுதினார். வீட்டு வைத்தியத்தில் அவர் எந்த அளவுக்கு நம்பிக்கை கொண்டிருந்தார் என்பதை இது மேலும் தெளிவாக்கியது.

குருதேவர் தனது சுயசரிதையில் பின்வருமாறு எழுதியிருக்கிறார். "நான் வேடிக்கையாகப் பேசி மக்களை உற்சாகப்படுத்துவேன். அவர்களிடம் அன்பாகப் பேசியும் தைரியமூட்டும் வார்த்தை களைச் சொல்லியும் நோயாளிகளை குணப்படுத்து வேன். மிகவும் உடல் நலம் குன்றிய நிலையிலுள்ள நோயாளிகளை இரவில்கூட கவனித்துப் பார்த்துக்

கொள்வேன். நோயாளிகளுடன் இருக்கும்போது அவர்களுடைய உணர்வுகளை நான் புரிந்து கொள்ளு வேன். அவர்களுடைய துன்பங்களைப் போக்கப் பாடுபடுவேன். நான் பணியாற்றிய மருத்துவ மனையில் பல இளைஞர்களுக்கு பயிற்சி அளித்து பல்வேறு எஸ்டேட் மருத்துவ மனைகளில் அவர்கள் பணியாற்ற ஏற்பாடு செய்தேன். அனுதாபம் நிறைந்த இதயத்துடன் இரவும் பகலும் ஏழை களுக்கும், நோயாளிகளுக்கும் தொண்டு செய் வதன் மூலம் மனிதர்களின் துன்பங்களைப் போக்கு வதற்காக என்னுடைய சக்தி முழுவதையும் செலவிட்டேன். இத்தகைய தன்னலமற்ற தொண்டு என் இதயத்தையும், மனத்தையும் தூய்மைப் படுத்தி ஆன்மீகப் பாதையில் என்னை அழைத்துச் சென்றது.

புத்தக விற்பனை நிலையத்தாரின் அதிர்ஷ்டம் டாக்டரை புத்தக விற்பனை நிலையத்திற்கு வரவழைக்கும் என்பதனை முன்னரே குறிப்பிட் டோம். டாக்டர் சில சமயங்களில் நகைக் கடைக்கும் செல்லுவார். நகைகளை அணிந்து கொள்ளுவதற்காக அவர் வாங்குவதில்லை. கடைக் காரருக்கு வியாபாரம் ஆகவேண்டுமென்பதற் காகவே அவர் வாங்குவார். இதுபற்றி குருதேவர் தனது சுயசரிதையில் பின்வருமாறு குறிப்பிட் டிருக்கிறார். இளம் வயதில் ஆடம்பரமான உடைகள் மீது எனக்கு விருப்பம் இருந்தது. தங்கம், வெள்ளி மற்றும் சந்தனத்தாலான பொருட்களை வாங்குவதில் எனக்கு நாட்டம் இருந்தது. சில நேரங்களில் பலவகையான தங்க மோதிரங்களை வாங்குவேன். எல்லாவற்றையும் ஒரே நேரத்தில் கைகளில் அணிந்து கொள்வேன். ஒரு கடைக்குள் நான் நுழைந்தால் பொருட்களைத் தேர்ந்தெடுப் பதில் நான் நேரத்தை வீணுக்குவதில்லை. கண்ணில்

பட்டவற்றையெல்லாம் கையில் எடுத்துக்கொள்வேன். பேரம் பேசுவதிலும் எனக்கு விருப்பமில்லை. கடைக்காரர் தரும் பில் சரியாக இருக்கிறதா என்று நான் பார்ப்பதில்லை. பில் தொகையை அப்படியே கொடுத்துவிடுவேன்''

டாக்டர் குப்புசாமி இந்தியாவிலுள்ள தனது இல்லத்துக்கு இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை வருவார். ஒருமுறை அவர் தனது சொந்த ஊருக்குத் திரும்பியிருந்தபோது நிகழ்ந்த சம்பவமொன்றை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். குருதேவரின் பள்ளிக் கால நண்பர் திரு. கே. எஸ். கணபதி சாஸ்திரிகளின் வார்த்தைகளில் அதனைக் கீழே குறிப்பிடுகிறோம். ''ஒருமுறை அவர் மலேயாவிலிருந்து வந்திருந்தபொழுது ஒரு சிறு சம்பவம் நிகழ்ந்தது. அது மழைக் காலம். தாமிரபரணி ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அவர் ஏதோ ஒரு வேலையாக ஆற்றின் மறுகரைக்குச் செல்ல வேண்டியிருந்தது. படகு மறுகரையை நெருங்கிய பொழுது ஒரு சிறு தவறு காரணமாக படகோட்டியின் கட்டுப்பாட்டை மீறி படகு தண்ணீரில் இழுத்துச் செல்லப்பட்டது. படகில் பதினைந்து பேர்களுக்குமேல் இருந்தனர். அவர்கள் உதவி கோரிக் கதறினர். கூக்குரல் இட்டனர். அப்பொழுது ஒரு அதிசயம் நிகழ்ந்தது. ரங்கசாமி என்ற ஒரு நகைத்தொழிலாளி அனைவரும் வியப்பும் மகிழ்ச்சியும் அடைகின்ற வகையில் படகிலிருந்து குதித்து அருகிலிருந்த ஒரு பாறைமீது ஏறி நின்றார். படகிலிருந்து வீசப்பட்ட கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பாறையை நோக்கிப் படகை இழுத்தார். படகு ஆபத்தில் இருந்து தப்பியது. அது இறைவனால் காப்பாற்றப்பட்டது. எதிர் காலத்தில் மனித குலத்தைக் காப்பதற்காக

அவதாரம் எடுத்திருப்பவர் அந்தப் படகிலேயே அமர்ந்து கொண்டு தனது பிரார்த்தனை மற்றும் சங்கற்பத்தின் மூலம் அவரைக் காத்துக்கொண்டிருந்த பொழுது படகு எப்படி ஆபத்தில் சிக்கி அழிந்து போக முடியும்?''

டாக்டர் குப்புசாமி (முதலை தன் கால்களைப் பற்றிக் கொண்ட பொழுது ஆதிசங்கரர் மேற்கொண்டதுபோல) மனத்தளவில் துறவு மேற்கொண்டாரா? ஒருவேளை அவ்வாறு நிகழ்ந்திருக்கலாம். ஆனால் அதிசயிக்கத்தக்க வகையில் அவர் இந்த விபத்திலிருந்து தப்பியதின் மூலம் அவருடைய உள்ளத்தில் ஒருவித மாற்றம் ஏற்பட்டிருக்கவேண்டும். அழியும் இந்த உலக வாழ்க்கையும், அதிசயிக்கத்தக்க வகையில் பாது காப்பளிக்கும் இறைவனின் கருணையும் அவர் மனக்கண்முன் தோன்றியது. அவற்றை அவர் அனுபவித்தார். ஆண்டவன் அற்புதமாகக் காத்த இந்த வாழ்க்கையை அவனுக்கே அர்ப்பணம் செய்ய டாக்டர் தயக்கமின்றி ஆவல் கொண்டார்.

நீங்கள் துறவறம்பற்றி எண்ணும்போது முதலில் புத்த பகவான் உங்கள் நினைவிற்கு வருவார். அடுத்தபடியாக நமது குருதேவர் உங்கள் மனக்கண் முன் தோன்றுவார். பிரமிக்கச் செய்யும் அந்தச் சம்பவம் குருதேவர் மூலமாக மீண்டும் நிகழ வேண்டும் என்று இறைவன் விரும்புகின்றானா? இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக மக்கள் இத்தகைய துறவு மனப்பான்மையைக் கண்டதில்லை. பிச்சைக்காரன் துறப்பதற்கு என்ன இருக்கிறது? அரசகுமாரனாகிய சித்தார்த்தன் துறவு மேற்கொண்டதை எண்ணிப்பார்க்கிற நாம் ஆச்சரியப்படுகிறோம். புத்தராகிய சித்தார்த்தனைப் பாராட்டுகிறோம். வீரர்களுக்கு மத்தியில் மாவீரர்

களாகத் தோன்றும் இருவரும் நமக்கு இப்படித் தான் காட்சியளிக்கிறார்கள். புத்தரும் குருதேவரும் சம்சாரக்கடலில் சிக்காமல் தப்பித்துக்கொண்டனர் மாயையைத் தோற்கடித்தனர். சிங்கத்தை அதன் குகையிலேயே சந்தித்தனர்.

டாக்டர் குப்புசாமி மலேயாவில் இருந்தபோது எவ்வாறு அனைவரையும் கவர்ந்தார் என்பதை நாம் ஏற்கனவே கண்டோம். அவரது புகழ் ஓங்க, ஓங்க, அவரது நண்பர்களின் எண்ணிக்கையும் வளர்ந்து கொண்டே போயிற்று. அவர் மேற் கொண்ட எந்தப்பணியிலும் வெற்றி கண்டார். தோல்வி என்பது அவரது வாழ்வில் ஒரு அர்த்த மற்ற சொல். செல்வச் செழிப்பிலும் உலக வாழ்க் கையிலும் அவருக்குக் குறை எதுவும் இல்லை. மலேயா மக்களுக்கு மத்தியில் அவர் தலைவராக விளங்கினார். விழாக் காலங்களில் அவர் சிறப்பு விருந்தினராக கௌரவிக்கப்பட்டார். அவர் ஒரு இளவரசர்போல இருந்தார். மக்கள் அனைவரும் அவர் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடந்து கொண்டனர். அவரை எந்தவிதமான விதிமுறை களும், தடைகளும், சம்பிரதாயங்களும் கட்டுப் படுத்தியதில்லை. வங்கியிலுள்ள அவரது கணக்கில் பணம் இல்லை என்றாலும் அவரது காசோலைக்கு பணம் தரப்படும், வங்கி விடுமுறை தினத்திலும் கூட அவரால் பணம் பெறமுடியும். கப்பல் பணி யாளர்கள் இவர் துறைமுகம் நோக்கி வருவதைக் கண்டால் கப்பலை கரைக்குக் கொண்டுவந்துவிடு வார்கள். சுருங்கச் சொன்னால் அவர் நாவசைந் தால் அந்த நாடே அசைந்தது. மாயை அத்தகைய இன்ப மாளிகையை உருவாக்கித் தந்திருந்தாள். இளவரசன் சித்தார்த்தனுக்கும் அவரது தந்தை யாகிய மன்னன் இதுபோலத்தான் இன்ப மாளிகையை உருவாக்கித் தந்திருந்தான்.

சித்தார்த்தன் துறவு பூண்டுவிடக் கூடாது என்ற எண்ணத்தில் அவன் இவ்வாறு செய்திருந்தான். டாக்டரின் இல்லத்தில் அவரது அன்புத் தாயாரும் சகோதரர்களும் இருக்கின்றனர். அவர்கள் எழுதுகிற ஒவ்வொரு கடிதமும் ஆழ்ந்த அன்பையும் மதிப்பையும் தாங்கி வந்தன.

சமய உணர்வு குழந்தைப் பருவத்திலேயே அவரிடத்தில் மேலோங்கி நின்றது. இந்த உணர்வு இல்லாதிருந்திருந்தால் அவர் ஒரு நல்ல மனிதராக விளங்கியிருப்பார். தெய்வ மனிதராக உயர்ந் திருக்கமாட்டார். அளவிலா உதார குணமும், பக்தியும் கொண்டு டாக்டர்தொழிலில் ஈடு பட்டிருந்த அவர் அளவிலாப் புகழ் பெற்றிருக்கக் கூடும்.

ஆனால் அவ்வாறு நிகழவில்லை. நரசிம்மய்ய ருடன் உரையாடும் போதும், நண்பர்களுக்குக் கடிதங்கள் எழுதியபோதும் அவர் தனது மனப் பான்மையைத் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

அவர் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:—

''என்னிடமிருந்த செல்வத்தைக் கொண்டு நான் தர்மம் செய்ய வாய்ப்பு இருந்தது. ஆனால் அது உடல் ரீதியான தொண்டாகத்தான் இருக்கும். உண்மையான தொண்டு ஆன்மீகத் தொண்டு என்றும், அது மட்டுமே மக்களின் துன்பத்தை நிரந் தரமாகப் போக்க முடியும் என்றும் நான் கேள்விப் பட்டிருக்கிறேன். நான் பிறருக்கு ஆன்மீகச் செல் வத்தை வாரி வழங்குவதற்கு முன்னால் அதனை நான் சேகரித்துக்கொள்ள வேண்டும்.

''இலக்குமிதேவி தான் ஓரிடத்தில் நிலைத்திருக் காமல் தண்ணீரைப்போலப் பாய்ந்து ஓடிக் கொண் டிருக்கிறாள் என்று ஆதிசங்கரர் அறிவிக்கவில்லையா?

தொண்டு செய்வதற்கு எனக்குக் கிடைத்துள்ள இந்த வாய்ப்பையும் எவ்வளவு விரைவில் இழந்து விடுவேனே, யாரறிவார்? வாழ்க்கை இரவிலும், பகலிலும் கரைந்து கொண்டிருக்கிறது. விரைந்து செல்லும் காலம் திரும்பி வருவதில்லை. காலம் உலகை விழுங்குகிறது; இது உண்மை. அற வாழ்க்கை வாழ்கிறேன் என்ற தவருன நம்பிக்கை கொண்டிருக்கிற நான், ஏமாற்றப்பட்டுவிட்டேன் என்று வருங்காலத்தில் உணர மாட்டேனு?

'உடலை அழியா ஆத்மாவுடன் சம்பந்தப் படுத்துகிறவரை துன்பம்தான் ஏற்படும். உலகில் லட்சக்கணக்கான டாக்டர்கள் வந்து நோயாளி யைக் 'குணப்படுத்திவிட்டுச்' சென்றிருக்கின்றனர். ஆயினும் கூட உலகம் முன்னேறவில்லை. இந்த நிலை நீடிக்கவிடமாட்டேன். குலசேகரர் எந்த மருந்தை உண்டு ஆனந்தம் அடைந்தாரோ அந்த அற்புத மருந்தை — இல்வாழ்க்கை தரும் வேதனை யைப் போக்கும் மருந்தை — தயாரிக்கும் முறையை நான் கண்டுபிடிக்க வேண்டும்.

வ்யா மோஹப்ரஸ மௌஷத்
முனிமனோவிருத்திப் ப்ரவ்ருத் யௌஷதம்
தைத்யேத்ராதி கரௌஷதம் த்ரிஜகதாம்
ஸஞ்சீவதை கௌஷதம்
பக்தாத்யந்த ஹிதௌஷதம்
பவபயப்ரத்வம்ஸ னை கௌஷதம்
ஸ்ரேய: ப்ராப்திக ரௌஷதம் பிப
மன ஸ்ரீ கிருஷ்ண திவ்யௌஷதம்

— முகுந்தமாலை 14

''மனமே, மனிதனை மயக்கும் மாயையைப் போக்கும் தெய்வீக மருந்தைக் குடி. ரிஷிகளின் மனதில் பரவசத்தைத் தோற்றுவிக்கும் மருந்தைக்

குடி. அசுர சக்திகளுக்குத் துன்பம் தரும் மருந்தைக் குடி. இது மூன்று உலகுக்கும் உயிர்ச் சக்தியாக விளங்குகிறது; பக்தர்களுக்கு மகிழ்ச்சி தருவதாக இருக்கிறது. உலக வாழ்க்கையைப் பற்றிய அச்சத்தை இது முழுமையாகப் போக்குகிறது. புகழைத் தருகிறது. குடி மனமே குடி; ஸ்ரீ கிருஷ்ணனின் திவ்ய நாமம் என்னும் அமுதத்தைப் பருகு''.

— முகுந்தமாலை

''பிறப்பு இறப்பு என்னும் துன்பத்துக்கு முடிவு கட்டுவதற்குத் தேவையான சிகிச்சையை எனக்கு நானே அளித்துக் கொள்ளவேண்டும். இந்தத் துன்பத்தைத் துடைக்கும் வழியை நான் கண்டு கொண்ட பின்னர் அதனை உலகுக்குப் பறைசாற்ற வேண்டும்.

''நிலையான பேரானந்தம் பெற வழிகாட்டும் ஞானத்தை நான் பெறவேண்டும். அந்த நிலையை நான் அடைந்துவிட்டால் எனது சகோதரர்களுக்கு நான் இன்னும் அதிகமாகத் தொண்டு செய்ய முடியும். தம்மபதத்தில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளதை நான் பின்பற்றினால்தான் இது சாத்தியமாகும். ''அறிவுடையவர்கள்.... குடும்ப வாழ்க்கையிலிருந்து விலகட்டும். குடும்பம் இல்லாத இடத்துக்கு அவர்கள் செல்லட்டும். பற்றற்ற தன்மையின் மதிப்பை அவர்கள் அளவிட்டுப் பார்க்கட்டும். புலன் இன்பங்களையும் மற்றும் அனைத்தையும் அவர்கள் துறந்துவிடட்டும். மனத்திலுள்ள அழுக்குகள் அனைத்தையும் அவர்கள் போக்கிவிடட்டும்''.

''சமய நூல்கள் துறவுநிலை பற்றி உயர்வாகப் பேசுகின்றன. துறவுமூலம்தான், முக்தி அடைய முடியும் என அவை கூறுகின்றன. பணிகள்,

எவ்வளவு உயர்வானவையாகவும், தர்மத்தின் பாற்பட்டதாகவும் இருந்தாலும் அவை மூலம் முக்தி அடைந்துவிட முடியாது.

''நான் துறவு பூணவேண்டும். ஆம். ஆம். ஆம். எனது இதயத்தின் அடித்தளத்திலிருந்து குரல் எழும்புவதை உணருகிறேன். 'உலகைத் துறந்துவிடு'' என்று தாங்கள் சொல்லுவதை நான் கேட்கிறேன். என்ன! இப்போது நள்ளிரவு ஆகி விட்டதே! இனி உறங்க முடியாது. நாளை காலையில் எனது உடமைகளை எடுத்துக் கொண்டு அமர வாழ்வு தரும் இடத்தைத் தேடிச் செல்லப் போகிறேன்.

''இப்பொழுதே நான் இறைவனை உணர்ந்து கொள்ள வேண்டும்''.

---

## அத்தியாயம் மூன்று

# அமைதி, சக்தி மற்றும் பூரணத்துவம்

## 13. இறைவா, நீ எங்கு இருக்கிருய் ?

''நீங்கள் அவரைப் பார்த்திருக்கிறீர்களா? அவரை உங்களுக்குத் தெரியுமா? உங்களுக்குத் தெரிந்தால் அவரைப்பற்றி ஒரு வார்த்தை சொல்லுங்கள். அவர் இப்போது எங்கு இருக்கிருர்? எப்படி இருக்கிருர்?''

ரயிலில் பயணம் செய்துகொண்டிருந்த முதியவர் ஒருவர் தன் அருகில் பயணம் செய்து கொண்டிருந்த இளைஞரிடம் இவ்வாறு கேள்விக் கணைகளை வீசினுர்.

அந்த இளைஞர் வேறு யாருமல்ல, நமது நரசிம்ம ஐயர்தான்; அந்த முதியவர் டாக்டர் குப்புசாமி அவர்கள் குடும்பத்துப் பெரியவர்.

பெரியவர் அருகிலிருந்தவரிடம் பேசிக்கொண்டிருந்தார். பேச்சுவாக்கில் குப்புசாமியின் பெயரைச் சொன்னார்.

இதைக் கேட்ட நரசிம்மய்யர் ''மலேயாவில் இருந்த டாக்டர் குப்புசாமியைப் பற்றியா நீங்கள் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?'' என்று பெரியவரிடம் கேட்டார். இந்தக் கேள்வி, பெரியவரின் இதயம் என்னும் விளக்கை கொழுந்துவிட்டு எரியச் செய்தது.

பெரியவர் நிலை குலைந்து போனார். நரசிம்ம ஐயருக்கு ஒன்றும் புரியவில்லை. அவர் ஜோஹூர் பாருவை விட்டுப் புறப்படும்போது கவலைப்படும் படியாக அங்கு எதுவும் நிகழவில்லை.

பிறகு நிகழ்ந்தவற்றைப் பெரியவர் நரசிம்ம ஐயருக்குச் சுருக்கமாகச் சொன்னார்.

''டாக்டர் குப்புசாமி ஒரு மாதத்துக்கு முன்னதாக பெட்டி படுக்கையுடன் வந்தார். அவர் நேராகத் தனது சொந்த ஊருக்குச் சென்றார். ரயில் நிலையத்தில் ஒரு வண்டியை அமர்த்தி அதில் பெட்டி, படுக்கை மற்றும் பிற பொருட்களை ஏற்றிக் கொண்டு நேராக வீட்டுக்குச் சென்றார். வீட்டில் உள்ளவர்கள் அந்தப் பொருட்களை இறக்கி வீட்டுக்குள் எடுத்துச் செல்லுவதில் ஈடுபட்டிருந்தனர். திடீரென்று டாக்டர் குப்புசாமியைக் காணவில்லை; எல்லாம் மர்மமாக இருந்தது. அவர் தனது பழைய நண்பர்களில் ஒருவரைக் கண்டு பேசச் சென்றிருக்கலாம் என்று நினைத்து அவர்

வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். நாங்கள் காத்திருந்தோம், காத்திருந்தோம்.... காத்துக் கொண்டே இருந்தோம். வெகு நேரம் ஆகியும் அவர் வராததால் அவரைத் தேடத் தொடங்கினோம். அவரை எங்கும் கண்டு பிடிக்க முடியவில்லை. ஆயினும் அவர் வருகையை எதிர் பார்த்துக் காத்திருந்தோம். நாட்கள் ஓடின; வாரங்கள் கடந்து சென்றன. ஆனால் அவர் இருக்கும் இடம் தெரியவில்லை. நாங்கள் மிகவும் கவலை அடைந்தோம். நாங்கள் எல்லா இடங் களிலும் அவரைத்தேடினோம்; ஆனால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஐயா, நீங்கள் அவரைப் பார்த் தீர்களா? தயவு செய்து சொல்லுங்கள். நீங்கள் அவரைப் பற்றி நிறைய அறிந்து வைத்திருப்ப தாகத் தெரிகிறது''.

நரசிம்மய்யர் இந்தச் சம்பவத்தைக் கேட்டு மனங் கலங்கினார். அவர் கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்து ஓடியது. சிறிது நேரம் அவர் எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தார். பிறகு அவர் நிதானத்துக்கு வந்து, தனக்கும் டாக்டருக்கும் இருந்த தொடர்பினை விவரித்தார். நிகழ்ந்த சம்பவம் தன்னையும் அதிர்ச்சி அடைய வைத்திருப்பதாகக் கூறினார். இதற்கிடையில் பெரியவரின் ஊர் வந்துவிட்டது. அவர் நரசிம்ம அய்யரிடம் விடைபெற்றுச் சென்றார்.

டாக்டர் குப்புசாமி மலேயாவிலிருந்து கொண்டுவந்திருந்த பெட்டி, படுக்கை மற்றும் பிற பொருட்களைப் பரம்பரையாக தமக்குச் சொந்தமான வீட்டுக்குள் எடுத்துச் செல்லுவதில் அவரது உறவினர்கள் ஈடுபட்டிருந்தபோது அவர் எவர் கண்ணுக்கும்படாமல் நேராக ரயில் நிலையத் துக்கு வந்து ரயிலேறி முன்னேற்றப் பாதையில்

தனது பயணத்தைத் துவக்கினார். (மலேயாவில் டாக்டர் தமக்குச் சொந்தமாக இருந்த பொருட்களை அங்கேயே பலருக்கு பங்கு போட்டுக் கொடுத்து விட்டார். ஒவ்வொருவரின் தேவை அறிந்து அவற்றைக் கொடுத்தார். 1939ல் மலேயா விலிருந்து ஆசிரமத்துக்கு வந்த ஒரு பள்ளி ஆசிரியர், ''திருவாளர் எஸ். தாங்கள் கொடுத்த பொருட்களை இன்னும் பத்திரப்படுத்தி வைத்திருக் கிறார். தாங்கள் திரும்பி வருவீர்கள் என்று அவர் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்'' என்று குருதேவரிடம் கூறினார். குருதேவர் மலேயாவில் இருந்தபோது தனது இல்லத்தின் முன்பாக ஒரு துளசிச் செடி வளர்த்து வந்தார்; அதனை தினமும் வழிபட்டு வந்தார். மலேயாவிலிருந்து வந்த மற்றொரு அன்பர், குருதேவர் வளர்த்துவந்த துளசிச் செடியை அவருக்குப்பின் அங்கு பணியாற்ற வந்த டாக்டர்களும் பக்தி சிரத்தையுடன் வளர்த்து வருவதாகக் கூறினார்.)

சொந்த ஊரிலிருந்து ரயில் பயணத்தைத் துவக்கிய டாக்டர் குப்புசாமியின் மனதில் வழக்கத் திற்கு மாறான அமைதி குடிகொண்டிருந்தது.

அவருடைய உள்ளத்தில் ஒரு விருப்பம் இருந்தது. முக்திக்கு வழிகாட்டும் காசி நகருக்குச் செல்லவேண்டும் என்பதுதான் அந்த விருப்பம். தனது பிதுரார்ஜித சொத்தைப் பெறவும், பரம் பொருளைத் தேடிப் பெறவும், இறைவனைத் தேடி அனுபவிக்கவும் தனது எஞ்சிய வாழ்நாளை காசியில் கழிக்க அவர் விரும்பினார்.

குருதேவருடைய சரித்திரத்தை எழுதியவர் களில் குறிப்பிடத்தக்கவரான திரு. இந்திரஜித் சர்மா எம். ஏ., அவர்கள் குருதேவரிடம் நேரடி

யாகக் கேட்ட ஒரு கேள்விக்கு குருதேவர் பின்வருமாறு பதிலளித்தார். ''கடவுளை இப்போதே அனுபவத்தில் உணர வேண்டும் — இந்த எண்ணம் மட்டுமே நான் துறவு பூணும்போது எனது உள்ளத்தில் இருந்தது''. பயணத்தின்போது அவர் பேசவில்லை. புறப்பொருளில் நாட்டம் கொள்ளவில்லை. எதையும் காண விரும்பவில்லை. அவரது கவனத்தைக் கவர எதனாலும் இயலவில்லை. ரயிலுக்குள் வந்துபோகின்ற பயணிகள் எழுப்புகிற கூக்குரலும் இரைச்சலும் அவர் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. அவரது மனம் என்னும் ஏரி அலை பாயாமல் அமைதியாக இருந்தது.

அவர் பெரும்பாலும் தான் இருந்த இடத்தை விட்டு அசையவில்லை. ஆயினும் தனது தாகத்துக்குக் காரணமான பொருளை எண்ணி அவர் தியானித்துக் கொண்டிருந்தார்.

வழியில் தங்கித் தங்கி குருதேவர் காசியை அடைந்தார். அவருக்கு ஹிந்தியில் ஒரு வார்த்தை கூடத் தெரியாது. அவர் அவசியம் தொடர்பு கொள்ள வேண்டிய உணவு விடுதிப் பணியாளர்கள், யாத்திரீகர்களின் வழிகாட்டிகள், சாதுக்கள் ஆகியோருக்கு ஹிந்தி மட்டுமே தெரியும். வேறு மொழிகளில் ஒரு வார்த்தைகூடத் தெரியாது. அவர் கடைக்குப் போய் நிற்பார்; கடைக்காரரர் கையில் எதைப் போட்டாலும் ஏற்றுக்கொண்டு அதற்குரிய தொகையைக் கொடுத்துவிடுவார். மேலும் வட இந்திய மக்களின் பழக்கவழக்கங்கள் அவருக்கு தெரியாது. ஒருநாள் ஒரு கடைக்குச் சென்று பால் அருந்தினார். பால் மண்பாத்திரத்தில் தரப்பட்டது. அவர் பாலை அருந்திவிட்டு, தமிழகத்தில் பயன்படுத்திய பித்தளை டம்ளரை கழுவி சுத்தப்படுத்தி வைப்பதுபோல இந்த மண்

கலயத்தை குருதேவர் கழுவினுர். பின் அதனை அந்தக் கடைக்காரரிடம் கொடுத்தார். கடைக் காரர் முகத்தை எட்டுக் கோணலாகச் சுளித்துக் கொண்டு "அதைத் தூக்கி எறியுகங்ள்" என்ருர். மனிதர்களுக்கு மத்தியில் மன்னரைப்போல வாழ்ந்த அவர் தன்னை அவமானப்படுத்தி கடைக் காரர் பேசியதைப் பொறுத்துக் கொண்டார். "அது அவமானம் என்று நான் கருதினுல் சட்டைப் பொத்தானில் அழகிய ரோஜா மலரை வைப்பது போல அதனை நான் ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று குருதேவர் எண்ணினுர்.

பிரசித்தி பெற்ற விசுவநாதர் ஆலயத்துக்கு அவர் சென்ருர். தனது வாழ்க்கைக் குறிக்கோள் களில் ஒன்றைத் தான் அடைந்துவிட்டதாக அவர் கருதினுர். அவர் அங்கு பிரார்த்தனை செய்தார். மானசீகமாக இறைவனுடன் அவர் உரையாடிக் கொண்டு சிறிது நேரம் அசையாமல் நின்ருர். "பிரபு! உங்களின் தொண்டனுக இங்கு வந்து விட்டேன். என்னை ஏற்றுக் கொள்ளுங்கள். என்னைத் தங்களின் விருப்பப்படி பயன்படுத்திக் கொள்ளுங்கள். பணி செய்வது என் கடமை. பலனை எதிர்பார்ப்பது என் வேலை இல்லை. அதனைத் தாங்கள் கவனித்துக் கொள்ளுவீர்கள். புயற் காற்றில் சருகு அடித்துச் செல்லப்படுவது போன்ற நிலை எனக்கு ஏற்பட்டாலும் அதனை நான் மகிழ்ச்சி யுடன் ஏற்றுக்கொள்வேன். பிரபு! நான் உங்க ளுடைய பக்தன். அனைத்தும் உங்களுடையது. உங்கள் விருப்பம் எதுவோ அவ்வாறே நான் செயல் படுவேன்". கண்ணீர் அவரது கன்னங்களில் பெருக்கெடுத்து ஓடியது. அவர் பரவச நிலையில் காணப்பட்டார்.

ஒன்றை இங்கு குறிப்பிட்டாக வேண்டும். காசி, இமயமலையில் இருப்பதாக அவர் எண்ணிக்

கொண்டிருந்தார். ஆனால் உண்மையில் அவ்வாறு இல்லை என்பதை பிறகு அவர் அறிந்து கொண்டார். அவர் கங்கையில் குளித்தபோது அந்த கங்கை உற்பத்தியாகும் இடம் வடக்கே நூற்றுக்கணக் கான மைல்களுக்கு அப்பால் இருப்பதை உணர்ந்து கொண்டார். அவர் தனித்திருக்க விரும்பினார். புனிதத் தலமாகிய காசி ஒரு நவீன நகரமாக அவருக்குக் காட்சி தந்தது.

இறை அனுபவம் பெற என்ன செய்யலாம் என எண்ணினார். அப்போது அவர் மனதில் தோன்றிய எண்ணத்தைப் பின்பு ஒருமுறை அருளுரையாற்று கையில் குறிப்பிட்டார்: ''நான் ஒரு மரத்தடியில் அமர்ந்து கொண்டு இறைவனின் பெயரை ஜபம் செய்யவும், கீர்த்தனை செய்யவும், தியானம் செய்யவும் விரும்பினேன். என்னைக் கடந்து செல்கிறவர்கள் தருகிற உணவுப் பொருட்களை மட்டும் உட்கொள்ள விரும்பினேன்''.

குருதேவர், 1950-ல் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அகில இந்திய — இலங்கை சுற்றுப் பயணத்தை மேற்கொண்டபோது நாங்கள் காசிக்குச் சென்றோம். காசி இரயில் நிலையத்தில் நாங்கள் இருந்தபோது மலேயாவில் அரண்மனை போன்ற வீட்டில் வாழ்ந்து வந்த குருதேவர் இந்த பிளாட்பாரத்தில் தங்கியிருந்ததைக் குறிப் பிட்டார். அது குளிர் காலம். குளிர் ஆளைக் கொல்லுவதாக இருந்தது. குருதேவர் இந்தச் சூழ்நிலையை எதிர்பார்க்கவில்லை; அவருக்கு இதுபற்றித் தெரியாது. ஆனால் அவர் மனம் பூமி யிலிருந்து வெகு தொலைவுக்குச் சென்றுவிட்டது. உடல் குளிரைப் புறக்கணிக்க இது உதவியது; பசியைப் பற்றிக் கவலைப்படாதிருக்கவும் இந்த மனநிலை உதவியது. இது அவரது தவ வாழ்க்கையின்

முதற் கட்டம். குருதேவர் அதிக முக்கியத்துவம் வாய்ந்த லட்சியத்தை அடைவதில்தான் ஆர்வ மாக இருந்தார். உடலைப் பற்றி அவர் கவலைப் படவில்லை. ஒரு நல்ல மனிதர் இந்த அற்புத மனிதரைக் கவனித்தார். அவர் குளிரில் நடுங்கு வதைப் பார்த்தார்; அதனைப் பொருட்படுத்தா திருப்பதையும், எவரையும் அணுகி ஒரு போர்வை கொடுங்கள் எனக் கேட்காமல் இருப்பதையும் கவனித்தார். அவர் குருதேவருக்கு ஒரு போர்வை கொடுத்தார். குருதேவர் தானமாக முதலில் பெற்றுக்கொண்டது. அந்தப் போர்வைதான். அனைவருக்கும் அளவின்றி அள்ளிக்கொடுத்துச் சிவந்த கரம் அன்று முதல் முறையாக பிக்ஷையைப் பெற்றுக் கொண்டது. இந்தத் தவத்தின் சிறப்பை அனுபவத்தில்தான் உணர முடியும். இந்த ஒரு செயலுக்குப் பின்னணியாக மகத்தான துறவு மனப்பான்மையும், வைராக்கியமும் இருந்தது. அதை வார்த்தைகளால் விவரிக்க இயலாது !

போர்வை தந்த நல்ல மனிதர் டாக்டர் குப்புசாமி செல்ல வேண்டிய ஊரையும் உணர்ந்து கொண்டு அவரை பண்டரிபுரத்துக்குச் செல்லச் சொன்னார். அதற்காக ஒரு பயணச் சீட்டும் வாங்கிக் கொடுத்தார்.

குருதேவர் பயணத்தைத் தொடர்ந்தார். அவர் பூனா வந்ததும் அவரிடம் இருந்த ஒன்றிரண் டையும் தானம் செய்துவிட்டார். இப்போது அவரைக் கவனிக்க கடவுள் இருக்கிறார். கடவுளை கவனிக்க அவர் இருக்கிறார். பூனாவிலிருந்து 70 மைல் தொலைவில் உள்ள பண்டரிபுரத்துக்கு அவர் நடந்தே சென்றார். வழியில் கேத்காம் என்ற ஊரில் யோகி நாராயண மகராஜ் அவர்களின் ஆசிரமத்தில் ஓரிரு நாட்கள் தங்கினார்.

ஆண்டியாக அலைந்த டாக்டர், பரிவ்ராஜகராக — யாத்திரை செய்யும் துறவியாக ஆனார். அவருக்கு கடவுளைத் தவிர வேறு எதுவும் சொந்தமாக இல்லை. இறையருளை மட்டுமே துணையாகக் கொண்டு அவர் தனது பாத யாத்திரையைத் தொடங்கினார். எங்கு போக வேண்டும் என்ற கவலை அவருக்கு இல்லை. தனது இதயத்தில் குடி கொண்டிருக்கும் இறைவன் எந்தத் திசையில் போக வேண்டும் என்று தூண்டுகிறானோ அந்தத் திசையில் செல்ல அவர் உறுதி பூண்டார். ஏசுநாதர், தனது சீடர்கள் யாத்திரை செய்யும்போது, உண்ண உணவோ செலவுக்குப் பணமோ கையில் எடுத்துச் செல்லக் கூடாது என்று சொல்லியிருந்தார். குருதேவர் அந்த நிலையிலும் கடந்து விட்டார்.

புதுப்புது ஊர்களில் புதிய புதிய மனிதர்களை சந்தித்தவாறு பயணத்தைத் தொடர்ந்தார். அவர்களுக்கு குருதேவரின் மொழியோ அல்லது அறிவிற் சிறந்த அவரது வழிமுறைகளோ தெரியாது. கிராமம் கிராமமாக அவர் சென்றார். பிறக்கும்போதே செல்வச் செழிப்புடன் பிறந்த அவர் எப்படி பிக்ஷை கேட்பார்? இது அவருக்கு புதிய அனுபவம். அவர் கிராமத்துக்குச் சென்றால் அங்கு யாரேனும் ஒருவரைப் பார்த்து, ''நான் சென்னையைச் சார்ந்த ஒரு பிராமணன். எனக்கு பசிக்கிறது, உண்பதற்கு ஏதேனும் கொடுக்க முடியுமா?'' என்று கேட்டார். அன்னதானம் செய்கிறவர்களிடம் அவர் கேள்வி கேட்பதுமில்லை; குறைபட்டுக் கொள்ளுவதுமில்லை. நன்றி தெரிவித்துவிட்டு தனது பயணத்தைத் தொடர்வார். சிலர் அவரைப் பார்த்ததும், 'இவர் நல்ல வசதி படைத்தவராகத் தோற்றமளிக்கிறாரே, இவர் ஏன் பிச்சை எடுக்கிறார்?' என்று எண்ணுவார்கள்.

அவரை வீட்டுக்குள் அழைத்துச் சென்று அறுசுவை உணவளிப்பார்கள். எல்லாம் இறையருள்!

ஆம், இறைவன் ஒருவரின் தகுதியறிந்து அவருக்கு அருள் புரிகிறான் மலேயாவில் எத்தனை பசித்த வயிற்றுக்கு குருதேவர் அன்னமளித்திருக்கிறார்! நூற்றுக்கணக்கான பிச்சைக்காரர்கள் மற்றும் ஏழைகளின் பசியை அவர் போக்கவில்லையா! அத்தனை உள்ளங்களும் அவரை வாழ்த்தியிருக்கும். பின்பு ஒருகாலத்தில் தானே இப்படி பிக்ஷை எடுக்க வேண்டியிருக்கும் என குருதேவர் எண்ணியிருக்க மாட்டார். மலேயாவின் சிறந்த செல்வந்தர் என்ற முறையில் ஏழைகளுக்குச் செய்த உதவிக்கு பிரதி பலனையும் எதிர் பார்த்திருக்க மாட்டார். ஆனால் கீதையில் பகவான் கிருஷ்ணன் உறுதியளிப்பது போல நன்மை செய்தவர்கள் தீமையை அனுபவிக்க மாட்டார்கள்.

தனக்கு உணவளித்தவர்களுக்கு நன்றி தெரிவித்து அவர்களை வணங்கி வாழ்த்திவிட்டு அவர்களுக்கு அருள் புரியுமாறு இறைவனிடம் பிரார்த்தனை செய்துவிட்டு அவர் அங்கிருந்து புறப்படுவார். அறவழி நிற்கும் சில குடும்பங்களில் அவரைச் சில நாட்கள் தங்கிச் செல்லுமாறு வேண்டுவர். ஆனால் அந்த மகாத்மா அடுத்தவேளை உணவுக்கு அங்கு இருக்கமாட்டார். அவர் அங்கிருந்து புறப்பட்டு அடுத்த கிராமம் சென்று விடுவார். குருதேவர் இதுபற்றி எங்களிடம் பின்வருமாறு சொல்லியிருக்கிறார். ''நான் ஓரிடத்தில் ஒரு வேளைக்கு அதிகமாகத் தங்கினால் நான் நல்லவர்களுக்குச் சுமையாகப் போய்விடுவேன். அதனை என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது.'' பக்குவப் படாத சாதுக்களுக்கு இது ஒரு பாடம்.

இப்படியாக குருதேவர் தாலஜ் என்ற கிராமத்துக்கு வந்தார். அங்கு உள்ளூரில் அஞ்சல் நிலைய அதிகாரியாகப் பணியாற்றிக் கொண்டிருந்தவர், மனைவியை இழந்து தனிமையில் இருந்தார். அவர் குருதேவரை தன்னுடன் தங்குமாறு கேட்டுக் கொண்டார். அவர் நல்ல பண்பாளர். சமய உணர்வுடையவர். அவரது வற்புறுத்தலுக்கு குருதேவர் இணங்கினார். ஆனால் ஒரு நிபந்தனை போட்டார். குருதேவர் அங்கு தங்கியிருக்கும் காலத்தில் அஞ்சல் நிலைய அதிகாரிக்கு தான் விரும்புகிறபடி தொண்டு செய்வார். இதற்கு அஞ்சல் நிலைய அதிகாரி அனுமதியளிக்க வேண்டும். இதுதான் நிபந்தனை. அஞ்சல் நிலைய அதிகாரியும் வேறு வழியின்றி சம்மதித்தார்.

குருதேவர் உடனே பணியில் இறங்கினார். அவர் தண்ணீர் இரைத்தார். அந்த நல்ல ஆத்மாவுக்கு விறகு சேகரித்துக் கொடுத்தார். அஞ்சல் நிலைய அதிகாரியின் வீட்டுப் பசுவை பராமரிப்பது இந்த மகாத்மாவுக்கு மிகவும் பிடித்த வேலை. பசுக்கள் வயலில் மேய்ந்து திரும்பியதும் அவற்றுக்குத் தன் கரங்களால் வைக்கோலை எடுத்துப் போடுவார். இவ்வாறு செய்ய வேண்டாம் என அஞ்சல் நிலைய அதிகாரி சொன்னால் தனது ஒப்பந்தத்தை குருதேவர் நினைவுபடுத்துவார். அஞ்சல நிலைய அதிகாரிக்கு தர்ம சங்கடமாக இருந்தது. தொண்டு செய்ய வேண்டாம் என்று சொன்னால் அவர் அங்கிருந்து புறப்பட்டு விடுவார். ஆனால் தொடர்ந்து பணி செய்ய அவரை அனுமதிக்க அஞ்சல் நிலைய அதிகாரியின் மனச்சாட்சி இடந்தரவில்லை. குருதேவர் உற்சாகத்துடன் பணியாற்றுவதைக் கண்ட அவர் எதுவும் சொல்லாமல் இருந்தார். குருதேவர் மலேயாவில் தனது சமையல்காரருக்குக் கொடுத்த

தைவிட குறைவான தொகையையே அஞ்சல் நிலைய அதிகாரி சம்பளமாகப் பெற்று வந்தார். ஆனால் குருதேவர் அவரது வீட்டு வேலைக்காரரைப்போல் பணியாற்றினார்.

இங்கே குருதேவர் ஒரு போலி சாதுவைச் சந்தித்தார். குருதேவர் ஆங்கில அறிவும், நல்ல திறமையும் பண்பும் பெற்றிருப்பதைக் கண்ட அந்த சாது, அவரை திசை திருப்ப முயன்றார். தான் சொல்லுகிறபடி கேட்டால் அவர் பெயரும் புகழும் பெற்று மகிழ்ச்சியாக வாழலாம் என்று ஆசை காட்டினார். குருதேவர் சாதுக்களையும், துறவி களையும் எந்த அளவுக்கு வணங்கி மகிழ்வார் என்பதை முன்பே கண்டோம். ஆனால் ஒரு சாது கூட அவரை திசை திருப்ப முடியாது. இந்தச் சம்பவத்திலிருந்து இது உறுதியாயிற்று. போலி சாதுவை விரைவில் புரிந்து கொண்ட குருதேவர் அவர் யோசனைக்கு பணிவுடன் மறுப்புத் தெரிவித்தார்.

உள்ளுணர்வு உணர்த்த குருதேவர் அங்கிருந்து புறப்பட்டார். அதுசமயம் அதிசயிக்கத் தக்கவாறு தக்ஷல் என்ற இடத்தில் அஞ்சல் நிலைய அதிகாரி யாகப் பணியாற்றியவர் குருதேவரின் தெய்வீகப் பண்புகளைக் கேள்விப்பட்டு தன்னுடன் தங்குமாறு அழைத்தார். அங்கும் குருதேவர் தாலஜில் போட்ட நிபந்தனையைப் போட்டார். பிறகு அங்கு தங்கினார்.

இமயமலை! குருதேவருக்கு எப்போதும் இதே சிந்தனையாக இருந்தது. இமயமலைக்குப் புறப்பட வேண்டும் என்ற தனது விருப்பத்தை அஞ்சல் நிலைய அதிகாரியிடம் தெரிவித்தார்.

அவரும் இந்த ''வீட்டு வேலைக்காரரின்'' பெருமைகளை உணர்ந்துகொண்டு, ஜடபரத முனிவரை ரகுகன மன்னன் வணங்கியதுபோல, அவரை வணங்கி தன்னைப் பிரிந்து செல்ல அனுமதி அளித்தார். அவர் குருதேவருக்கு ஒரு பயணச் சீட்டு வாங்கிக் கொடுத்தார். அதன் உதவியுடன் குருதேவர், முனிவர்கள் வசிக்கும் திருத்தலமாகிய ரிஷிகேசத்தை அடைந்தார்.

இறையருள் மர்மமானது. இறைவன் தன் அடியார்களைத் தனது விருப்பம்போல் நடத்தி வைக்கிறார். குருதேவர் தன்னை எவராவது பழித்துச் சொன்னால் அதை தன் கழுத்தில் மாலையாக அணிந்து கொள்ளுவார். பிக்ஷை வேண்டி அவர் தன் கரங்களை நீட்டினார். சாதாரண மக்களுக்கும் அவர் தன் உடலை வருத்தித் தொண்டு செய்தார். இவ்வாறு அவர் சுய கௌரவத்தைக் கருதாமல் பணியாற்றி வந்தார். இத்தகைய மனப்பக்குவம் பெற்றுள்ளவர், துறவியாக ஆகிடத் தகுதி படைத்தவர் என இறைவன் தீர்மானித்திருக்க வேண்டும்.

ஆகவேதான் இறைவன் அவரை ரிஷிகேசத்துக்கு அனுப்பி வைத்திருக்கிறான்.

ரயில், அவரை ஹரித்துவார்வரை அழைத்துச் சென்றது. ஞானச் சுடரொளி பரப்பும் மகாத்மா அங்கிருந்து ரிஷிகேசத்துக்கு நடந்தே சென்றார். வழியெங்கும் கவின்மிகு காட்சிகள்! இமயமலை அடிவாரத்துக்கு வந்து சேர்ந்ததில் அவருக்கு மகிழ்ச்சி. இந்த மகிழ்ச்சியில் அவர் கால் வலியையும் மறந்தார். வழியில் அவர் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தார். அந்த வழியாக வண்டியில் சென்ற ஒருவர் இளம் சாது அமர்ந்திருப்பதைக்

கண்டு பிக்ஷையாக ஒரு நாணயத்தை வீசினர். ஆனல் மகாத்மா முழுமையாக ஆத்ம சிந்தனையில் ஈடுபட்டிருந்தார். அந்தக் காசை கவனிக்கவே யில்லை. அவர் ரிஷிகேசம் நோக்கிப் பயணத்தைத் தொடர்ந்தார்.

## 14. சுவாமி சிவானந்த சரஸ்வதி

1924 மே மாதம் இறுதியில் குருதேவர் ரிஷிகேசம் அடைந்தார். அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. ஜீவநதியாகிய கங்கையும், பசுமையான காடுகள் நிறைந்த குன்றுகளும் அவரை வரவேற்றன. குருதேவர் இவற்றைத் தனது தெய்வீகப் பெற்ருேர்கள் என அழைத்தார்.

குருதேவர் ரிஷிகேசம் வந்து சேர்ந்த முதல் நாள் இரவில் கங்காஸ்ரமத்துக்கு அருகில் உள்ள ரிஷிகேசம் அஞ்சல் நிலையத்தை அடுத்துள்ள சரண்தாஸ் தர்மசாலாவின் தாழ்வாரத்தில் உறங்கினர். அங்கு அவருடன் நிறைய சாதுக்கள் உறங்கினர். அவர்களில் ஒருவர் வயதானவர், சுவாமி விஸ்வானந்த சரஸ்வதி. அவர் ஞானச் சுடராகத் திகழ்ந்தார். அவர் காவியுடுத்தியிருந்தார். அவரது உடைமைகளாக இருந்தவை தண்டமும் கமண்டலமும்தான். அதிகாலையில் அந்த வயதான துறவியின் தரிசனம் அவருக்குக் கிடைத்ததும் அவர் இதயம் உருகியது. அவர் அந்தத் துறவியின் பாதங்கமலங்களில் பணிந்து வணங்கினர். அந்த முதிய துறவியும் அன்புடன் அவரை உயர்த்திப் பிடித்துத் தழுவிக்கொண்டார்.

''என் அன்புக் குழந்தையே நீ இறைவனுடைய செய்தியை மக்களுக்கு எடுத்துச்சொல்ல இறைவனின் திருக்கரங்களில் தகுதிமிக்க கருவியாக இருப்பாய் என்பதை உறுதிப்படுத்தும் வகையில்

உனது நெற்றியில் உள்ள ஒன்றை நான் கவனிக்கிறேன். உன்னை நான் கடந்த அரைமணி நேரமாக கவனிக்கிறேன். நீ உலகைத் துறந்து துறவியாக விரும்புகிருய் என்று கருதுகிறேன், அது சரிதானு?''

''புனிதராகத் திகழும் சுவாமிஜி, தாங்கள் நினைப்பது சரிதான். ஒரு தெய்வீக ரிஷியைத் தரிசிக்கும் வாய்ப்புக் கிடைத்தது என் அதிர்ஷ்டம்! இந்த நாள் ஒரு நன்னுள். நான் பெரும்பேறுபெற்ற நாள் இது. இந்த எளிய சாதகனுக்குத் தங்கள் அருளாசியை வழங்குங்கள். உங்கள் மூலம்தான் நான் லட்சியத்தை அடைய முடியும்''

''நன்ருகக் சொன்னும் குழந்தாய்! உனக்கு சந்நியாச தீக்ஷை அளிப்பதை நான் பெருமையாகக் கருதுகிறேன்''

துறவறம் மேற்கொள்ள குருதேவர் ஆயத்தமாக இருந்தார். அவருக்கு தீக்ஷை அளிக்க விஸ்வானந்தாஜி ஆவலாக இருந்தார்.

குருதேவரின் வைராக்கியம் தீவிரத்தன்மையுடையது. அதிர்ஷ்டம், அவருக்குத் தலைக்கனம் ஏற்படுமாறு செய்ய இயலவில்லை. ஆனல் அதற்குப் பின்னல் இறையருள் இருப்பதை அவர் கண்டார். விசுவானந்தரின் வடிவில் இறைவன் காட்சியளித்து அருள் புரிந்திருக்கிருன். இறைவனுக்கு நன்றி செலுத்தும் வகையில் குருதேவர் இறைவனுக்குத் தன்னையே அர்ப்பணமாக்கிக் கொண்டு இறைவனின் திருவடித் தாமரைகளில் பணிந்து வணங்கினர்.

1924 ஜூன் முதல் தேதி சுவாமி விசுவானந்த சரஸ்வதி குருதேவருக்கு சந்நியாச தீக்ஷை அளித்தார். அன்றுமுதல் குருதேவர் சுவாமி சிவானந்த

சரஸ்வதி என்று அழைக்கப்பட்டார். விரஜ ஹோமம் என்னும் சமயச் சடங்கை அவரது ஆசார்ய குரு கைலாச ஆஸ்ரம மகாமண்டலேஸ்வரர் விஷ்ணுதேவானந்தஜி மகராஜ் செய்தார்.

## 15. குருவும், சீடரும்

குருநாதரின் அவசியம் பற்றியும், துறவறத்தின் சிறப்பு பற்றியும் குருதேவர் தனது சுயசரிதையில் பின்வருமாறு எழுதியிருக்கிறார்.

''ஆன்மீகப் பாதையில் பல தடைகள் இருக்கும். குரு, சாதகனுக்கு நல்வழி காட்டுகிறார். தடைகளை அகற்றுகிறார். அவர் சாதகனுக்கு உற்சாகமூட்டி தனது ஆசியால் ஆன்மீக சக்திகளையும் சாதகனுக்குத் தந்து அருளுகிறார். குரு, ஈஸ்வரன், உண்மை, மந்திரம் அனைத்தும் ஒன்றே. குருவின் அருகில் இருந்து அவருக்குத் தொண்டு செய்வதன் மூலம்தான், உலகியல் ஆசைகளைத் தூண்டும் மனிதர்கள் மற்றும் பழக்க வழக்கங்களிலிருந்து ஒரு சாதகன் தன்னைக் காத்துக் கொள்ள முடியும்.

அகந்தையுடைய சாதகர்கள், ''எனக்கு குரு தேவையில்லை. இறைவனே எனது குரு'' என்கின்றனர். அவர்கள் தாமாகவே உடைகளை மாற்றிக் கொண்டு மனம்போன போக்கில் சுற்றுகிறார்கள். தொல்லைகள் நேரும்போது செய்வதறியாது திகைத்து நிற்கின்றனர். நம்முடைய சமய நூல்களும், ரிஷி முனிவர்களும் வகுத்து அளித்திருக்கின்ற விதிமுறைகளை மீறுவதை நான் விரும்பவில்லை. ஒருவருடைய மனத்தில் மாற்றம் ஏற்படும்போது, அவரது புறத்தோற்றமும் மாற வேண்டும். கோழைத்தனமும், பலவீனமும்

உடைய ஒருவர் துறவியின் புகழ் மற்றும் சுதந்திர இயல்பினைக் கற்பனை செய்து பார்க்கவும் இயலாது.

காவி உடை அணிவதன் சிறப்பைப்பற்றி குருதேவர் பின்வருமாறு கூறுகிறார். மனமாற்றம் அடைந்த ஒருவர் காவி உடை அணிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். மாயையின் சக்தி அல்லது உங்கள் பழக்கம் காரணமாக புலன்கள், உலகியற் பொருட்களை நோக்கி நகரலாம். அந்த நேரத்தில் நீங்கள் அணிந்திருக்கக் கூடிய காவி உடையை உற்றுநோக்கினால் நீங்கள் துறவி என்பதை அது நினைவுபடுத்தும். அது உங்களுக்கு ஒரு அடி கொடுத்து நீங்கள் தீய செயலில் ஈடுபடாதவாறு தடுக்கும். காவி உடை போற்றுதலுக்குரியது; அதனால் பல நன்மைகள் விளைகின்றன. உண்மையான துறவிதான் பாச பந்தங்களை அறுத்து மோகத்திலிருந்து முழுமையாக விடுபட முடியும். அவரது நண்பர் களும் உறவினர்களும் அவருக்குத் தொல்லைதர மாட்டார்கள். ஒரு துறவி காவி உடையுடன் மேடை ஏறி பிரசாரம் செய்கிறபோது அருந் தொண்டு புரிகிறார். ஹிந்துக்கள் மனதில் காவி உடைக்கு தனி மதிப்பு இருக்கிறது. பொதுமக்கள் துறவிகள் சொல்லும் கருத்தை வெகு எளிதில் கேட்டுக்கொள்ளுவார்கள். போலித்தனம் உடைய சிலர் நமது மனத்துக்கு சாயம் பூசக்கூடாது, நாம் ஆடைகளை மாற்றத் தேவையில்லை என்று சொல்லு கிறார்கள். நான் இவர்களை நம்புவதில்லை. பிரம்மாவின் அவதாரமும், ஆதி சங்கரருடன் வாதிட்டவருமான மண்டன மிச்ரர்கூட துறவி யானார். அவர் சுரேஷ்வராசார்யார் எனப் பெயர் பெற்றார். மகரிஷி யாக்ஞவல்கியர் துறவியானார். ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தனது தலை முடியை

மழித்துவிட்டுத் துறவியாஞர். சுவாமி தோதாபுரி அவருக்கு சந்நியாச தீக்ஷை அளித்தார். ஆசை, மோகம், பலவீனம், கோழைத்தனம் உடைய வர்கள்தான் உடைகளை மாற்றிக்கொள்ளத் தயங்கு கிருர்கள். அவர்கள் தவருன, அறிவுக்குப் பொருந் தாத வகையில் வாதிடுகிருர்கள். இன்று ஆன்மீகத் துறையில் தலைசிறந்த நிலையில் உள்ளவர்கள்கூட உடைகளை மாற்றிக்கொள்ள வேண்டியதன் அவசியத்தை உணராமல் இருக்கிருர்கள். என்னே பரிதாப நிலை!

மகான்கள் காவி உடை அணிவது கீதையில் பகவான் குறிப்பிடுவதுபோல மக்களை நல்வழிப் படுத்தத்தான். ஒவ்வொருவரும் ஞானம் பெற குரு அவசியம் என்பதை அவர்கள் தமது சீரிய வாழ்க்கையின் மூலம் நிரூபிக்கிருர்கள். குருதேவர் அடிக்கடி பின்வருமாறு குறிப்பிடுவார்கள்: சமையல் வேலை கற்றுக்கொள்ளுவதற்குக்கூட ஒரு குரு தேவைப்படுகிருர். மனிதன் உலகில் எந்தக் கலையைக் கற்றுக்கொள்ள விரும்பினுலும் அந்தக் கலையில் நிபுணர்களாக உள்ளவர்கள் மூலம்தான் கற்றுக்கொள்ள முடியும். வாழ்க்கையின் இறுதி லட்சியத்தை வழிகாட்டியின்றி அடைய நினைப்பது பகீரதப் பிரயத்னமாகும்.

1949 ஆம் ஆண்டு மார்ச்சு 11 ந்தேதி சில சீடர்களுக்கு குருபக்தி குறித்து உபதேசம் செய்த குருதேவர், ''உங்களுக்குக் கல்வி கற்றுத் தரும் ஆசானை நீங்கள் மதித்து வணங்கவேண்டும். அப்போதுதான் கற்ற கல்வி பயனுடையதாக இருக்கும்''. அப்போது தனது வாழ்வில் நிகழ்ந்த தைக் குறிப்பிட்டார். ''சுவாமி விசுவானந்தாஜி யுடன் எனக்கு ஒரு சில மணி நேரம் மட்டும்தான்

தொடர்பு இருந்தது. ஆயினும் தினமும் வழிபாடு செய்யும்போது அவரது திருநாமத்தை ஜபம் செய்கிறேன். எனக்காக விரஜாஹோமம் செய்த விஷ்ணு தேவானந்தாஜியையும் நான் நினைவுபடுத்தி வணங்குகிறேன். இது மிகவும் அவசியம். இப்படிச் செய்தால்தான் முமுக்ஷுத்வத்தின் சுடரொளி நம்மிடத்தில் நன்கு பிரகாசிக்கும்''.

மலேயாவில் நடந்த நிகழ்ச்சி ஒன்றை குருதேவர் குறிப்பிட்டார்.

''மலேயாவில் திறமைமிக்க பல மந்திரவாதிகள் இருக்கின்றனர். அங்கு ஒரு சமயம் கடுமையான காய்ச்சலால் (Spanish Flu) பாதிக்கப்பட்டு ஏராளமான பேர்கள் இறந்தனர். நானும் பாதிக்கப்பட்டேன். ஆயினும் பிழைத்துக் கொண்டேன். மந்திரவாதிகள், மந்திரம் மற்றும் யந்திரத்தில் வல்லவர்களாக இருந்தனர். அது ஒரு அற்புதமான கலை. கட்டைவிரல் நகத்தில் ஒருவகை மையைப் பூசி, அதில் தொலைதூரத்தில் நடப்பதையும் காணும்படி செய்யும் ஆற்றல், இந்தக் கலையில் நிபுணர்களாக உள்ளவர்களிடம் இருக்கிறது. அவர்கள் மைசூரில் என்ன நடக்கிறது, எங்கோ வசிக்கும் ஒருவர் இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறார் என்றெல்லாம் சொல்லிவிடுவார்கள். அவர்கள் சொல்லும் மந்திரம் இப்போதும் என் நினைவில் இருக்கிறது. இந்த மந்திரத்தை எனக்குச் சொல்லிக் கொடுத்தவரிடத்தில் நான் பெருமதிப்பு வைத்திருக்கிறேன். நான் அவரை சாஷ்டாங்கமாக வணங்குவேன். தேவைப்படுகிறபோது அவருக்குத் தொண்டுகள் செய்வேன். தேவதைகளை அழைத்து அவர்கள் மூலம் காரியம் சாதித்துக்கொள்ள நான் விரும்பாத காரணத்தால் இந்த மந்திர தந்திரப் பழக்கத்தை நான் கைவிட்டுவிட்டேன்''.

ஆத்மஞானம் பெறத் தேவையான நிலையான அறிவிலிருந்து தோன்றும் பற்றற்ற தன்மை குருதேவரிடத்தில் இருந்தது. இந்த உலகிலும் இந்த உலகின் மூலமும் பழகி உயரிய ஞானத்தை அவர் பெற்றார். தனது இதயாசனத்தில் வீற்றிருக்கும் இறைவனின் குரலைக் கேட்கும் அளவுக்கு அவர் பயிற்சி பெற்றார்.

குருநாதர் உதவி இல்லாமலேயே தனக்குள் இருக்கும் இறைவனுடன் அவர் தொடர்பு கொள்ள முடியும். ஆயினும் அவர் தன் தலையை சுவாமி விஸ்வானந்தாவின் திருவடிகளில் வைத்து வணங்கி அவரது திருவாக்கால் மகாவாக்ய உபதேசம் பெற்றார்.

மேலே குறிப்பிடப்பட்டவற்றிலிருந்து குருதேவரிடமிருந்த குருபக்தி தெளிவாக விளங்கும். அவரைப் பொறுத்தவரை ஒரு வேலி அமைக்கக் கற்றுக் கொடுப்பவரையும், மந்திர தந்திரங்களில் தனக்குப் பயிற்சி அளிப்பவரையும் அவர் இறைவனாகவே கருதுகிறார். அவர்கள் தன் அறிவைப் பெருக்க அவதாரம் செய்தவர்கள் என அவர் எண்ணுகிறார். தெய்வபக்தியும், குருபக்தியும் உடையவர்களுக்கு உபநிடத மந்திரங்களின் பொருள் நன்றாக விளங்கும் என்று ஸ்வேதாஸ்வதார உபநிடதத்தில் கூறப்பட்டிருக்கிறது. இது உண்மை. குருதேவர் இந்த உண்மைக்கு உதாரணமாக விளங்கினார். குருதேவர் தனது குருநாதரின் கால்களைத் தைலம் கொண்டு தடவுவார். இதனால் அவர் ஆத்ம ஞானம் பெற்று இறுதி லட்சியத்தை நெருங்கிச் சென்றார். விசுவானந்தாஜி தனது தெய்வீக மாணவனின் தகுதியை உணர்ந்து கொண்டார். தனது உதவி அவருக்குத் தேவையில்லை என்பதையும் அவர் அறிந்து கொண்டார்.

அன்பு மற்றும் மதிப்புக் காரணமாக கண்களில் நீர் பொங்கி வர அவர்கள் பிரிந்து சென்றனர். விஸ்வானந்தாஜி காசி நோக்கிப் பயணம் புறப்பட்டார்.

குருதேவர் தான் நிரந்தரமாகத் தங்க ரிஷிகேசத்தை ஏன் தேர்ந்தெடுத்தார்? இது பற்றி அவரே பின்வருமாறு கூறியிருக்கிறார்:

''இமயமலைப் பகுதியில் உத்தரப்பிரதேசத்தில் டேராடூன் மாவட்டத்தில் உள்ள ரயில் நிலையம் ரிஷிகேசம். அது பல மகாத்மாக்கள் வாழும் புனிதத்தலம். சாதுக்கள், யோகிகள் மற்றும் சாதகர்களுக்கு அன்னதானம் செய்ய அங்கு தருமச் சாலைகள் உள்ளன. அவர்கள் ஏதேனும் ஒரு தருமச்சாலை அல்லது குடிலில் தங்கலாம். அல்லது தாங்களே ஒரு குடிசை அமைத்துக் கொண்டு தங்கலாம். ரிஷிகேசத்துக்கு அருகில் பிரம்மபுரி காடுகள், நீலகண்ட வசிஷ்ட குகைகள், தபோ வனம் ஆகியவை உள்ளன. இவை காண்பவரை ஈர்க்கும் தன்மை கொண்டவை. இங்கு வாழ் பவர்கள் 15 நாட்களுக்கு ஒருமுறை உலர்ந்த உணவுப் பொருட்களைப் பெற்றுக் கொண்டு தமது உணவைத் தாமே தயார் செய்து கொள்ளுகின்றனர்.

''இமயமலை அழகிய காட்சிகளைக்கொண்டது. ஆன்மீக முன்னேற்றத்துக்கு வழி காட்டுவது. புனித கங்கை ஒரு வரப்பிரசாதம். கங்கை அருகில் ஒரு பாறைமீது அல்லது கரையோர மணற் பரப்பில் அமர்ந்து எவரும் மணிக்கணக்கில் தியானம் செய்யலாம். அங்கு நூல் நிலையங்கள் உள்ளன. யோகம் மற்றும் தத்துவம் சம்பந்தமான நூல்கள் சமஸ்கிருதம், ஆங்கிலம் மற்றும் ஹிந்தி

ஆகிய மொழிகளில் அங்கு உள்ளன. கற்றறிந்த மகாத்மாக்கள் தினசரி மாலை நேரங்களில் தகுதி வாய்ந்த மாணவர்களுக்கு வகுப்புக்கள் நடத்தி ஆன்மீக விஷயங்களைக் கற்றுக் கொடுப்பர். இந்த இடத்தின் சீதோஷ்ண நிலை அருமையாக உள்ளது. நவம்பர் முதல் மார்ச் வரையிலான குளிர்காலத்தில் இலேசான குளிரும், ஏப்ரல் முதல் ஜூன் வரையிலான கோடை காலத்தில் இலேசான வெப்பமும் இருக்கும். நோயாளிகளுக்கு சிகிச்சை அளிக்க ஆங்கில, ஆயுர்வேத மருத்துவமனைகளும் உள்ளன. பரம்பொருளை அறிந்து அனுபவிக்கத் துடிக்கும் சாதகர்கள் தீவிரமாக, தொல்லைகளின்றி ஆன்மீகப் பயிற்சிகளில் ஈடுபட இதுதான் தகுதியான இடம் என நான் தேர்ந்தெடுத்திருக்கிறேன்''.

## 16. மக்களில் மன்னராக வாழ்ந்தவர் இருக்க இடமில்லை

வெயிலும் மழையும் பாதிக்காத அளவில் ஒரு குடிசை குருதேவருக்குத் தேவைப்பட்டது. ஓரிடத்தில் அமர்ந்து இறைவனை தியானித்து நாம ஜபம் செய்ய இப்படி ஒரு குடிசை அவருக்குத் தேவைப்பட்டது. இப்படிப்பட்ட குடிசை யாத்திரீகர்களும் தொந்தரவு செய்யாத அளவுக்கு சற்றுத் தொலைவில் இருக்கவேண்டும் என்று அவர் விரும்பினார். ரிஷிகேசத்தில் உள்ள கோல்கட் என்ற இடம் இதற்குப் பொருத்தமானதாக இருக்கும் என்று அவர் கருதினார். அது ரிஷிகேஷ் நகரத்திலிருந்தும் கடைவீதியிலிருந்தும் வெகுதொலைவில் இருந்தது. தருமச்சாலைகளில் உணவளிக்கும் நேரத்தில் மட்டும் அங்கு சென்று உணவுப் பொருட்களைப் பெற்றுக்கொண்டு மீதமுள்ள நேரம் முழுவதும் அமைதியாக அமர்ந்து தியானம் செய்ய விரும்பினார். அவர் தேர்ந்தெடுத்த இடம் தருமச்

சாலேயிலிருந்து 2 மைல் தொலேவில் இருக்கும். தருமச்சாலேயில் தரப்படும் நான்கு ரொட்டித் துண்டுகள் 'மற்றும் ஒரு கோப்பை பருப்பு ஆகியவற்றை வாங்குவதற்காக வெயிலிலும் மழையிலும் அந்தத் தவசீலர் நடந்தே செல்வார்.

பகவான் புத்தரின் வாழ்க்கை போதிக்கும் மகத்தான பாடங்கள், குருதேவரின் தோற்றப் பொலிவைச் செம்மைப்படுத்தின. 'பொது அறிவுக்கு அறை கூவல்' 'அறிவுக்குப் பொருத்த மான மையப் பாதை' ஆகியவை புத்தரின் வாழ்க்கை உணர்த்தும் பாடங்கள். குருதேவர் எப்போதும் நிதானந் தவருமல் வாழ்ந்து வந்தார். நல்ல அறுசுவை உணவை உட்கொண்டு பழக்கப் பட்டவர்களால் சரிவர சமைக்கப்படாத ரொட்டித் துண்டுகளேயும், பருப்பையும் தின்று உயிர்வாழ முடியாது. சில சாதுக்களின் தேவையறிந்து பஞ்சாப் சிந்து தருமச்சாலேயில் சாதுக்களுக்கு சில பச்சைமிளகாய்களும் உப்பும் கொடுத்து வந்தார் கள். குருதேவர் சில நாட்களில் இங்கு சென்று 'மிகவும் ஆடம்பரமான' இந்த உணவுப் பொருட் களேப் பெற்றுக் கொள்ளுவார். ஆளுல் விரைவி லேயே இது தனக்குத் தேவையில்லே என்று அவர் கருதிளுர். அவரது பற்றற்ற உணர்வு, புலன் ஆசையை அகற்றி தேவைகளே மறக்கச் செய்தது.

சந்தர்பாகா நதிக்கரையில் அவ்வப்போது சில ரொட்டித் துண்டுகள் தரப்படும். ஆரம்பத்தில் குருதேவர் இதனேப்பெற நான்கு மைல் தூரம் நடந்து செல்வார். ஆளுல் தியானம், ஜபம் செய்ய இது இடையூருக இருந்தபடியால் அங்கு செல்வதைத் தவிர்த்துவிட்டார்.

நேரம் யோகிக்கு மிகவும் அருமையானது. அந்த நேரத்தை சோம்பலிலும் பயனற்ற செய

விலும் செலவிடுவது கொடுமை அல்லது தற்கொலை ஆகும். குருதேவர் பிக்ஷை ஏற்றுக்கொள்ளும் காளிகம்ளிவாலா தருமச் சாலையில் சாதுக்கள் இலவசமாக சவரம் செய்து கொள்ளுவதற்காக மாதம் இருமுறை சீட்டு தருவார்கள். முடிதிருத்து பவருக்காகக் காத்திருப்பது காலத்தை வீணாக்கு வதாகும் என குருதேவர் கருதினார். சீட்டு வாங்கு வதைத் தவிர்த்து முடி வளர்த்தார்.

இறுதியான ஆனால் முக்கியமான ஒரு சம்பவம், நேபாளி தருமச் சாலையில் நேபாளி பாபா என்ற மகான் ஒருவனை சுண்டலை (chava-ka-daal) தனது திருக்கரங்களால் சாதுக்களுக்கு வழங்குவார். இதனைப் பெற குருதேவர் அடிக்கடி அங்கு செல்லுவார்; இதற்காக மூன்று மைல் தூரம் நடந்து செல்வார். குருதேவர் நேபாளி தருமச் சாலைக்கு விஜயம் செய்யும்போதெல்லாம் இதனை நினைவுபடுத்தியிருக்கிறார். ஒருமுறை குருதேவர் நேபாளி பாபாவின் சீடரும் மிகச் சிறந்த மகானுமான மகந்த்சேத்ராம்ஜியுடன் உரையாடிக்கொண்டிருந்தபோது, ''பாபாஜி அன்புடன் வழங்கிய சுண்டலைப் பெற நான் கோல்கட்டிலிருந்து வந்தது இன்னும் எனக்கு நினைவில் இருக்கிறது. அவர் என்னிடம் பேரன்பு கொண்டிருந்தார் என்று கூறினார். அந்தச் சுண்டல் ருசியாக இருக்கும் என்று குருதேவர் சொல்லுவார். ஆனால் அவர் அதற்காக மட்டும் அங்கு செல்லவில்லை. பாபாவின் தரிசனம்தான் அதைவிட முக்கியமானதாக இருந்தது. அதற்காகத்தான் குருதேவர் அங்கு சென்றார். பிறகு குருதேவர் இப்போது இருக்கும் இடத்துக்கு அருகில் உள்ள பிரம்மானந்த ஆசிரமத்துக்கு வந்தார். அந்த ஆசிரமத்தின் கீழ்ப் பகுதியில் உருக்குலைந்த இரு அறைகள் காலியாக இருந்தன.

அவற்றில் ஒன்றில் குருதேவர் தங்கினார். உணவு ஏற்பாடு முன்புபோலத்தான். பழைய இடம் உணவுச் சாலைக்குத் தெற்கே உள்ளது. புதிய இடம் அதற்கு வடக்கே உள்ளது. ஆனால் நடந்து செல்ல வேண்டிய தூரம் முன்பு சென்ற தூரம்தான். கங்கையையும், இமயமலையையும் இடையறாது தரிசித்துக்கொண்டிருக்க வேண்டும் என்ற அவரது ஆவலை பிரம்மானந்த ஆசிரமம் பூர்த்தி செய்தது.

அங்கிருந்து குருதேவர் லக்ஷ்மணஜுலாவுக்குச் சென்றார். இங்கு அவர் சத்யசேவாஸ்ரமத்தை நிறுவினார். இதில் குருதேவருக்கு இன்னும் கொஞ்சம் திருப்தி ஏற்பட்டது. அந்த ஆசிரமத்திலிருந்து சில நிமிடங்கள் நடந்து சென்றால் இமயமலையின் அடர்ந்த காடுகளுக்குள் சென்று விடலாம். அங்கு எந்தவிதத் தொந்தரவும் இன்றி தியானம் செய்யலாம். ஆசிரமத்தில் மருத்துவத் தொண்டு செய்யவும் ஏற்பாடு இருந்தது. ஆசிரமத்தில் இருவர் உணவருந்த ஏற்பாடு உண்டு. ஆனால் குருதேவர் உணவுக்காக நேரம் செலவிடுவதைத் தவிர்த்தார். தியானத்தில் அதிக நேரம் செலவிட்டார். கிச்சடி, மிளகாய் ஆகியவற்றைத் தனது உணவாகக் கொண்டார்.

குருதேவர் தனித்திருந்து தியானம் செய்யவே விரும்பினார். ஆனாலும் தேவைப்படும்போது நோயாளிக்குத் தொண்டு செய்யச் சென்றார். அவரது உள்ளத்திலிருந்த தாகம் காரணமாக லக்ஷ்மணஜுலாவுக்கும், ஸ்வர்காஸ்ரமத்துக்கும் நடுவில் கங்கைக் கரையில் உள்ள ஒரு குடிலில் அவர் தங்கத் துவங்கினார். 1948-ல் நாங்கள் குருதேவருடன் ஸ்வர்காஸ்ரமம் சென்றபோது அவர் இந்த இடத்தைக் காட்டினார். நாங்கள் அதிர்ச்சி அடைந்தோம். அங்கு இரு சுவர்களும்,

கற்குவியலும் இருந்தன. மரத்தின் இலைகள்தான் கூரையாக இருந்தது. அது புழுப்பூச்சிகள் தங்கும் இடமாகத் தோன்றியதே தவிர மனிதர்கள் தங்கத் தகுதியான இடமாக எங்களுக்குத் தோன்றவில்லை. பாம்பு, பல்லியெல்லாம் அங்கு குடியிருந்திருக்கின்றன. இந்த இடத்தில் குருதேவர் நீண்ட காலம் இருந்து தவம் செய்திருக்கிறார். இங்கு எவரும் வந்து அவரைத் தொந்தரவு செய்யவில்லை. அங்கு பகலில் கூட எவரும் வர அச்சப்படுவார்கள். அவர் எப்போதாவது ஸ்வர்காஸ்ரமம் சென்று பிக்ஷை எடுத்துக் கொள்ளுவார். அவர் ஆன்மீகப் பேரானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருந்தபடியால் தினசரி பிக்ஷைக்கு செல்ல வேண்டும் என அவருக்குத் தோன்றவில்லை.

அந்தப் பகுதியில் தவ வாழ்க்கை மேற் கொண்டிருந்த பல மகாத்மாக்களும் ஸ்வர்காஸ்ரம நிர்வாகிகளும் ஆசிரமத்தின் ஒரு குடிலில் குருதேவர் தங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். குருதேவரும் இதற்குச் சம்மதித்தார். அவர் தங்கியிருந்த அறைக்கு இப்போது III என்ற எண் குறிக்கப்பட்டுள்ளது.

## 17. உண்மையான சாதனை : ஒரு கண்ணோட்டம்

குருதேவர் லட்சியத்தை அடைய மிக எளிய வாழ்க்கையை மேற்கொண்டார். ஸ்வர்காஸ்ரமத்தில் வாழ்ந்தபோது அவரிடத்தில் காணப்பட்ட மிகச்சிறப்பான பண்புகள் இதனை நமக்கு உணர்த்துகின்றன.

குருதேவர் தன்னிடத்தில் ஒரு சிறு கையடக்க நோட்டுப் புத்தகம் ஒன்று வைததிருப்பார். தான் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய செய்திகளை

அவர் அதில் குறித்து வைப்பார். ஆன்மீக சாதகர் களின் முதல் எதிரியான மறதி மிகத் தொலேவில் நிறுத்தி வைக்கப்பட்டது. பல்வேறு சந்தர்ப்பங் களில் தான் பெற்ற பாடங்களே குருதேவர் ஒரு போதும் மறந்ததில்லே. 50 ஆண்டுகளுக்கு முன்ன தாக தான் ஏற்றுக்கொண்ட லட்சியத்தை அவர் ஒருபோதும் மறந்ததில்லே. தனது லட்சியப் பணியை கணப் பொழுதும் அவர் மறந்ததில்லே. அவர் தனது சீடர்களேயும் பக்தர்களேயும் மறந்த தில்லே. நமது ஆன்மீக முன்னேற்றத்தில் அக்கறை எடுத்துக்கொள்ளவும் அவர் மறந்ததில்லே. அனேத்துக்கும் மேலாக தனது கடமைகளே இடையருது நிறைவேற்ற அவர் மறந்ததில்லே. இது நமக்கு மிகப் பெரிய பாடம் ஆகும். குரு தேவருடைய நினேவுக் குறிப்பேட்டைக் காண்பவர் கள் அவர் ஸ்வர்காஸ்ரமத்தில் எந்த அளவுக்குத் தீவிரமாகவும் ஒருங்கிணேந்த முறையிலும் தவ வாழ்க்கை வாழ்ந்து வந்தார் என்பதை அறியலாம்.

## தியானம்

தீவிரமாகவும், நீடித்தும் தியானம் செய்வதில் அவர் பேரார்வம் கொண்டிருந்தார். இதயத்தின் அடித்தளத்தில் உள்ள பரமாத்மாவைக் கண்டுணர உடனடியாகக் குதிக்கவேண்டும் என அவர் துடித் தார். ஏனெனில் இறைவனுடைய குழந்தைகள் ஆன்ம ஞானம் பெறுமாறு செய்யும் இறைபணி குருதேவரின் தலேமைக்காகக் காத்துக்கொண்டிருக் கிறது. ஆதலால் குருதேவர் தனது குறிப்பேட்டில் பின்வருமாறு எழுதிவைத்திருக்கிருர்.

தியானத்திற்காக, தியானத்திற்காக மட்டுமே அதிக நேரம் செலவிடவேண்டும். தினசரி 12, 16 மணி நேரம்கூட இதற்காகச் செலவிடவேண்டும்.

''நூல்கள் வாசித்தல், மருத்துவத்தொண்டு ஆகியவற்றைக்கூடச் செய்யாமல், சிறிது காலம் தியானத்தில் மட்டுமே ஈடுபடவேண்டும்.

''குளிர்காலத்தை நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அது தியானத்திற்கு ஏற்றகாலம்.''

'சிறிது காலம்' என்று குறிப்பிடப்பட்டிருப்பது விசேஷமாக கவனத்தில் கொள்ளவேண்டிய ஒன்ருகும். (1) தொண்டு, தியானத்தைவிட முக்கியமானது எனச் சாக்குப்போக்குச் சொல்லி ஆன்மீக முன்னேற்றத்துக்கு மிக முக்கியமாகத் தேவைப்படும் தியானத்தில் ஈடுபடாமல் மனம் தட்டிக்கழிக்கப் பார்க்கிறது. இவ்வாறு நிகழாதிருக்க சிறிது காலம் தியானம் மட்டுமே செய்ய வேண்டும்.

(2) முதலில் தொண்டில் பற்று ஏற்படுகிறது; பிறகு அதன் பலனில் பற்று ஏற்படுகிறது. இதன் மூலம் கர்மயோகத்தின் அடிப்படையே தகர்க்கப் படுகிறது. குருதேவர் அடிக்கடி வலியுறுத்தி வந்த மற்ெருரு அற்புத சாதனே;

## ஒரு ஆக்கரீதியான சாதனை

ஒரு மாதம் அல்லது 15 நாட்களுக்கு எவரிடமும் சொல்லாமல் ஸ்வர்காஸ்ரமத்தை விட்டுப் போய்விடுங்கள். இரண்டு ஜோடி உடைகளையும் ஒரு போர்வையும் எடுத்துக்கொள்ளுங்கள், ஹரித்வாரிலிருந்து மீரட்வரை கங்கைக் கரையில் சுற்றித் திரியுங்கள், 'மதுகரி' யில் (Madhukari) வாழுங்கள். கிராமவாசிகளுடன் உரையாடாதீர்கள். இந்த நாட்களில் மௌனவிரதம் அனுஷ்டியுங்கள்.

இது முந்தைய சாதனைக்கு அடுத்தபடி இறைவன் எங்கும் நிறைந்திருப்பதை உணரவும், அனைவரையும் காத்துக் கருணைபுரியும் இறைவனின் இயல்பையும் உணரவே இந்த ஆக்கரீதியான சாதனை. அருளுரை நிகழ்த்துகின்ற வேலைகளில் குருதேவர் இந்த இன்ப வெள்ளத்தில் மிதந்து பரவசம் அடைவார். அப்போது, ஆசிரமம், மற்றும் வீடுகளில் கிடைக்கும் பணம் மற்றும் பிற வசதிகளைத் தூக்கி எறிந்துவிட்டு ஆன்மீக சாதகன் இறைவனின் கருணையை மட்டுமே நம்பியிருக்க இந்தச் சாதனை வழிவகுக்கிறது என குருதேவர் அறிவிப்பார். இந்த சாதனையின் மூலம் ஒரு சாதகர் ஏழைகள் மீது இரக்கப்படுவார். ஏழைகளுக்கும் அனாதைகளுக்கும் உதவும் வகையில் அவரது இதயம் பக்குவப்படும்.

## தன்னலமற்ற தொண்டு

குருதேவர் தன்னலமற்ற தொண்டின் திருவுருவம். தொண்டும் தியானமும் சமமான முக்கியத்துவம் தந்து செய்யப்பட வேண்டும் என அவர் உபதேசித்தார். ஒன்றுக்கொன்று ஆதரவாகவும், பக்கபலமாகவும் இருக்கும். தொண்டு, இதயத்தைத் தூய்மைப்படுத்துகிறது. அங்கு தெய்வீக ஒளி இடம் பெறுமாறு செய்கிறது. தியானத்தின் மூலம் ஞானஒளி தோன்றுகிறது. அந்த ஒளி உள்ளத்தை மாற்றியமைக்கிறது. இதன் மூலம் ''அனைவரிடத்திலும் இறைவனைக் கண்டுகொள்'', ''நாம் இறைவனுடைய கைகளில் உள்ள கருவிகள்'' என்ற மனப்பான்மையுடன் தொண்டு செய்தல் என்ற மனப்பான்மையுடன் தொண்டு செய்ய வழியேற்படுகிறது. ஆகவேதான் நன்னெறிக் குறிப்பேட்டில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது.

1. தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தொண்டு செய்க.
2. போக்கிரிக்கும் தொண்டு செய்க.
3. தாழ்ந்துகிடப்போருக்குத் தொண்டு செய்க.
4. முகமதியர்களின் கைகளால் வழங்கப்படும் உணவை உட்கொள்க.
5. சாதுக்களின் துணிகளைத் துவைத்துக் கொடுங்கள். அதில் ஆனந்தம் அடையுங்கள்.
6. தண்ணீர் எடுத்துச் செல்லுங்கள்.

## பிரபஞ்ச அன்பு

துப்புரவுப் பணியாளர்கள் போன்ற தாழ்த்தப்பட்ட மக்களுக்கும், போக்கிரிகளுக்கும் தொண்டு செய்யும்போது உள்ளத்தில் வெறுப்பும், கசப்பும் மறைந்து, பரம்பொருள் நன்மை, தீமைகளைக் கடந்து நிற்கிறது என்ற அனுபவம் ஏற்படுகிறது. அனைத்து சாதனைகளுக்கும் நோக்கமாக இருப்பது, அனைத்து உயிர்களிடத்திலும் அன்பு செலுத்துவதும் எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணுவதும் ஆகும்.

குருதேவரின் அகராதியில் வெறுப்பு என்ற வார்த்தைக்கு இடமில்லை. புனிதமற்ற, பயனற்ற இந்த உணர்வு அவர் அறியாத ஒன்று. நன்னெறிக் குறிப்பேட்டில் மற்றொரு கருத்து வருமாறு:

''இந்த உலகில் வெறுப்பதற்கு எதுவும் இல்லை. வெறுப்பு என்பது அறியாமை ஆகும். எந்த ஒரு பொருளையோ அல்லது உயிரையோ வெறுக்காமல், அந்த வெறுப்பை அன்பாலும், சிந்தனையாலும் அகற்ற வேண்டும்''.

குருதேவர் மேலும் கூறுகிறார்:

1. யாரேனும் உங்களைத் துன்பப்படுத்தியிருந்தால் அதனை உடனே மறந்துவிடுங்கள்.

2. அதனை ஒருபோதும் இதயத்தில் வைத்துக் கொள்ளாதீர்கள். அது வெறுப்பைத் தூண்டுகிறது.

1. மைத்ரி,
2. கருணை,
3. தயை,
4. பிரேமை, ஆகிய பண்புகளை வளர்த்துக் கொள்ளுங்கள்.

## பொறுமை

1. பழிவாங்காதீர்கள்.
2. தீமை செய்யாதீர்கள்.
3. தீமைக்கு பதிலாக நன்மையைச் செய்யுங்கள்.
4. அவமானத்தையும், வேதனையையும், தாங்கிக் கொள்ளுங்கள்.

லட்சியத்தை அடைவதில் தீவிர ஆர்வமுடைய குருதேவர் இதற்கு வழிவகுக்கும் மனநிலைகளைப் பின்வருமாறு நன்னெறிக் குறிப்பேட்டில் எழுதியிருக்கிறார்:

1. அக்ரோத நிலை (வெறுப்பின்மை)
2. நிர்வைர நிலை (பகைமையின்மை)

இவற்றைத் தொகுத்து குருதேவர் பிறிதொரு இடத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

பணிவு, மரியாதை, பண்பாடு, நன்னடத்தை, பெருந்தன்மை, சாந்தம் ஆகிய பண்புகளை வளர்த்துக்கொள்ளுங்கள். ஒருபோதும் முரட்டுத் தனமாகவோ கடுமையாகவோ அல்லது கொடுமை யாகவோ நடந்து கொள்ளாதீர்கள்.

சர்வம் பிரம்ம மயம் — அனைத்தும் ஒரே இறை வனின் வடிவங்கள் என்ற பாவனையை வளர்த்துக் கொள்ளுவது அற்புதமான ஆன்மீகப் பயிற்சி யாகும்.

நமஸ்கார சாதனை : முதலில் அனைவருக்கும் நமஸ்காரம் செய்யுங்கள்.

## நாவடக்கம்

குருதேவர் மக்களுடைய மனம் பக்குவப்பட வேண்டும் என விரும்பினார். ஆன்மீகப் பயிற்சிகள், மனத்தைக் கட்டுப்படுத்துவதற்காகவும், அகந் தையை அகற்றவும் தேவைப்படுகிறது. புலன்களைக் கட்டுப்படுத்த ஆன்மீக வாழ்வில் சில கட்டுப் பாடுகள் தேவைப்படுகிறது. மற்றொரு பக்கத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

1. உப்பை விட்டுவிடு.
2. சர்க்கரை உண்பதை நிறுத்து.
3. மசாலாப் பொருட்களை விட்டுவிடு.
4. காய்கறி உண்பதை நிறுத்து.
5. மிளகாய் உண்பதை நிறுத்து.
6. புளி உண்பதை நிறுத்து.

நாக்கைக் கட்டுப்படுத்தினால் அனைத்துப் புலன் களையும், மனத்தையும் கட்டுப்படுத்திவிடலாம்.

''இவை அனைத்தையும் வாழ்க்கையில் கடைப் பிடிக்காவிட்டால் நீங்கள் உண்மையான சாதுவாக ஆகமுடியாது'' என்று குருதேவர் நன்னெறிக் குறிப்பேட்டில் எழுதியிருக்கிறார்.

குருதேவர், ஆரம்பக்காலத்தில் ரிஷிகேசில் தவவாழ்க்கையில் ஈடுபட்டிருந்தபோது அவருடன் பழகும் வாய்ப்புக் கிடைத்தவர்கள் குருதேவரின் ஆரம்பகாலத் தவவாழ்க்கைபற்றிச் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறோம்.

ஸ்வர்காஸ்ரமத்தில் குருதேவர் சாதுக்களுக்குத் தொண்டு செய்திருக்கிறார். இதை சுவாமி பரமானந்தாஜி நேரில் பார்த்திருக்கிறார். குருதேவர், மகாத்மாக்களின் ஆடைகளைத் துவைத்துக்கொடுப்பார், கங்கையிலிருந்து நீர் கொண்டு வருவார். அவர்கள் உடல் நலம் குன்றியிருந்தால் சிகிச்சை அளிப்பார். அவர்களுக்கு தருமச் சாலையிலிருந்து உணவு கொண்டு வந்து கொடுப்பார். பைபிளில் சொல்லப்பட்டிருப்பது போல அவர் ''குருடர்களுக்குக் கண்களாகவும், கால்களை இழந்தவர்களுக்குக் கால்களாகவும்'' இருந்து தொண்டு செய்தார்.

## ஒரு அற்புதம்

நமஸ்கார சாதனையைப் பொறுத்தவரையில் ஒரு ருசிகரமான சம்பவத்தை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். பகவத் கீதையை மிகச் சிறப்பாகக் கற்றுணர்ந்தவரும், பிறருக்கும் விளக்கும் திறமை படைத்தவருமான ஸ்ரீ சுவாமி அத்வயானந்தாஜியுடன் 1949 செப்டம்பர் 24-ந் தேதி நான் உரையாடிக் கொண்டிருந்தபோது அவர் குறிப்பிட்ட ஒரு சம்பவம் வருமாறு:

''சுவாமிஜி ஸ்வர்காஸ்ரமத்தில் இருந்தபோது அவருக்கு அருகில் ராஜராஜேஸ்வரானந்தா என்னும் தேவி உபாசகர் தங்கியிருந்தார். ஒரு சமயம் நான் அவரை காசியில் சந்தித்தேன். நானும் தெற்கிலிருந்து வருபவன் என அறிந்து கொண்டு தங்குவதற்குக் குடில் ஒன்று தந்து உணவும் அளித்தார். அன்று மற்றொரு நேரம் அவருடன் பேசிக்கொண்டிருந்தபோது ''தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்'' என்று கேட்டார். நான் சுவாமிஜியின் சீடன் என்று பதிலளித்தேன். உடனே அவர் புன்முறுவல் பூத்துவிட்டு, ''ஓ! நாய், பறவை, கழுதை ஆகியவற்றுக்கும் நமஸ்காரம் செய்யும் சுவாமியின் சீடரா நீங்கள்!'' என்று கேட்டார். பிறகு அவர் பேசும்போது தான் வேடிக்கையாக இப்படிக் கூறவில்லை என்றும் உண்மையையே சொன்னதாகவும் கூறினார். அனைத்துத் தரத்திலும் உள்ள மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் சுவாமி நமஸ்காரம் செய்வதைத் தான் நேரில் கண்டதாக அவர் கூறினார். அவர் அனைத்தையும் கடவுளாகக் காணுகிறார். 'சர்வம் பிரம்மமயம்' என்பது அவரது நிலையான எண்ணம்.

இந்த சம்பவத்தைக் குறிப்பிட்ட சுவாமி அத்வயானந்தாஜி உடல் புல்லரிக்கும் வகையில் மேலும் தொடர்ந்தார்'

''இந்த ராஜராஜேஸ்வரானந்தாஜி கடுந்தவம் புரிந்தார். சப்தசதி பாராயணம், அன்னையை வழிபடுதல், ஜபம், தியானம் ஆகியவற்றில் அவர் ஈடுபட்டு வந்தார். இந்த சாதனை 12 ஆண்டுகளுக்கு மேலாக நடைபெற்று வந்தும் அவருக்கு சித்தி ஏற்படவில்லை. துர்கா பூஜை சமயம் நெருங்கியது. அவர் அம்பாளுக்கு பட்டாடை உடுத்தி

நகை அணிவித்து அலங்காரம் செய்து துர்காபூஜை செய்ய விரும்பினார். ஆனால் அவரிடம் இவற்றில் எதுவும் இல்லை, பணமும் இல்லை. நவராத்திரிக்கு முதல் நாள் அவரது அறைக்கதவை யாரோ தட்டினர். அவர் கதவைத் திறந்தார். அங்கு சில பஞ்சாபிப் பெண்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் பட்டாடைகள், பழங்கள், பணம், நகைகள் ஆகியவற்றைத் தட்டுக்களில் கொண்டு வந்திருந்தனர். 'உங்களுக்கு அருகில் வசிக்கும் சுவாமி சிவானந்தாஜி இவற்றை உங்களிடம் கொடுக்கச் சொன்னார்கள்' என்றும் அவர்கள் கூறினர். ராஜராஜேஸ்வரானந்தாஜியும் அவர்கள் கூறியதை நம்பினார். தான் நவராத்திரி பூஜை செய்ய சுவாமிஜி தனது சிஷ்யைகள் மூலம் பூஜைக்கு வேண்டிய பொருட்களை அனுப்பியிருக்கிறார் போலும் என்று எண்ணி அவற்றைப் பெற்றுக் கொண்டார். "இந்தத் தட்டுக்கள் யாருடையவை" என்று அவர் கேட்க "தருமச் சாலையிலிருந்து கொண்டுவரப்பட்டவை" என அந்தப் பெண்கள் பதிலளித்தனர். பிறகு அவர்கள் தட்டுக்களை எடுத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டனர். ராஜராஜேஸ்வரானந்தாஜிக்கு இருப்புக் கொள்ள வில்லை. அவர் சுவாமிஜியின் குடிலுக்குச் சென்றார். கதவைத் தட்டினார். சுவாமிஜியும் கதவைத் திறந்தார்.

"அந்த பஞ்சாபிப் பெண்கள் யார் சுவாமிஜி?"

"எந்த பஞ்சாபிப் பெண்கள்?"

"நவராத்திரி பூஜைக்கு பட்டாடைகள், நகைகளுடன் தாங்கள் அனுப்பியிருந்த பெண்கள்".

"நான் யாரையும் அனுப்பவில்லை".

சுவாமிஜியின் பதிலைக் கேட்ட ராஜ ராஜேஸ்வரானந்தாஜி ஆச்சரியப்பட்டார். எல்லாம்

மர்மமாக இருந்தது. உடனே அவர் தருமச் சாலேக்கு ஓடினுர். அங்கு அந்தப் பெண்கள் இல்லே.

அத்வயானந்தாஜி தொடர்ந்தார், ''அவர் இந்தச் சம்பவத்தைக் கூறும்போது கண்களில் நீர் பெருகியது. 'நான் அன்னேயின் தரிசனம் பெறப் பல ஆண்டுகள் சாதனே புரிகிறேன். சுவாமி சிவானந்தருக்கு தந்திர சாஸ்திரம் தெரியாது. அதில் அவருக்குப் பயிற்சியில்லே. ஆயினும் அன்னே எனக்கு தரிசனம் தர விரும்பியபோது சிவானந்தரின் பெயரால் அது நிகழ்ந்திருக்கிறது! அன்னே எனக்குப் பட்டாடைகளேயும், நகைகளேயும் ஆத்ம சாக்ஷாத்காரத்தையும் தந்தருளினுள்'' என்று அவர் கூறினுர்.

குருதேவரின் ஒருங்கிணேந்த யோகம், பரிபூர்ண நிலே அடைய உதவும் ராஜபாட்டை அது.

## நடுவழிப் பாதை

குருதேவர் எந்த ஒரு வழிமுறையிலும் அதன் எல்லேயைத் தொட்டு விடுவது கிடையாது. நிதான மாக நடுவழியில் நடைபோட்டார். புலனடக் கத்துக்கு அவர் கடைபிடித்த முறை புலன்களே அடக்குவது அல்ல; அடங்கச் செய்வது ஆகும். ''எந்த ஒரு நடைமுறையிலும் குறிப்பாக தவ வாழ்க்கையில் செயல் முறைகளின் எல்லேகளேத் தொட்டு விடாதீர்கள்'' என்று அவர் சாதுக் களுக்கு அறிவுரை கூறுவார். பல சாதகர்கள் மற்றும் சாதுக்களின் பிரச்னேகள் மற்றும் அனுப வங்களே குருதேவர் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்திருக் கிருர். ஒரு விரதத்தைக் கடைப்பிடிக்கும் அன்பர்கள்

அதன் எல்லையைத் தொட்டுவிடுகிறபோது எதிர் பார்ப்பதற்கு நேர் மாறுன விளைவு ஏற்படுகிறது அல்லது மிகப்பெரும் வீழ்ச்சி ஏற்படுகிறது. குருதேவர் புலன்களுடன் நடத்திய 'கொரில்லாப் போர்' ருசிகரமானது.

1948 செப்டம்பர் 23ல் ஒரு வழக்கறிஞர் ஆசிரமத்திற்கு வந்தார். அப்போது குருதேவர் எங்களிடம் பின்வருமாறு கூறினுர்! "இந்த வழக்கறிஞர் 1924-ல் எனக்கு ஐந்து ரூபாய் கொடுத்தார். நான் அப்பொழுதுதான் ரிஷிகேசம் வந்திருந்தேன். காய்ந்துபோன ரொட்டி, பருப்பு இவற்றை மட்டும் உண்டு உயிர் வாழ்வது என்பது எனக்குப் பழக்கமில்லாத செயலாகும். அந்த ஐந்து ரூபாய் கையில் கிடைத்ததும் கடைக்கு ஓடினேன். மனத்திருப்தி ஏற்படுகிற வரையில் ஜிலேபி வாங்கித் தின்றேன்." இந்த நேரத்தில் இரண்டு சம்பவங்களை நாம் நினைவுபடுத்திக் கொள்ளுவோம். ஒரு சம்பவம் குருதேவர் ஹரித்துவாருக்கு வந்து சேர்ந்ததும் நிகழ்ந்ததாகும். அங்கு ஒரு யாத்திரீகர் சிறிதளவு பணம் கொடுத்தபோது குருதேவர் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை. அதில் பற்றற்றவராக இருந்தார். அந்தப் பணத்தை கண்ணுல் பார்க்கவுமில்லை. ஆனுல் வழக்கறிஞர் ஐந்து ரூபாய் கொடுத்தபோது ஜிலேபியை ருசித்துத் தின்ன நாக்கை அனுமதித்தார். எதையும் அடக்கி வைக்கும்போது எதிர்பார்ப்பதற்கு நேர்மாறுன பலனே விளைகிறது. சிறிது காலத்திற்குப் பிறகு குருதேவரிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவரும் குருதேவரின் முதல் சீடர் குழாமில் ஒருவருமான ஒரு அன்பர் குருதேவர் பால் வாங்கி உட்கொள்ளுவதற்காக ஐந்து ரூபாய் கொடுத்தார். ஆனுல் குருதேவர் பால் அருந்த விரும்பவில்லை. 'பிரம்ம வித்யா' என்னும் அமுதத்தைப் பருக விரும்பினுர்.

'பிரம்ம வித்யா' குருதேவர் அச்சிட்டு வெளியிட்ட முதல் பிரசுரம். சந்த் நாராயண்ஹர்குலி என்ற அன்பர் தந்த நன்கொடையைப் பயன்படுத்தி அந்த பிரசுரம் வெளியிடப்பட்டது. சிவானந்தர் நூல்கள் அடுக்கி வைக்கப்பட்ட அலமாரியை குருதேவர் தனது சீடர்களுக்குச் சுட்டிக்காட்டி "இங்கு என்னைச் சுற்றிப் புத்தகங்கள் இருப்பதைக் காணுகிறீர்கள் இதுவெல்லாம் சந்த் நாராயண்ஹர்குலி தந்த பால் ஆகும்" என்றார். இந்தப் பிரசுரம் அச்சிடப்பட்டு குருதேவரைக் காண வருவோருக்கு கொடுக்கப்பட்டது. அதன் பிறகு இது பெரிய நிறுவனமாக வளர்ந்தது. ஆனாலும் இதுவெல்லாம் சந்த் நாராயண் ஹர்குலி பாலுக்காகக் கொடுத்த பணத்துடன் துவக்கப்பட்டது என்பதை குருதேவர் மறக்கவில்லை.

முதல் சம்பவம் வைராக்கியத்தைச் சுட்டிக் காட்டுகிறது. இரண்டாவது சம்பவம், அடக்கு முறையினைத் தவிர்ப்பதை வலியுறுத்துகிறது. மூன்றாவதாக, ஆசை தானே அடங்குகிறது. ஒரு மகத்தான வாழ்க்கையில் நிகழ்ந்த இந்த மூன்று சம்பவங்களும் சாதகர்களின் கண்களைத் திறப்பவை. ஆன்மீகப் பயிற்சியில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு நிரந்தர விழிப்புணர்வு அவசியம். ஒருவர் சுயகட்டுப்பாட்டுக்கு அடக்கு முறைகளைக் கடைப்பிடிப்பதை ஜாக்கிரதையாகத் தவிர்த்துவிட வேண்டும். ஆனால் நல்ல பலன்கள் ஏற்பட நற்சிந்தனை, விவேகம் ஆகியவற்றைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். இவ்வாறு ஏற்படுகிற கட்டுப்பாடு, நிரந்தரமாக நீடித்திருக்கும்; தீய விளைவுகள் எதுவும் ஏற்படாதவாறு செய்யும்.

## தவ வாழ்க்கை

குருதேவர் தவ வாழ்க்கை மேற்கொண்டிருந்த இந்தக் காலகட்டத்தில் நிகழ்ந்த மற்றொரு சம்பவம்

இங்கு குறிப்பிடத்தக்கது. இந்தச் சம்பவத்தை மகாத்மா ராஜ்கிரி அவர்கள் ஸ்ரீ சுவாமி சிதானந்தா அவர்களிடம் பின்வருமாறு தெரிவித்தார்.

''சுவாமிஜி இன்று இருக்கும் நிலையில்தான் நீங்கள் அவரை அறிந்து கொண்டிருப்பீர்கள். இப்பொழுதெல்லாம் அவர் மிக சௌகரியமாக இருக்கிறார் என நீங்கள் நினைக்கலாம், அல்லவா? இப்பொழுது சுவாமிஜி இருக்கும் நிலைக்கு முற்றிலும் மாறான ஒரு நிலையில் அவர் இருந்ததை நான் அறிவேன். அது உங்களுக்குத் தெரியாது. அக் காலத்தில் அவர் தனது அடிப்படைத் தேவைகளைக் கூடப் புறக்கணித்துவிட்டுத் தவ வாழ்க்கையில் தீவிரமாக ஈடுபட்டார். அவர் உலர்ந்துபோன ரொட்டிகளை உண்டு வந்தார். ஒரு நாளைக்குரிய உணவை ஏழு நாட்களுக்கு உண்பார். காய்ந்து போன ரொட்டிகளை கங்கை நீரில் தோய்த்து உண்பார். இவ்வாறு தனது பொன்னான நேரத்தை யெல்லாம் தியானம், ஜபம், உபாசனை இவற்றில் செலவிட்டார். உப்பு இல்லாத, ருசி இல்லாத ரொட்டியை அவர் தனது பிரதான உணவாகக் கொண்டார்''.

குருதேவர் ஆடைகளை எவ்வாறு உடுத்தி வந்தார் என்பதை ஸ்ரீ ராஜ்கிரி பின்வருமாறு குறிப் பிட்டார்.

''அவர் இடுப்பில் ஒரு துண்டைக் கட்டிக் கொண்டு மற்றொரு துண்டை தோளில் போட்டுக் கொள்ளுவார். அவரது அறையில் ஒரு ஜமுக்காளமும் தண்ணீர் பானையும் இருக்கும். ஒரு சமயம் அவர் அந்தப் போர்வையை ஒரு ஏழை யாத்திரீகருக்குக் கொடுத்துவிட்டு மெல்லிய பருத்தி ஆடையைப் போர்த்திக்கொண்டு குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தார்''.

குருதேவரின் ஆன்மீக சாதனை பற்றி ஸ்ரீ ராஜ்கிரி பின்வருமாறு கூறினார்.

"அவர் ஜபம் செய்வதற்கு இரவு வெகு நேரம் கழித்து கங்கைக்குச் செல்லுவார். கங்கையில் இறங்கி இடுப்பளவு குளிர்ந்த நீரில் நின்று கொண்டு காலையில் சூரியன் உதிக்கும்வரை மந்திர ஜபம் செய்வார். காலையில் கடவுளை கதிரவன் வடிவில் கண்டு வணங்கிய பின்னரே அவர் கரையேறுவார்.

## ஓடியோடிச் செய்த தொண்டு

குருதேவரின் தவ வாழ்க்கை சுய நல நோக்கம் கொண்டதல்ல. பிறருக்குத் தொண்டு செய்வது தவ வாழ்க்கையின் ஒரு அம்சம் என குருதேவர் கருதினார். குருதேவர் சிறு சிறு மருந்துப் பொட்டலங்களைத் தன்னுடன் வைத்திருப்பார். பத்ரிநாத் செல்லும் யாத்திரீகர்களுக்கு அவற்றைக் கொடுத்து தேவைப்பட்டால் வழியில் பயன்படுத்திக் கொள்ளுமாறு சொல்லுவார். ஒரு சமயம் ஒரு யாத்திரீகர் யாத்திரை துவங்குவதற்கு முன் குருதேவரை தரிசிக்க வந்தார். குருதேவரும் அவருக்கு மருந்துப் பொட்டலம் ஒன்றைக் கொடுத்தார். அந்த யாத்திரீகர் அங்கிருந்து புறப்பட்டார். அவர் சென்ற பிறகு அந்தப் பொட்டலத்தில் 'அமிர்த தாரை'யுடன் ஒரு சிறு சீசாவை சேர்த்து வைத்திருக்கலாமே என்ற நினைவு வந்தது. மறு நாள் அதிகாலையில் குருதேவர் சீசாவை கையில் எடுத்துக் கொண்டு பத்ரிநாத் நோக்கி நடக்கத் தொடங்கினார். யாத்ரீகர் அதற்குள் லக்ஷ்மணஜூலா சென்று விட்டார். குருதேவர் அந்த யாத்ரீகரைப் பிடித்து விடவேண்டும் என்ற உணர்வுடன் வேகமாகச் சென்றார். கருடசட்டியில்கூட யாத்திரீகர் தென்படவில்லை. ஆயினும் குருதேவர் மனந்தளரவில்லை.

தொடர்ந்து யாத்திரீகரைத் தேடிக் கண்டுபிடித்து சீசாவை அவர் கையில் கொடுத்தார். குருதேவர் எந்த வேலையையும் முழுமையாகச் செய்ய வேண்டும் என்பதில் பேரார்வம் கொண்டிருந்தார்.

## நிரந்தர விழிப்புணர்வு தடைகளைத் தகர்க்கிறது

குருதேவர் தீவிரமாகத் தவவாழ்க்கை மேற் கொண்டிருந்த காலத்தில் ரிஷிகேசத்தை விட்டு வெளியில் செல்லுவது அரிது. எப்பொழுதாவது ரிஷிகேசத்தைச் சுற்றியுள்ள நகரங்கள் மற்றும் கிராமங்களுக்குச் சென்றால் அங்குள்ள மக்களை தமது பாடல்கள் மற்றும் கீர்த்தனைகள் மூலம் உற்சாகப்படுத்துவார்.

தனிமையில் இருந்து தவம் செய்கிற சிலர் நகரங்களுக்கு வருகிறபோது உலகியலில் உழலும் சராசரி மனிதர்களைவிட அதிகமாக உலகச் சூழலில் நாட்டம் கொண்டுவிடுகின்றனர்.

குருதேவருக்கு இந்தநிலை ஒருபோதும் ஏற்பட்டதில்லை. வாழ்க்கை வரலாறு எழுதிய ஒரு அன்பரிடம் குருதேவர் உரையாடிக் கொண்டிருந்த போது, தனது சாதனைக் காலத்தில் தனக்கு எந்தவிதமான தடுமாற்றமும் ஏற்படவில்லை என்றும் மனப்போராட்டம் ஒருபோதும் ஏற்பட்ட தில்லை என்றும் கூறியிருக்கிறார். தடை ஏதும் இல்லாமல் ஆன்மீக சாதனையில் ஈடுபட்டதாகவும் கூறியுள்ளார். குருதேவர் தோன்றி மறையும் சாதாரண மனிதரல்ல; தனது சொல்லாலும் செயலாலும் உலகுக்கு வழிகாட்ட அமர வாழ்வு பெற்று வந்த தெய்வம்.

குருதேவர் தனது சாதனைக் காலத்தில் துன்பங்களைச் சந்திக்கவேயில்லை என்று சொல்ல முடியாது. அவருக்குள் பேரானந்தம் நிரந்தரமாக நிறைந்திருந்தபடியால் புறத்தே ஏற்பட்ட இன்னல்கள் அவரை வருத்தவில்லை.

குருதேவரின் ஆரம்பகாலச் சீடர்களில் ஒருவராகிய ஸ்ரீ சுவாமி நாராயணானந்தாஜி ஒரு ரகசியத்தை வெளிப்படுத்தியிருக்கிறார்: குருதேவர் எப்போதும் விழிப்புடன் இருந்தார். ஆதலால் அவரது சாதனைக்குக் குறுக்கீடாக எந்தத் தடையும் தோன்றவில்லை. கவர்ச்சிக்கும், சோம்பலுக்கும் அவர் இடம் கொடுத்ததில்லை. மனமும் புலன்களும் அவருக்குக் கட்டுப்பட்டிருந்தன.

ஒரு அன்பர் ('N') "சிவானந்தர் — பூர்ணமான குருநாதர்" என்ற தலைப்பில் குருதேவரின் வாழ்க்கை வரலாற்றை எழுதியிருக்கிறார். அவர் குறிப்பிட்டிருப்பதாவது :

"தனது உடல், குறிப்பிட்ட ஒரு வேலையைச் செய்ய மறுத்தாலோ ஏதேனும் தவறு செய்தாலோ, பெயர் புகழ் விரும்பினாலோ அவர் தனது உடம்பை செருப்பாலும் துடைப்பத்தாலும் அடிப்பார்".

1946ல் குருதேவர் திருவாய் மலர்ந்தருளிய ஒரு விஷயம் :

குருதேவரின் சீடர்கள் அவரை வணங்கி, மலர்களை சமர்ப்பித்து, அவரைப் புகழ்ந்து பாராட்டிய பின்னர் அவர் தனது குடிலுக்குச் சென்றதும் தன்னைச் செருப்பால் அடித்துக்கொண்டு "சீடர்கள் மாலை போட்டபோதும் வணங்கியபோதும் மகிழ்ச்சி ஏற்பட்டதுபோல இப்போதும் மகிழ்ச்சி ஏற்படுகிறதா?" என்று உடலைப் பார்த்துக் கேட்டார்.

## கொழுந்துவிட்டு எரியும் வைராக்கியம்

1925ல் அவர் ஷெர்கோட் எஸ்டேட்டுக்கு விஜயம் செய்தது இங்கு குறிப்பிடத் தக்கது. ஷெர்கோட் ராணி குருதேவரை தகுந்த மரியாதைகளுடன் வரவேற்றார். ராணியின் செயலாளர் குருதேவருக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுத்தார். குருதேவர் தனது கீர்த்தனை மற்றும் பஜனை மூலம் அங்கு தெய்வீகச் சூழ்நிலையைத் தோற்றுவித்தார். அந்த எஸ்டேட்டில் இருந்த ஏழைகளுக்கு மருத்துவ உதவியும் செய்தார்.

ஒரு பௌர்ணமி இரவில் மாமரத்தின் கீழ் தனிமையில் அமர்ந்து ஹார்மோனியம் வாசித்துக் கொண்டு இறைவனின் திருநாமத்தை மனம் உருகிப் பாடினார். தெய்வீகப் பரவசநிலை அடைந்தார். ஆனந்தக் கண்ணீர் பெருகிக் கன்னங்களில் வழிந்தோடியது. அவரது கீர்த்தனை அருகிலிருந்த மண்டி மகாராணி உட்பட பலரது கவனத்தை ஈர்த்தது. அப்போது இரவு 10 மணிக்குமேல் ஆகி விட்டது. குருதேவர் உற்சாகமாகப் பாடினார். அதனைக் கேட்ட மக்களின் கவலைகளையெல்லாம் கீழே இறக்கி வைத்தார். அவர்களது ஆத்மா ஆன்மீக ரீதியாக உயர்நிலை அடையச் செய்தார். பிறகு மண்டி மகாராணி குருதேவரையோ அல்லது அவரது சீடர்களையோ கண்டால் பின்வருமாறு கூறுவார்.

''உங்களது இனிய பாடல்களை என்னால் மறக்க முடியாது. அவை இன்னும் என் மனதில் பசுமையாக இருக்கிறது. அதன் செல்வாக்கை இப்போதும் நான் உணருகிறேன். எனது ஆத்மா மேல்நிலை அடைய அவை உதவின''.

குருதேவரின் இனிய பாடல்களையும் கீர்த்தனை களையும் கேட்ட ராணியும், எஸ்டேட் நிர்வாகி களும் குருதேவர் அங்கேயே நிரந்தரமாகத் தங்க வேண்டுமென்று வேண்டுகோள் விடுத்தனர். ஆனால் குருதேவர் எவரிடமும் சொல்லாமல், யார் கண்ணிலும் படாமல் அங்கிருந்து வெளியேறினார்.

இடுப்பில் ஒரு துண்டும் தோளில் ஒரு துண்டு மாக உடுத்திக் கொண்டு குருதேவர் ரிஷிகேசம் நோக்கி நடந்தார். அது குளிர்காலம். பல நாட்கள் அவர் கங்கை நீரை மட்டுமே உணவாகக்கொள்ள வேண்டியிருந்தது. கடுங்குளிர் உடலை வருத்தினாலும் நாம ஜபம் உடலுக்கு வெதுவெதுப்பாக இருந்தது. பூமித்தாய் அவருக்கு புல்தரையைப் படுக்கையாகத் தந்தாள். குருதேவர் செல்லும் வழியில் ஒரு கிராமத்தைக் கண்டால் சிறிய அளவில் ஒரு கூட்டத்தைக் கூட்டி பஜனை செய்வார். அவர் தனது சொந்த சௌகரியங்களைப் பற்றிக் கவலைப் படவில்லை. அவர் ரிஷிகேசம் அடைகிறபோது உடல் களைத்திருந்தது. ஆனால் உள்ளம் களைக்கவில்லை.

இதன்பிறகு குருதேவர் பாரததேசம் முழுவதும் விரிவாக தீர்த்த யாத்திரை செய்தார். பரிவ்ராஜக ராக யாத்திரை செய்த குருதேவர் அற்புதமான அனுபவங்களைப் பெற்றார். அவர் சாலையோரங் களில் உறங்க வேண்டியிருந்தது. பல நாட்கள் தொடர்ந்து பட்டினி கிடக்க வேண்டியிருந்தது. நெடுந்தூரம் நடந்து செல்ல வேண்டியிருந்தது. உடலை வருத்தும் மற்றும் பல இன்னல்களை அனுப விக்க வேண்டியிருந்தது. இறைவன் கருணைக் கடலாக இருந்து பக்தர்களைக் காத்துவருவதை அவர் மீண்டும் உணர்ந்துகொள்ள இந்த யாத்திரை உதவியது. இந்த அனுபவங்கள், அவரை திதிக்ஷு வாக (Titikshu) வும் தனித்து நின்று செயல்படும் யோகியாகவும் உருவாக்கின.

# 18. ஞானிகள், துறவிகள் மற்றும் யோகிகளுடன் தொடர்பு

தீவிரமான தவ வாழ்க்கைக்கு அடுத்தபடியாக முக்கியத்துவம் வாய்ந்தது சத்சங்கம் ஆகும். சத் சங்கம் சாதகர்களின் ஆன்மீக வளர்ச்சிக்கு உதவுகிறது. குருதேவர் ஒவ்வொரு நாளும் சத் சங்கத்தில் கலந்து கொள்ளுவார். ரிஷிகேசத்தில் குருதேவர் தவ வாழ்க்கையைத் துவக்கிய காலத்தி லிருந்து இன்று வரை தினசரி சத்சங்கத்தில் கலந்து கொள்ளவோ, சத்சங்கத்தை நடத்தவோ அவர் தவறவில்லை. உலகில் உள்ள எந்த சக்தியும் அவர் சத்சங்கத்தில் கலந்து கொள்ளாதவாறு செய்ய முடியாது.

ஆரம்ப காலத்தில் தருமச் சாலைகளிலும், ஆசிர மங்களிலும் நடைபெற்ற பொது சத்சங்கங்களில் அவர் தவறாது கலந்து கொண்டார். ஸ்வர்காஸ்ர மத்தில் அவர் தங்கி இருந்த கால கட்டத்தில் சத் சங்கத்தின் மையமாக (சத்தாக) அவர் செயல் பட்டார். அவரைச் சுற்றி அற்புதமான, தெய்வீக மான ஞானிகளும், துறவிகளும், யோகிகளும் இருந்து ஆன்மீக ஒளிபரப்பிக் கொண்டிருந்தனர். எண்ணற்ற சாதகர்களும், யாத்திரீகர்களும், பக்தர் களும் அவர்களது உபதேசம் என்னும் அமுதத்தை தினசரி மாலை நேரத்தில் பருகுவர். குருதேவர் மகாத்மாக்களை அழைத்து மேடையில் அமரச் செய்து மலர் மாலைகள் அணிவித்துவிட்டு தான் ஒரு ஓரத்தில் அமர்ந்து கொள்வார். அவர்களை அருளுரையாற்றுமாறு கேட்டுக்கொள்ளுவார். சத் சங்கத்தின் நிறைவில் பிரசாத வினியோகத்திற்கு ஏற்பாடு செய்வார். குருதேவரைச் சுற்றியிருக்கும் ஞானிகளும், துறவிகளும், யோகிகளும் ஒன்றுகூடி

தத்துவ சம்பந்தமான விஷயங்களில் விவாதம் செய்வர். ஆன்மீக வளர்ச்சிக்கு அது பெரிதும் உதவியாக இருக்கும்.

ஸ்ரீ சுவாமி அத்வைதானந்தாஜி என்ற ஒரு ஞானி இருந்தார். ஒரு ஞானியிடம் சத்சங்கல்ப சக்தி முழுமையாக இருக்கிறது என்றும், ஞானி பாபங்களைப் பொசுக்குகிறார் என்றும் அனைத்து விதமான வேதனைகளிலிருந்தும் தன்னை விடுவித்துக் கொள்ளுகிறார் என்றும் அவர் கருதினார்.

ஸ்ரீ சுவாமி ஸ்வயம்ஜோதிஜி ஒரு வேதாந்தி. 'ஒரு ஞானியிடத்தில் சித்து வேலைகள் இல்லை. அவை அனைத்தும் மாயை, கேவல ஞானம்தான் (Kevala Gnanam) பிரம்மம்' என்று அவர் வாதிடுவார். பிறகு சுவையான விவாதம் இருக்கும்.

பிரம்மச்சாரி யோகானந்தா என்பவர் தந்திர சாஸ்திரத்தில் மகாவிற்பன்னர்; யோகி. அவர் சக்தி வழிபாடு மற்றும் மகாயோகம் குறித்து அருளுரையாற்றுவார்.

வெள்ளை உடையில் துறவியாகத் திகழ்ந்த வழக்கறிஞர் திரு. சந்த் நாராயண் விவாதத்துக்கு ஒரு விஷயத்தை வைப்பார்.

''பூரண ஞானியாகத் திகழ்ந்த யாக்ஞவல்கியருக்குக்கூட ஆசையும் கோபமும் இருந்ததே! இதனை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. பல விஞ்ஞானிகள் உலக நன்மையைக் கருதி பல கண்டுபிடிப்புகளை நிகழ்த்தியிருக்கிறார்கள். ஹிந்து யோகிகளும் தமது புதிய கண்டு பிடிப்புகள் மூலம் ஏன் உலகுக்கு உதவக்கூடாது?''

யோகீந்தரர் ஸ்ரீ சுவாமி சாந்தி கிரிஜி குண்டலினி யோகம், சக்கரங்கள், நாடிகள் ஆகிய வைபற்றிச் சொற்பொழிவு நிகழ்த்துவார். வணக்கத்துக்குரிய அன்னை ஸ்ரீமதி சூரத்குமாரி தேவி (ஒரு மகாராணி) ஞானம், வேதாந்தம், யோகம் பற்றிய கேள்விகளைக் கேட்டு யோகிகளின் அறிவாற்றலை வெளிப்படச் செய்வார். அறிவாற்றல்மிக்க மற்றொரு பெண்ணாகிய சர்தாரிணி நானகிதேவி, ஏகரசவாதம், க்ரமமுக்தி மற்றும் கைவல்யமோக்ஷம் ஆகிய தலைப்புக்களிலும், ஜீவன் முக்திக்கும், விவேக முக்திக்குமிடையேயுள்ள வேறுபாடுகள் ஆகியவை குறித்தும் சொற்பொழிவாற்றுவார். ஒரு மாபெரும் சம்ஸ்க்ருத அறிஞரும் பிரபல வேதாந்தியுமான ஸ்ரீ சுவாமி தபோவனம்ஜி கேவல அத்வைத தத்துவத்தை விளக்கியும் யோக சாஸ்த்திரத்தைக் குறை கூறியும் ஆதாரபூர்வமாகவும், ஆணித்தரமாகவும் பேசுவார். ஒரு நல்ல சம்ஸ்க்ருத பண்டிதரை சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டுவிட்டால் சுவாமி தபோவனம்ஜி அவருடன் சம்ஸ்க்ருதத்தில் உரையாடுவார்.

பிறகு வணக்கத்துக்குரிய அன்னை ஓங்கார ஈஸ்வரி தானே இயற்றிய பாடல்களை தம்புராவின் உதவியுடன் பாடி அனைவரையும் மகிழ்விப்பார். அந்தப் பாடல்கள் அனைத்தும் உருவமற்ற பரம் பொருளைப் போற்றிப் பாடப்பட்டவையாகும். அந்தப் பாடல்கள் குஜராத்தியிலும், ஹிந்தியிலும் அமைந்திருக்கும். பரவசமூட்டும் அந்த இசை நிகழ்ச்சியில் ஸ்ரீசுவாமி ஆத்மானந்தாஜியும் கலந்து கொண்டு பாடல்களைப் பாடுவார்.

மேலும் எப்பொழுதும் அமைதியாகத் தோற்றமளிக்கும் மகா தபஸ்வியான ஸ்ரீ சுவாமி புருஷோத்தமானந்தாஜி சமாதி நிலையிலிருந்து வெளிப்பட்டு வந்து பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் மீது நாமாவளியைப்

பாடுவார். பிறகு அவர் சிவமஹிம்ஞ ஸ்தோத்ரத்தைப்பாடி அங்கு கூடியிருப்பவர்களை ஆன்மீக விழிப்புணர்வு கொள்ளச் செய்வார். சாந்த சொரூபியாக இருக்கும் ஸ்ரீ சுவாமி நாராயணு இறைவன் திருநாமத்தைப் பாடுகிறபோது கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடும். ஸ்ரீ சுவாமி பரமானந்தாஜி, ''சிவாவின் வாழ்வும் வாக்கும்'' என்ற தலைப்பில் எழுதியுள்ள நூலில் பின்வருமாறு கூறியிருக்கிறர். ''இந்தப் சபை ரிஷி யாக்ஞவல்கியர், கார்கி, பூஜ்யர், உஷஸ்தர், மகோலர், உத்தாலகர் மற்றும் பல ஞானிகள் அமர்ந்து விவாதம் செய்த ஜனக மன்னரின் அவையைப்போலத் தோற்றமளிக்கும்.... இந்த ஆன்மீகப் பேரவையின் அங்கத்தினர்களும், இல்லறவாசிகளும் இந்த சத்சங்கத்தில் கலந்துகொண்டு ஆன்மீகப் பேருரைகளைக் கேட்டுப் பேரானந்தமடைவர். அவர்கள் அடைகின்ற ஆனந்தத்தை விளக்க வார்த்தைகளில்லை.''

## 19. குடில் எண் — 111 ஒரு கண்ணேட்டம்

ஸ்வர்காஸ்ரமத்தில் குருதேவர் தங்கியிருந்த குடிலை சற்று உற்றுநோக்குவோம்.

குருதேவர் குடில் எண் 111-க்கு வந்து வசிக்கத் துவங்கிய பிறகு பிரபலமாகி விட்டார். ஸ்வர்காஸ்ரமத்திற்கு வருகின்ற யாத்திரீகர்கள் அனைவரையும் ஸ்வர்காஸ்ரம நிர்வாகிகள் குருதேவரை தரிசிக்க அனுப்பி விடுவார்கள். ஸ்வர்காஸ்ரமத்தில் இருந்த மகாத்மா மற்றும் யோகி குருதேவர் மட்டும்தான் என்று ஸ்வர்காஸ்ரம நிர்வாகிகள் கூறுவார்கள். 1932-ம் ஆண்டு குருதேவருடன் இணைந்துகொண்ட சுவாமி பரமானந்தாஜி பின்வருமாறு கூறுகிறர்:

குருதேவரைக் காணவரும் பக்தர்களின் எண்ணிக்கை சமாளிக்க முடியாத அளவுக்கு இருந்தது. பக்தர்கள் நாள் முழுவதும் அவரைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தனர். சுவாமிஜி குடிலைச் சுற்றி வேலி அமைத்தார். குடிலுக்கு வெளியே இருப்பவர்களைத் தான் காணுகிற அளவிலும், 'குடிலுக்கு வெளியே இருப்பவர்கள் தன்னைக் காணமுடியாத அளவிலும் உதவக்கூடிய ஒரு சாதனத்தை (chick) கொண்டு வருமாறு அப்போது சென்னையிலிருந்த என்னிடம் குருதேவர் தெரிவித்தார். ஆகவே, குடிலின் வெளிப் புறத்தோற்றம் அவ்வாறு அமைந்திருந்தது.

குருதேவர் சாதனையில் ஈடுபடமுடியாத அளவுக்கு தொந்தரவு செய்கிறவர்களைக் கண்டு அவர் ஓடிவிடுவார். அவர் காட்டுக்குள் சென்று விடுவார். கங்கைக்கரையில் எவரும் காணமுடியாத இடத்தில் அமர்ந்து தியானத்தில் ஈடுபடுவார். அவரது குடிலில் பக்தர்கள் வந்து தரிசிக்கும் நேரம் ஒரு மணி நேரமாகக் குறைக்கப்பட்டது. ''பார்வை நேரம் ஐந்து நிமிடங்கள் மட்டும். மாலை நான்கு மணியிலிருந்து ஐந்துமணி வரை''. என்ற அறிவிப்புப் பலகை குடிலுக்கு வெளியே மாட்டப்பட்டது.

சுவாமி பரமானந்தாஜி குருதேவரின் குடிலுக்கு முதன் முறையாகச் சென்றபோது அவர் கண்ட காட்சி இதுதான்; ''அறைக்குள் ஒரு மூலையில் உலர்ந்துபோன ரொட்டிகள் குவியலாகக் கிடந்தன. பல காகித மூட்டைகள் கிடந்தன. கள்ளிப் பலகையால் செய்யப்பட்ட பெட்டிகளில் பல சீசாக்கள் இருந்தன. சில டிரங்க் பெட்டிகள் பூட்டுக்களுடன் இருந்தன. குருதேவர் ஒரு தட்டில் பிஸ்கட்டுகளையும், வாதாங் கொட்டைகளையும்

கொடுத்தார்''. துறவிக்கும் உலர்ந்துபோன ரொட்டிகள் மற்றும் பிஸ்கட்டுகளுக்கிடையிலான உறவு என்ன என்பது சுவாமி பரமானந்தாவுக்குப் புரியவில்லை. அவர் பிரச்னை அடுத்த நாளே தீர்க்கப்பட்டுவிட்டது. குருதேவர் சுவாமி பரமானந்தாவை அழைத்துக்கொண்டு உணவருந்த அன்னச் சத்திரத்திற்குச் சென்றார். மற்ற சாதுக்கள் கையில் ஒரு துணியும் ஒரு சிறு பாத்திரமும் வைத்திருந்தனர். துணியில் ரொட்டியையும் பாத்திரத்தில் பருப்பையும் வாங்கிக் கொள்ளுவர். ஆனால் குருதேவர் 3 அல்லது 4 பாத்திரங்களை வைத்திருந்தார். இந்தப் பாத்திரங்களில் அவர் பால் மற்றும் தயிரைக் கொண்டு வருவார். குருதேவர் தனது உணவை குடிலில் வைத்துவிட்டு தயிர் மற்றும் பால் உள்ள பாத்திரங்களை எடுத்துக் கொண்டு லக்ஷ்மணஜூலா செல்லுவார். அங்கு பாலையும், தயிரையும் நோயுற்றிருக்கும் சாதுக்களுக்கு வினியோகம் செய்வார். உலர்ந்த ரொட்டிகள் குருதேவருக்கு; பாலும் தயிரும் நோயுற்றிருக்கும் மகாத்மாக் களுக்கு; பிஸ்கட்டும் வாதாங் கொட்டையும் பார்வையாளர்களுக்கு. மகத்தான வள்ளலாக விளங்கியவர் வறுமையைத் தழுவிக் கொண்டார். ஆனால் அவரது இதயம் செல்வச் செழிப்புடன் இருக்கிறது. தனது தேவைகளையும், வசதிகளையும் புறக்கணித்துவிட்டு பிறருக்குத் தானம் செய்ய அவர் விரும்பினார். பரமானந்தாவின் கண்டு பிடிப்பு இது. ''அவர் உள்ளத்தில் கருணை நிறைந்திருக்கிறது. நோயுற்ற சாதுக்களுக்கும் ஏழைகளுக்கும் உதவி செய்வதற்காக அவர் தனது குடிலில் நிறையப் பொருட்களை வைத்திருக்கிறார். சிவானந்தருடன் பழகாதவர்கள் அவர் வசதியான துறவி என்று கருதுகிறார்கள். ஆனால் உண்மையில் அவர் விரத வீரர். சிவானந்தர் உள்ளத்தளவில்

பற்றற்றிருப்பதை மாலையில் அவர் கொள்ளும் உணவிலிருந்து கண்டு கொள்ளலாம். காலையில் காய்ந்த ரொட்டி அவரது மாலை உணவு. கங்கை நீர் அந்த உணவுக்கு சாம்பார்''.

இந்தக் காலகட்டத்தில் குருதேவரின் நண்பர் ஒருவர் அவருக்குக் கடிதம் ஒன்று எழுதி, மலேயாவி லிருந்து, குருதேவருக்குச் சேர வேண்டிய காப்பீட்டுத்தொகை (Insurance money) கிடைப் பதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன என்று தெரிவித்திருந்தார். குருதேவருக்கு அந்தப் பணம் இப்போது தேவையில்லை. அதை வேண்டாம் என்று மறுக்கவும் அவருக்கு மனமில்லை. அந்தப் பணத்தை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அவர் நினைத்தார். அது தனது ஆன்மீகப் பாதையில் தடையாக இருக்காது என்பதில் குரு தேவர் உறுதியாக இருந்தார். அந்தப் பணம், ஆடம்பரமாக வாழ்வதற்கு குருதேவரைத் தூண்ட முடியாது. ஏனெனில் குருதேவர் புலன்களை வென்றுவிட்டார். நோயாளிகள் மற்றும் ஏழை களுக்கு உதவிட இந்தப் பணத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என குருதேவர் நினைத்தார். அந்தப் பணம் அவர்களுக்கு உரியது என நினைத் தார். அந்தப் பணத்தை வரவழைக்க தீர்மானித் தார். ஒரு அறக்கட்டளை (Trust) நிறுவி அதன் பெயரில் இந்தப் பணத்தை வங்கியில் போட்டு அதிலிருந்து வரும் வட்டிப் பணத்தின்மூலம் ஸ்வர்காஸ்ரம சாதுக்களுக்கு உதவி செய்ய அவர் விரும்பினார்.

பணம் கிடைத்ததும் அதை அஞ்சலக வங்கியில் டெபாசிட் செய்தார். அந்தத் தொகையிலிருந்து கிடைத்த வட்டிப் பணத்தின் மூலம் தயிர், வெண்ணெய், பால் பழங்களை வாங்குவார்.

நாம் ஏற்கனவே குறிப்பிட்டதுபோல, தேவைப் படுவோருக்கு அவற்றை வினியோகம் செய்வார். ஸ்வர்காஸ்ரம சாதுக்களில் சீதபேதியால் அவதிப் படுவோரின் பெயர்களைப் பட்டியல் போடுவார். அவர்களுக்கு தயிர் கொண்டுபோய்க் கொடுப்பார். காய்ச்சலில் கஷ்டப்படுவோருக்கு பழங்களையும், பாலையும் கொடுப்பார். கடும் வெயிலிலும் இங்கும் அங்கும் அலைந்து இவற்றை வினியோகிப்பார். பிறகு தன் குடிலுக்குத் திரும்பி உணவு உட்கொள்ளுவார். உலர்ந்த ரொட்டியும் கங்கை நீரைப் போலக் குளிர்ந்து போயிருக்கும் பருப்பும் அவரது சுவைமிகு உணவு. பசியால் வாடுகிறவர் களை வழியில் கண்டால் இந்த எளிய உணவையும் கூட அவர்களுக்குக் கொடுத்து விடுவார். தருமச் சாலை நிர்வாகிகளுக்கு இது தெரிந்ததும் குருதேவர் அன்னதானம் செய்ய வசதியாக அவருக்குக் கொடுக்கப்படும் உணவின் அளவை அதிகரித்தனர். மீதமிருக்கும் உணவை வீணாக்க விரும்பாத குருதேவர் ஓரிரு நாட்கள் தருமச்சாலைக்குச் செல்லாமல் உலர்ந்த ரொட்டிகளை உட்கொள்ளு வார்.

டிரங்க் பெட்டிகளில் புத்தகங்கள் நிறைந் திருந்தன. அவற்றில் கணிசமான புத்தகங்கள் குருதேவருடையவை. உணவுக்குக்கூட பணமில் லாமல் வாழ்ந்துகொண்டிருக்கும் குருதேவர் இவ்வளவு புத்தகங்களை எப்படிச் சேர்த்தார் என்பது ஆச்சரியமான விஷயம்தான். ஞானச் செல்வத்தைப் பெற அவர் கொண்டிருந்த விருப்பம் இதன் மூலம் தெளிவாகிறது. ஒரு சில புத்தகங்கள் உள்ளூர் நூலகத்துக்குச் சொந்தமானவை. குருதேவர் இந்த நூலகத்துக்கு அடிக்கடி செல்லு வார்.

வேறுசில டிரங்க் பெட்டிகளில் மருந்துகள் இருக்கும். பக்தர்கள் யாராவது அவருக்கு அன்பளிப்பாகப் பணம் கொடுத்தால் அவற்றை உடனடியாக மருந்தாகவோ அல்லது ஆன்மீக வளர்ச்சிக்கு உதவும் துண்டுப் பிரசுரமாகவோ மாற்றி விடுவார். மருந்து, நோயாளிகளை குணப் படுத்தும். துண்டுப் பிரசுரம் அறியாமையில் உழலும் மக்களின் மனதைப் பக்குவப்படுத்தும்.

குருதேவரிடம் பெரிய விளக்கு (lantern) இல்லை. சிறிய விளக்குதான் இருந்தது. அதாவது சிறிய மைசீசாவில் மண்ணெண்ணெய் ஊற்றித் திரிபோட்டு அதனையே விளக்காகப் பயன் படுத்தினர். இந்த விளக்கின் உதவியுடன்தான் குருதேவர் கட்டுரைகளை எழுதுவார். அவரும் ஆரம்பகாலத்தில் அவரது சீடர்களாக வாய்த்தவர் களும் இந்த விளக்கின்முன் அமர்ந்து குருதேவரின் உற்சாகந்தரும் கட்டுரைகளின் பிரதிகளை எழுதித் தயாரிப்பர்.

1930-ஆம் ஆண்டு குருதேவரின் குடிலில் சென்னையைச் சார்ந்த திரு. சி. ஆழவந்தாரய்யா தங்கினர். அவர் பத்ரிநாத்திலிருந்து திரும்பி வந்திருந்தார். அவர் குடிலில் உறங்கினர். ஆனல் அவர் உறங்கியதாக உணரவில்லை, ஆனந்த வெள்ளத்தில் மிதந்ததாகவே உணர்ந்தார். அவர் குருதேவரிடம் விடைபெற்றுச் செல்லும்போது குருதேவருக்கு ஏதேனும் ஒரு வகையில் தொண்டு செய்ய அனுமதிக்குமாறு வேண்டினர். குருதேவரும் ''தெய்வீக வாழ்க்கைக்கு உதவும் 20 அம்ச சாஸனம்'' (20 point charter of Divine life) என்ற தலைப்பில் எழுதப்பட்ட விஷயத்தை அவர் கையில் கொடுத்து இதனை அச்சிட்டு பரவலாக வினியோகம் செய்யுமாறு அருளாணை

பிறப்பித்தார். ''இருபது சிறப்பு ஆன்மீகக் குறிப்புக்கள்'' என்ற தலைப்பில் இந்தப் பிரசுரம் அன்று முதல் பல லட்சக் கணக்கில் அச்சிடப்பட்டு விட்டது. இந்தப் பிரசுரம் குருதேவருடைய உபதேசத்தின் சாரமாக உள்ளது.

## 20. புண்ணியத் தல யாத்திரை

1926-ல் குருதேவர் சுவாமி அத்வைதானந்தாஜி, சுவாமி பாலானந்தாஜி, சுவாமி வித்யாசாகர் ஆகியோருடன் பத்திரிநாத்துக்குச் சென்றார். யாத்திரையில் அவர் பரவச நிலையில் இருந்தார். வழியில் மருத்துவ உதவி செய்வதிலும், கீர்த்தனை பாடுவதிலும் ஈடுபட்டார். தப்தகுண்டத்தில் உள்ள வெதுவெதுப்பான நீரிலும் பத்ரிநாத்தில் உள்ள அலக்நந்தாவின் பனிக்கட்டியை ஒத்த குளிர் நீரிலும் குளித்தார். யாத்திரையில் ஒரு கணப் பொழுதையும் அவர் வீணாக்குவதில்லை. சுவாமி அத்வைதானந்தாவுடன் வேதாந்த விஷயங்கள் பற்றி உரையாடுவார்.

குருதேவரும் இந்தக் குழுவினரும் மே மாத மத்தியில் புறப்பட்டு ஜூன் மாத இறுதியில் வந்து சேர்ந்தனர். அவர்கள் திரும்பி வரும்போது தேவப்ரயாகையிலிருந்து டெஹ்ரி வழியாக முசௌரிக்குச் சென்று பிறகு ரிஷிகேசம் வந்து சேர்ந்தனர்.

அடுத்த யாத்திரை கங்கா சாகர் நோக்கி. இது புனித கங்கையும் கடலும் கல்கத்தாவுக்கு அருகில் சந்திக்கும் இடம். இந்த முறையும் மகாராணி சூரத் குமாரிதேவி குருதேவருடன் சென்றார். அவர்கள் கல்கத்தாவிலிருந்து ஒரு விசைப் படகில் புறப்பட்டு மறுநாள் அதிகாலையில் கங்கா சாகரை

அடைந்தனர். அவர்கள் கடலில் நீராடினர். பிறகு அங்குள்ள கபில முனிவர் திருக்கோயிலில் வழிபாடு செய்தனர். இங்கும் குருதேவர் தொண்டு செய்ய வாய்ப்புக் கிடைத்தது. யாத்திரீகர்கள் படகில் ஏறுவதற்கு முன்பாக ஏணியில் ஏறிச்செல்ல உதவினார். வயதான மகாராணியை முதுகில் சுமந்து கொண்டு வந்து படகில் உட்கார வைத்தார். இது நிகழ்ந்தது 1930-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில்.

குருதேவர் 1931-ல் ஸ்ரீ சுவாமி அத்வைதானந்தாஜி, ஸ்ரீ சுவாமி ஸ்வயம்ஜோதிஜி, பிரம்மச்சாரி யோகானந்தாஜி, சிங்காய் எஸ்டேட் மகாராணி ஸ்ரீ சூரத் குமாரிதேவி ஆகியோருடன் கைலாச யாத்திரை புறப்பட்டார். குருதேவர் அங்கு மானசரோவர் நதியில் குளித்து சிவபெருமான் இருப்பிடமாகிய அந்த மலையை வலம் வந்து வணங்கினார். வழியில் அவர் அப்போதைய மைசூர் மன்னரையும் சந்தித்தார். குருதேவர் இந்த யாத்திரையிலிருந்து திரும்பி வந்ததும் ''கைலாயம் மற்றும் மானசரோவருக்கு ஒரு யாத்திரை'' என்ற தலைப்பில் ஒரு பயண நூல் எழுதினார். இது மிகவும் பயனுள்ள, தகவல்கள் நிறைந்த, உற்சாக மூட்டுகிற நூல்.

குருதேவர் இந்த யாத்திரை சென்று திரும்ப—460 மைல் தூரம் பாத யாத்திரை செய்திருக்கிறார். இந்த யாத்திரை 1931 ஜுன் 12-ந் தேதி தொடங்கி 1931 ஆகஸ்டு 22-ந் தேதி நிறைவுற்றது.

பிறகு ஸ்ரீ சந்திரநாராயண ஹர்குலியுடன் குருதேவர் தென்பாரதம் நோக்கி திருத்தல யாத்திரை செய்யப் புறப்பட்டார். அவர்கள்

மதுராவுக்கும் பிருந்தாவனத்துக்கும் சென்றனர். கோவர்த்தனகிரியை வலம் வந்தனர். இந்தத் திருத்தலங்கள் அனைத்தும் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் வாழ்வில் சம்பந்தப்பட்டவை. அவர்கள் கயா சென்று விஷ்ணு பாதரின் புனிதத் திருவடிகளை வணங்கினர். புத்தகயையில் புத்த பகவானை வணங்கினர். கிழக்குக் கடற்கரைப் பகுதிக்குச் சென்று பூரியில் ஜகந்நாதர் ஆலயம் சென்று தரிசித்தனர். அவர்கள் கடலில் நீராடினர். அங்கிருந்து அவர்கள் தென்கோடியிலுள்ள ராமேஸ்வரத்துக்குப் புறப்பட்டனர். அங்கு அவர்கள் கடலில் நீராடிவிட்டு இராமலிங்கேஸ்வரரை— புனித சிவலிங்கத்தை வழிபட்டனர். இந்த சிவலிங்கத்தை ஒரு காலத்தில் பகவான் ஸ்ரீ ராமரே வழிபட்டிருக்கிறார். பிறகு அவர்கள் திருவண்ணாமலை சென்றனர். இங்கு சிவபெருமான் ஜோதி ஸ்வரூபியாக இருக்கிறார் (Tejo-lingam). அங்குள்ள மலையே புனிதமானதாகவும் தெய்வீகத் தன்மை கொண்டதாகவும் கருதப்படுகிறது. குருதேவர் அருணாசலேஸ்வரரை வணங்கிவிட்டு கிரிவலம் வந்தார். பிறகு ரமணாஸ்ரமம் சென்றார். அங்கு அவர் பகவான் ரமண மகரிஷியை சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. குருதேவர் ரமணர் முன்னிலையில் சில பாடல்களையும், கீர்த்தனைகளையும் பாடினார். அன்றைய தினம் மகரிஷியின் ஜெயந்தியாகவும் இருந்தது மிகப் பொருத்தமானதாகும். குருதேவரின் பாடல்களையும் கீர்த்தனைகளையும் செவிமடுத்தவர்கள் மெய்மறந்தனர். ஆத்மாவைத் தட்டி எழுப்பும் இந்த கீர்த்தனைகளைக் கேட்டு ரமண மகரிஷியே பரவசமானார்.

பிறகு அவர்கள் பாண்டிச்சேரி அரவிந்தாஸ்ரமத்துக்குச் சென்றுவிட்டு ரிஷிகேசம் திரும்பினர்.

திருத்தல யாத்திரை செய்வோருக்கு — குறிப்பாக இமயமலைத் திருக்கோயிலுக்குச் செல்லுகிறவர்களுக்கு குருதேவர் சில அறிவுரைகள் கூறியிருக்கிறார். குருதேவர் ஒரு டாக்டர் என்ற முறையில் மட்டுமின்றி தான் திருக்கைலாய யாத்திரை செய்த அனுபவத்தை யொட்டியும் இந்த அறிவுரையினை வழங்குகிறார். இந்த யாத்திரையின் போது ஊசி போட்டு ஒரு வங்காள சாதுவை குருதேவர் காப்பாற்றியிருக்கிறார். குருதேவரின் அறிவுரை வருமாறு!

"நீங்கள் சில மருந்துகளை எடுத்துச் செல்ல வேண்டும். (Epsem Salt, quinine Tablets, cafiasprin, eucalyptus Oil, chlorodyne, boric acid, Vaseline, bandage cloth, tincture iodine, Pottasium Permanganate, acide Tartaric) இவை அனைத்தும் உங்களுக்குப் பயனுள்ளவையாக இருக்கும். உங்கள் உடல் நலம் குன்றாவிடினும் யாத்திரையின்போது உடல் நலம் குன்றி அல்லற் படும் மற்றவர்களுக்கு உதவ இந்த மருந்துகள் பயன்படும். இது உங்களுக்கு மிகச் சிறந்த யோகம் ஆகும். நீங்கள் யாத்திரை செல்லும்போதெல்லாம், ஊசி, நூல், தீப்பெட்டி, துணி, கத்தி, பிஸ்கட்டுகள் ஆகியவை மிகவும் பயனுள்ளவையாக இருக்கும். நீங்கள் காபி அல்லது டீ அருந்தும் பழக்கம் உடையவராயின் அவற்றுக்குத் தேவையான பொருட்களுடன், ஸ்டவ், மண்ணெண்ணெய் ஆகியவற்றை எடுத்துக் கொள்ள வேண்டும். நீண்டதூரம் நடக்கும்போது குடிப்பதற்காக ஒரு பானையில் தண்ணீர் எடுத்துக் கொள்ள வேண்டும். மற்றொரு முக்கியமான விஷயம், நீங்கள் போதுமான பணத்தை செலவுக்காக எடுத்துக் கொள்ள வேண்டும். யாத்திரை துவங்குவதற்கு முன்னதாக மறக்காமல் ஜபமாலை, பகவத்கீதை ஆகியவற்றை

எடுத்துக்கொள்ள வேண்டும். ஜபம், பாராயணம், தியானம் ஆகியவற்றை ஒரு நாள் கூட செய்யாமல் இருக்கக்கூடாது, பாதயாத்திரை செய்கிறபோது ஜபம் செய்தால், மனதுக்கு மகிழ்ச்சி தரும்''.

திருத்தல யாத்திரையின் சிறப்பு பற்றி குருதேவர் அதே நூலில் பின்வருமாறு எழுதுகிறார்:

''தினசரி கடமைகளை நிறைவேற்றுவது, யாத்திரை செய்வது ஆகியவை நற்பண்புகளைப் பெற உதவுகின்றன. இது பாபங்களைப் போக்கவும் அதன் மூலம் மனத்தூய்மை பெறவும் உதவுகிறது. மனத்தூய்மையின் மூலம் இல்லற வாழ்வின் நன்மை தீமைகளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள முடிகிறது. இதிலிருந்து முக்தி நாடிச் செல்லும் வைராக்கியம் ஏற்படுகிறது. பிறகு யோகத்தின் உதவியால் மனம் ஆத்மாவில் லயித்திருக்கிறது.

## 21. தன்னலமற்ற தொண்டுபற்றிய நற்செய்தி

குருதேவர் ரிஷிகேசம் நோக்கிப் பயணம் செய்தபோதே தனது மலேயா வாழ்க்கையை மறந்துவிட்டார். மலேயாவில் கௌரவப் பிரஜையாக இருந்தது, அவர் அனுபவித்த சௌகரியங்கள், கிடைத்த பெருமைகள், அதிகாரி எனும் அந்தஸ்து, மகிழ்ச்சியான வாழ்க்கை அனைத்தையும் மறந்து விட்டார். மலேயாவில் இருந்தபோது அன்பு, தருமம் செய்யும் மனப்பான்மை, சமநோக்கு ஆகிய பண்புகளை வளர்த்துக்கொண்டார். தனது லட்சிய வாழ்வில் உதவிட இந்தப் பண்புகளை இறைவன் தனக்குத் தந்திருப்பதாக அவர் கருதினார்.

ஆகவே அவர் துறவு மேற்கொண்டவுடன் நோயாளிகளுக்குத் தொண்டு செய்ய வழி வகை களைக் கண்டறிந்தார். இந்த நோக்கில் லக்ஷ்மண ஜுலாவில் சத்ய சேவாஸ்ரமத்தைத் துவக்கினார். அங்குள்ள மருத்துவ நிலையத்தைக் கண்டால் குருதேவரின் அறிவாற்றலை நம்மால் புரிந்துகொள்ள முடியும். அது, பத்ரிநாத்தின் அடிவாரத்தில், பத்ரிநாத் செல்லும் ஒரே வழியாக அக்காலத்தில் இருந்த இடத்தில் அமைந்திருந்தது. இமயமலைத் திருக்கோயில்களுக்குச் செல்லுகிற அனைவருடைய கண்களிலும் இந்த மருத்துவநிலையம் தென்படும். யாத்திரை செய்வோர் மருத்துவமனையைத் தேடிப் போக வேண்டியதில்லை. மாறாக மருத்துவமனை அவர்களைத் தேடி வந்துவிட்டது. குருதேவர் இந்த மருந்துவமனை மூலம் அருகிலுள்ள கிராமவாசி களுக்கும், சாதுக்களுக்கும், யாத்திரீகர்களுக்கும் மருந்துகளை வினியோகம் செய்தார்.

தீவிரமான தவ வாழ்க்கை மேற்கொண்டிருப் பவர்களின் உடல் நலம் குன்றிப் போவது இயல்பு. அவர்கள் வேளைக்கு உண்பதில்லை; சத்தான உணவை உட்கொள்ளுவதில்லை; உடலுக்கும் உள்ளத்துக்கும் தெம்பூட்டும் உடற்பயிற்சிகளை அவர்கள் செய்வதில்லை. பெரிய நகரங்களில் அனாதைகளாக சாலையோரங்களில் கிடப்பவர்களைப் போல உடல் நலம் பேணாமல் அவர்கள் வாழ்ந்து வருவர். குருதேவர் உள்ளூர் சாதுக்களுக்கு இருவகைகளில் உதவினார்: முதலில் அவர்கள் உடல்நலம் பெற உதவினார். இரண்டாவதாக இறைவனை அனுபவித்து உணர இறைவன் உறையும் இந்த உடலைப் பேணுவது அவசியம் என்பதை தனது சொந்த வாழ்க்கையின் மூலம் உணர்த்தினார். யோகாசனம், பிராணாயாமம், நடைப் பயிற்சி, சிறு சிறு விளையாட்டுக்கள் ஆகியவற்றில் ஈடுபட்டு

சீரான வாழ்க்கை வாழ்வதில் அவர்களுக்கு ஆர்வம் ஏற்படச் செய்தார். ஆரோக்கியமான உடலில்தான் உறுதியான உள்ளம் இருக்கும் என்பதை குருதேவர் அவர்களுக்கு உணர்த்தினர். இதன் மூலமே ஆன்மீக சாதனையில் ஈடுபடமுடியும் எனவும் உணர்த்தினர். குருதேவர் உபதேசத்துடன் நின்று விடுவதில்லை. அதனைச் செயற்படுத்தவும் வழிகாட்டுவார். இதில் பிறருக்கு ஏற்படும் இன்னல்களைக் களையவும் முற்படுவார். சாதுக் களுக்கு மருந்துகளையும் கொடுப்பார். அதே நேரத்தில் உடல்நலம் பேணும் முறையினையும் எடுத்துரைப்பார். இந்த உடல் என்று ஒன்று இருப்பதையே மறுக்கும் வேதாந்திகள், உடல்நலம் பேணுவது என்பது தம் கொள்கைக்கு விரோதம் எனக் கருதினர். பக்தர்கள் உடல் நலத்தில் நேரத்தினைச் செலவிடுவது வீணானது எனக் கருதினர். ஆனால் அவர்கள் அனைவரும் குருதேவர் உபதேசித்த ஒருங்கிணைந்த யோகத்தில் (Integral Yoga) ஒன்று சேர்ந்தனர்.

குருதேவர் தனது தவ வாழ்க்கையின் பிற்பகுதி யில் உடல், மனம் மற்றும் இதயத்தை தொண்டில் ஈடுபடுத்தியதுடன் நில்லாது தனது ஆத்ம சக்தியை யும் நோயுற்றவர்களுக்குத் தொண்டு செய்வதில் ஈடுபடுத்தினர். தனது ஆன்மீக சக்தியின் மூலம் நோய்களை தீவிரமாகக் குணப்படுத்தினர். நோயாளிகளுக்கு மருந்து கொடுத்தபின் அவர்கள் கால்களைத் தடவிக் கொடுக்க அனுமதிக்குமாறு கேட்டுக் கொள்ளுவார்; அவர் சாதி, இனம், நிறம், சமூக அந்தஸ்து ஆகியவற்றில் வேறுபாடு காண்பதில்லை. ஆண், பெண் என்ற வேறுபாடும் அவரைப் பொறுத்த அளவில் இல்லை. ஒரு புதுமையான சம்பவம் இந்தக் கால கட்டத்தில் நிகழ்ந்தது. தென்பாரதத்திலிருந்து

யாத்திரையாக வந்து காளிகம்லிவாலா தருமச் சாலையில் தங்கியிருந்த ஒரு பெண் உடல் நலிவுற்றிருந்தார். தருமச்சாலை நிர்வாகிகள் சிகிச்சை பெற அந்தப் பெண்ணை குருதேவரிடம் அனுப்பி வைத்தனர். அந்தப் பெண்ணும் குருதேவரை அணுகி உடல்நிலைபற்றித் தெரிவித்து மருந்தும் பெற்றுக்கொண்டார். குருதேவர் அந்தப் பெண்ணின் கால்களைத் தடவிக் கொடுத்து ஆன்மசக்தியால் நோயை குணப்படுத்த விரும்பினார். ஆனால் அந்த இளம்பெண் இதற்குச் சம்மதிக்கவில்லை. வணக்கத்துக்குரிய துறவி தனது பாதங்களைத் தொடுவதை அந்தப் பெண் விரும்ப வில்லை. குருதேவர் அந்தப் பெண்ணின் விருப்பத்துக்கு மாறாக எதுவும் செய்ய விரும்ப வில்லை. அவர் தனது குடிலுக்கு வந்ததும் இது பற்றிச் சிந்தித்தார். மாலையில் தனது மூத்த சீடர்களில் ஒருவரான ஸ்ரீ சுவாமி ஆத்மா னந்தாவை அழைத்து இதுபற்றிச் சொன்னார். ''வழக்கமான தொண்டினைச் செய்ய அனுமதிக்கு மாறு நான் ஏன் அந்தப் பெண்ணை வற்புறுத்த வில்லை? அந்தப் பெண்ணுக்கு வேறு எண்ணம் இருந்திருக்கலாம். ஆனால் ஒரு வேதாந்தி என்ற முறையில் நான் எனது கருத்தை வலியுறுத்தி யிருக்க வேண்டும். ஒரே பரமாத்மா தான் அனைத்து உடல்களிலும் குடிகொண்டிருக்கிறது என்பதை நான் அந்தப் பெண்ணிடம் விளக்கிச் சொல்லி யிருக்க வேண்டும். நான் எனது தொண்டைச் செய்யாமல் புறக்கணித்திருக்கக் கூடாது. எனது கடமையைச் செய்யத் தவறியிருக்கக் கூடாது''.

பொதுவாக, அதிகாலையில் குருதேவர் தியானத்தில் ஈடுபடுவார். ஆனால் இந்தச் சம்பவம் நிகழ்ந்த இரவு முழுவதும் அவருக்கு இதன் நினைவாகவே இருந்தது. மறுநாள் காலையில்

தியானம் செய்ய அமராமல் ஒரு சீடருடன் தெய்வத்தின் திருவுருவமாகிய அந்தப் பெண்ணைத் தேடிச் சென்றார். இறுதியில் அந்த நோயாளிப் பெண்ணைக் கண்டு பிடித்தனர். குருதேவர் அந்தப் பெண்ணிடம் தனது வருகையின் அவசியத்தை விளக்கினார். அந்தப் பெண்ணின் சம்மதத்துடன் தொண்டினைப் பூர்த்தி செய்துவிட்டுத் திரும்பினர். மருந்தினால் குணப்படுத்த முடியாத அந்தப் பெண்ணின் நோய் குருதேவரின் ஸ்பரிஸத்தால் மறைந்துவிட்டது. அந்தப் பெண் நோயிலிருந்து உடனடி நிவாரணம் பெற்றார்.

குருதேவர் எவ்விதமான தொண்டினையும் செய்ய ஆயத்தமாக இருந்தார். அவர் சிங்கை மகாராணியுடன் கங்காசாகருக்கு யாத்திரை சென்றபோது யாத்திரீகர்கள் சில கெஜ தூரம் தண்ணீரில் நடந்து செல்ல வேண்டியிருந்தது. எல்லோரும் அப்படிச் சென்றுவிட்டனர். ஆனால் ராணி அப்படிச் செல்ல முடியவில்லை. குருதேவர் ராணியைத் தன் தோள்களில் சுமந்து கொண்டு தண்ணீரில் நடந்து படகுவரை சென்றார்.

மற்றொரு சமயம், லக்னோவில் சிங்கை மகாராணியின் அரண்மனையில் ஒரு பெண் துறவி பல்வேறு பூஜைகள் செய்வதற்காகத் தான் கேட்ட பணம் கிடைக்காத காரணத்தால் கோபமடைந் தார். அவரது கோபம் கட்டுக்கடங்காமற்போன தால் அவர் மயங்கி விழுந்துவிட்டார். அப்போது அங்கிருந்த குருதேவர், அந்தப் பெண் துறவியைத் தனது தோள்களில் சுமந்து கொண்டு உள்ளூர் மருத்துவ மனைக்குச் சென்று அவருக்குத் தேவை யான சிகிச்சை அளிக்க ஏற்பாடுகள் செய்தார்.

ஸ்ரீ சுவாமி நாராயணானந்தாஜி மற்றொரு சம்ப வத்தைக் குறிப்பிட்டுள்ளார்; ''அவர் ஒரு

ஐரோப்பியத் துறவியாகிய சாது லீக் என்பவரை ஒரு கட்டிலில் படுக்க வைத்துத் தலையில் சுமந்து சென்று ரிஷிகேசத்திலுள்ள பஞ்சாப் சிந்து க்ஷேத்ர மருத்துவ மனையில் சேர்த்தார்''.

குருதேவர் ஸ்வர்காஸ்ரமத்தில் இருந்தபோது அவரது சீடர்களில் மூத்தவரான ஸ்ரீ சுவாமி ஞானனந்தாஜியின் உடல் நலம் குன்றியது. குருதேவர் அவரைத் தன் முதுகில் சுமந்துகொண்டு ரிஷிகேசம் சென்றார். அங்கிருந்து அவரை லக்னோ கொண்டு சென்றார். அங்கு அவர் சிகிச்சைக்காக சேர்க்கப் பட்டார்.

கடவுளின் குழந்தைகளுக்குத் தொண்டு செய்கிறபோது தன்னால் சமாளிக்க முடியாத அளவுக்குத் தனக்கு ஆபத்து வரும் என்று குருதேவர் நினைக்கவில்லை. ஒருவேளை உயிருக்கு ஆபத்து வந்தாலும் தொண்டு செய்யாமல் அவரைத் தடுக்க எந்த சக்தியாலும் முடியாது. காலரா மற்றும் அம்மை நோய்கூட தெய்வத்தின் திருவிளையாடல் என்றும், நோயாளியைத் தொடர்ந்து கவனித்துக் கொள்ள இறைவன் தந்த வாய்ப்பு என்றும் அவர் கருதினார். நோய் தன்னைத் தொற்றிக்கொள்ளும் என்றோ அதற்குத் தான் இரையாக நேரிடும் என்றோ அவர் ஒருபோதும் எண்ணியதில்லை. கைலாச ஆஸ்ரமத்தில் ஒரு துறவிக்கு அம்மை நோய் கண்டிருந்தபோது குருதேவர் அவரருகில் நாள் முழுவதும் இருந்து அவருக்கு வேண்டிய தொண்டுகளைச் செய்தார், அம்மை நோய் அவரைத் தொற்றிக்கொள்ளவில்லை என்பது மட்டுமல்ல அவர் புதிய பலமும், சக்தியும் பெற்றார். அவர் உள்ளம் உருகி இந்தத் தொண்டினைச் செய்தார். சில நேரங்களில் உணவையும், உறக்கத்தையும் மறந்தும் மறுத்தும் இந்தத் தொண்டினைச் செய்தார்.

அவர் ஸ்வர்காஸ்ரமத்தில் இருந்த ஆரம்ப காலத்தில் உயிர்மீது ஆசை உள்ளவர்கள் செல்லத் துணியாத இடங்களுக்கெல்லாம் குருதேவர் சென்று தொண்டு புரிந்தார். ஒரு சமயம் அனந்தானந்தாஜி கடுமையான காலரா நோயினுல் கஷ்டப் பட்டார். அவர் குடிலுக்கு அருகில் செல்ல எவரும் துணியவில்லை. குருதேவர் சுவாமிஜியின் படுக்கைக்கு அருகிலேயே இருந்து தொண்டு புரிந்தார். சுவாமிஜி மலஜலம் கழித்தபொழுது கூட குருதேவர் தன் கைகளாலே சுவாமிஜியின் உடலை தண்ணீர் கொண்டு சுத்தப்படுத்தினுர். ஸ்ரீ வீரராகவாச்சாரியின் சீடர் இதுபோல நோய்வாய்ப் பட்டிருந்தபொழுது குருதேவர் தாணுகச் சென்று தொண்டு புரிந்தார். அவர் இவ்வாறு தொண்டு புரிவதைக் கண்டு ஸ்ரீ சுவாமி கல்யாணுனந்தாஜி ஆச்சரியப்பட்டார். ஸ்வர்காஸ்ரமத்தில் குருதேவரின் குடிலுக்கு அருகில் ஒரு கொட்டகை அமைத்துக் கொடுத்தார். ஸ்ரீ கல்யாணுனந்தாஜி எப்பொழுதாவது உடல் நலம் குன்றி அவதிப் பட்டால் உடனே குருதேவருக்கு மட்டும் சொல்லி அனுப்புவார். "அற்புதமாகக் குணமளிக்கும் தங்கள் கையால் தருகிற எந்த மருந்தும் எனது நோயைக் குணப்படுத்தும்" என்று அவர் குருதேவரிடம் கூறுவார்.

நோயாளிகளுக்குத் தொண்டு செய்கிறபொழுது குருதேவர் முகம் சுளிப்பதில்லை. குருதேவரின் சீடராகிய ஸ்ரீ சுவாமி 'அ' நோயுற்றிருந்தபொழுது எவ்விதத் தயக்கமுமின்றி மலக்குடலுக்குள் தன் விரல்களைச் செலுத்தி கழிவுப் பொருட்களை வெளியே கொண்டு வந்தார்.

தனக்குச்சரியென்று பட்டதை அவர் செய்து முடிப்பார். இதுபற்றி மக்கள் என்ன நினைப்

பார்கள் என்று அவர் ஒருபோதும் கவலைப் பட்டதில்லை. 1930-ம் ஆண்டு வயதான சிங்கை மகாராணி அடிக்கடி ரிஷிகேஷம் வருவார். குருதேவரும் மகாராணியும் வெயில் நேரத்தில் வெளியில் நடந்துசெல்ல நேர்ந்தால் மகாராணியின் மீது குடை பிடித்துக்கொள்வார். குருதேவரை சரியாகப் புரிந்துகொள்ளாத மற்றதுறவிகள் அவரது செய்கையைக் கண்டு நகைத்ததுமுண்டு. குருதேவர் இதுபற்றிக் கவலைப்படவில்லை. மகாராணிக்குச் செய்கிற தொண்டை ஒரு அன்னைக்கு செய்கிற தொண்டாக, கண்கண்ட தெய்வத் துக்குச் செய்கிற தொண்டாகக் கருதிச் செய்தார். அவரது செயல் சரியானது என்பதை காலம் உணர்த்தியது.

குருதேவர் சுற்றுப்பயணம் செய்கிறபொழுது லக்னோ செல்ல நேர்ந்தால் மகாராணியின் அரண் மனையில் தங்குவார். மகாராணிக்கு 'ஹூக்கா' (புகைபிடிக்க பயன்படுத்தும் குழாய்) பிடிக்கும் வழக்கம் உண்டு. அவருக்கு இதனைத் தருவதற்கு அவரது வேலைக்காரர்கள் மறந்து விடுவார்கள். ஆனால் குருதேவர் அதிகாலையில் ராணி அறியாத அளவில் அவரது கைகளில் ஹூக்காவை வைத்து விடுவார். ராணிக்கு சோடா குடிக்கும் வழக்கமு முண்டு. அவரது வேலைக்காரர்கள் அவருக்குத் தேவைப்படுகிற நேரத்தில் சோடா கொடுக்காமல் அலட்சியமாக இருந்து விடலாம். ஆனால் அங்கு சிறப்பு விருந்தினராகவும், ராணியை தனது சிஷ்யையாக ஏற்றுக்கொண்டவருமான குருதேவர் தனது சிஷ்யையின் தேவை அறிந்து தக்கசமயத்தில் சோடாவைக் கொடுப்பார்.

துறவிகள் பெண்களுடன் நெருங்கிப் பழகும் போது எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என

குருதேவர் வலியுறுத்துவார். துறவி, தன் அறைக்குப் பக்கத்தில் உள்ள அறையில் ஒரு பெண் தனிமையில் உறங்கிக்கொண்டிருந்தால் அந்த (தனது) அறையில் உறங்கக் கூடாது என்று கூறு வார். இது ஒழுக்க நெறிக் கோட்பாடு. இதனைவிடச் சிறந்த ஒழுக்க நெறிக் கோட்பாடு உள்ளது. அதுதான் தொண்டு. ஒரு சமயம் குருதேவர் லக்னோ சென்றிருந்தபோது மகாராணி உடல் நலம் குன்றி அவதிப்பட்டுக் கொண்டிருந் தார். அந்த நேரத்தில் குருதேவர் அவர் அருகில் இருந்து தொண்டு செய்தார். ராணியின் உற்ருர் உறவினரும்கூட அவர் செய்த அளவுக்குத் தொண்டு செய்திருக்க மாட்டார்கள். ராணி தங்கியிருந்த அறையின் ஒரு மூலையில் குருதேவர் உறங்கினுர். ராணியின் தேவையறிந்து தாமத மின்றி உதவிட அங்கேயே தங்கினுர்.

குருதேவர் தொண்டு செய்வதில் எப்போதும் தீவிரமாக இருப்பார். அண்மையில் அவர் வேடிக் கையாகப் பின்வருமாறு கூறினுர். "ஒரு நோயாளி உங்களை அணுகி வரும்போது தயங்காதீர்கள். நீங்கள் தருகிற மருந்து மிகச்சிறந்த மருந்து என்றும் நோயாளி வெகு விரைவில் குணம் அடைந்து விடுவார் என்றும் சொல்லுங்கள். நீங்கள் நோயாளி இருக்கும் இடத்துக்குச் சென்று, 'என் னிடம் வாருங்கள், ஒரே நாளில் உங்கள் நோயை குணப்படுத்தி விடுகிறேன்' என்று சொல்ல வேண்டும். தொண்டு செய்வதில் தீவிர மாக இருங்கள். இறைவன் உங்களுக்கு வெற்றியைத் தருவான். குருதேவர் உலாவச் செல்லுகிறபோதுகூட ஒரு மருந்துப் பெட்டியை எடுத்துச் செல்லுவார். வழியில் நோயாளிகள் யாரேனும் இருந்தால் அவர்களுக்கு மருந்து கொடுப்பார். உத்தரகாசியைச் சார்ந்த பூஜ்ய

சுவாமி தபோவனம்ஜி மகராஜ் குருதேவர் எங்கு சென்றாலும் மூன்று பைகளை எடுத்துச் செல்வதைக் குறிப்பிடுவார். ஒரு பையில் துண்டுப் பிரசுரங்களும், நோட்டுப் புத்தகங்களும் இருக்கும். மற்றொரு பையில் பழங்கள் இருக்கும். மூன்றாவது பையில் பொதுவாக தேவைப்படும் மருந்துகள் இருக்கும். அவர் செல்லுமிடங்களில் வழியில் நூற்றுக்கணக்கான இடங்களில் நின்று துறவிகள் மற்றும் கிராமவாசிகளை சந்தித்துப் பேசுவார். அவர்களை நலம் விசாரிப்பார். அவர்களுக்கு மருந்துகள் கொடுத்து துண்டுப் பிரசுரங்களையும், பழங்களையும் கொடுப்பார்.

குருதேவர் ஸ்வர்காஸ்ரமத்திலிருந்தபொழுது துறவிகளுக்கும், நோயாளிகளுக்கும் தொண்டு புரிந்ததை நேரில் கண்ட இருவர் கூறியதை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும்.

1955 மார்ச் 21-ந் தேதி ராமகிருஷ்ண மிஷனைச் சார்ந்த ஸ்ரீ சுவாமி அஜயானந்தாஜி சிவானந்தாஸ்ரமத்துக்கு வந்திருந்தார். அப்போது அவர் குருதேவரிடம் உரையாடிக் கொண்டிருந்த போது ஸ்வர்காஸ்ரமத்தில் தனக்கும் குருதேவருக்கு மிடையில் நிலவிய நெருக்கமான உறவினை நினைவு படுத்தினார்; சுவாமிஜி! அந்தக் காலத்தில் நீங்கள் நல்ல தேக பலத்துடன் தீவிரமாகவும் சுறுசுறுப்பாகவும் ஆர்வத்துடனும் தொண்டு புரிந்து வந்தீர்கள். துறவிகளுக்கும் நோயாளிகளுக்கும் தாங்கள் எப்படித் தொண்டு செய்தீர்கள் என்பது எனக்குத் தெரியும். இரண்டு சம்பவங்கள் இன்னும் நன்றாக நினைவில் நிற்கின்றன. மருத்துவ சிகிச்சைக்காக இருவரை லக்னோவுக்கு உங்களது சொந்தப் பணத்தைக் கொடுத்து அனுப்பி வைத்தீர்கள். மற்றொரு சமயம் தாங்கள் தருமச்சாலையில் இருந்த

போதும் துறவிகளின் குடில்களைத் தங்களின் சொந்தச் செலவில் செப்பனிட்டுக் கொடுத்தீர்கள். தங்களுடைய இந்தத் தொண்டுணர்வு காரண மாகத்தான் இன்றைக்கு இந்த மாபெரும் ஸ்தாபனம் உருவாகியிருக்கிறது. சுவாமிஜி, அப்பொழுதெல்லாம் தங்களின் பேச்சு முழுமை யாக நகைச்சுவை கலந்ததாக இருக்கும். நான் மனச் சோர்வுற்று இருந்தபோதெல்லாம் தாங்கள் தான் என்னை உற்சாகப்படுத்தினீர்கள். ஸ்வர்காஸ் ரமத்தில் ஒன்றரை ஆண்டுகள் தங்களுடன் நெருங்கிப் பழகியதை ஒருபோதும் என்னால் மறக்க முடியாது''.

மற்றொரு சம்பவத்தை 1948 அக்டோபர் 14-ஆம் தேதி ஸ்ரீ சுவாமி சிவஸ்வரூப்ஜி தெரிவித் தார்! ''சுவாமிஜி, அந்தக் காலத்தில் ஸ்வர்காஸ்ரமத் தாழ்வாரத்தில் ஒரு விரிப்புக்கூட இல்லாமல் தரையில் உறங்கியது எனக்கு நினைவில் இருக்கிறது. தாங்கள் தங்கியிருந்த குடில் மிகவும் இடிபாடடைந்து கிடந்தது. பல ஆண்டுகளுக்குப் பின்னர்தான் அது சீர் செய்யப்பட்டது. இந்த அசௌகரியங்களையெல்லாம் பொருட்படுத்தாது இருந்துகொண்டு தொண்டு செய்ய யாரால் முடியும்?''

இந்த சமயத்தில், தவ வாழ்வு மேற்கொண்ட போது நிகழ்ந்த ருசிகரமான சம்பவத்தை குருதேவரே குறிப்பிட்டார்: 'நான்' கங்கைக் கால்வாய் வழியாக மீரட்டிலிருந்து ரிஷிகேசத்துக்கு நடந்து வந்து கொண்டிருந்தேன். இலங்கை யிலிருந்து ஸ்ரீ சத்யானந்தாஜி மணியார்டர் மூலம் அனுப்பியிருந்த தொகையை பரீக்ஷித்கரில் பெற்றுக் கொண்டேன். ஒரு புத்தகத்தில் அச்சிட எனது புகைப்படம் ஒன்றை எடுத்து அனுப்புவதற்காக

அந்தப் பணம் அனுப்பப்பட்டிருந்தது. நான் மீரட்டுக்குத் திரும்பினேன். மீண்டும் நான் மீரட்டிலிருந்து திரும்பும்போது சூரிய அஸ்தமனத்துக்குள் பரீக்ஷித்கர் சென்றடைய முடியவில்லை. ஒரே இருட்டு. சாலையோரமாக சில குடிசைகள் இருப்பதைக் கண்டேன். கடும் மழை பெய்து கொண்டிருந்தது. நான் முழுமையாக நனைந்துவிட்டேன். வெளியில் ஒரு கட்டில் கிடந்தது. ஓசை எழுப்பாமல் அந்தக் கட்டிலில் படுத்துவிட்டேன். சிறிது நேரத்தில் யாரோ ஒருவர் என்னை எழுப்பினார். நான் படுத்திருந்த இடம் மனிதர்கள் படுக்கப் பொருத்தமற்ற இடம் என்று அவர் சொன்னார். (அது மாட்டுக் கொட்டகையாக இருந்திருக்க வேண்டும்). வைக்கோல் நிரப்பி வைக்கப்பட்டிருந்த ஒரு கொட்டகைக்கு அந்த அன்பர் என்னை அழைத்துச் சென்று அங்கிருந்த ஒரு கட்டிலில் என்னை உறங்கச் சொன்னார். அங்கு இரவு உறங்கிவிட்டு காலையில் ரிஷிகேசத்துக்கு ஓடி வந்தேன்''.

குருதேவர் தனது அசௌகரியங்களைப் பற்றிக் கவலைப்படாமல் பிறர் துயர்களையப் பாடுபட்டதாக ஸ்ரீ சுவாமி சிவஸ்வருப்ஜி கூறினார். நிச்சயமாக இது ஒரு தெய்வீகப் பண்பு ஆகும்.

## 22. செயல் துடிப்புள்ள யோகியின் தினசரி நிகழ்முறை

குருதேவர் அதிகாலையில் 4 மணிக்கு எழுந்து விடுவார். * கங்கையில் குளித்துவிட்டு சில நிமிடங்கள் ஆசனங்கள் செய்வார். பிறகு பத்மாசனத்தில் அமர்ந்து தியானம் செய்யத் தொடங்கி விடுவார்.

முதலில் அவர் சில ஸ்லோகங்களையும் கீர்த்தனைகளையும், இனிய குரலில் பாடுவார்.

சில மணி நேரம் ஆழ்ந்து தியானம் செய்த பின்னர் அவர் நோயாளி வடிவில் உள்ள தெய்வங்களை தரிசிக்க கிளம்பிவிடுவார். அவர்களுடைய

---

* இந்தப் பழக்கம் குருதேவருக்கு சிறு வயதிலிருந்தே இருந்து வந்தது. ஸ்ரீ சுவாமி சிதானந்தாஜி 'ஒளி வெள்ளம்' (Light fountain) என்ற தலைப்பில் குருதேவரின் வாழ்க்கை வரலாறு பற்றி எழுதிய நூலில் குருதேவரின் இளம் பிராயம் பற்றி பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:

அந்தச் சிறுவன் அதிகாலையில் 3 அல்லது 3½ மணிக்கு எழுந்துவிடுவான். வீட்டில் மற்றவர்கள் எழுந்திருப்பதற்கு முன்னதாக இவன் வெளியே புறப்பட்டுவிடுவான். (''எனது படுக்கையில் தலையணை போர்வையை எல்லாம் நான் படுத்திருப்பதுபோன்ற கோலத்தில் வைத்துவிட்டுச் செல்ல வேண்டியிருக்கும்'' என்று குருதேவர் சொல்லியிருக்கிறார்). மற்றவர்கள் விழித்துப் பார்க்கும்போது சிறுவன் உடற் பயிற்சி சாலையில் தீவிரமாக உடற் பயிற்சி செய்து கொண்டிருப்பான்.

தேவையை அறிந்து கொண்டு கடைவீதிக்குச் செல்லுவார். வரும் வழியிலோ அல்லது குடிலுக்குத் திரும்பிய சிறிது நேரத்திலோ அவர் பிக்ஷைக்குச் செல்லுவார். அவர் தலையில் ஒரு துண்டைக் கட்டிக் கொள்ளுவார். அதன் ஒரு பகுதி முகத்தைப் 'பர்தா'போல மறைக்கும். இந்தக் கோலத்தில் தருமச்சாலை சென்று யாரும் தன்னை அடையாளம் காணாத அளவில் பிக்ஷையை ஏற்றுக் கொண்டு வந்துவிடுவார். இதன்மூலம், தருமச்சாலையில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை மற்ற துறவிகளுக்கு குருதேவர் உணர்த்தினார். "நாம் எதுவும் கொடுக்காமல், பிக்ஷையை ஏற்றுக் கொள்ளுவது குறித்து நாம் வெட்கப்பட வேண்டும். ஆகவே பிக்ஷையை மிகவும் பணிவுடன் நாம் பெற்றுக் கொள்ளவேண்டும்." என்று குருதேவர் கூறுவார். துறவிகளில் பல வகையினர் உண்டு. பிறர் விஷயங்களைப் பேசுவதில் சிலருக்கு மகிழ்ச்சி. உணவு சமைத்ததில் உள்ள குறைபாடு பற்றியும் தருமச்சாலை நிர்வாகிகள் எப்படி நடந்துகொண்டார்கள், எப்படி நடந்துகொண்டிருக்க வேண்டும் என்பது பற்றியும் அவர்கள் பேசுவார்கள். குருதேவர் இத்தகையவர்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ள மாட்டார்.

ஏற்கனவே குறிப்பிடப்பட்டது போல குருதேவர் தனது உணவை குடிலில் வைத்துவிட்டு பால், தயிர், பழங்கள் மற்றும் மருந்துகளை எடுத்துக்கொண்டு வெளியே புறப்பட்டுவிடுவார். அவர் தனது உடைகளைத் தானே துவைப்பார்; தனது பாத்திரங்களை தானே சுத்தப்படுத்துவார். தனது அறையையும் தானே துப்புரவு செய்து கொள்ளுவார். குருதேவரின் முதல் சீடர் குழாமில் ஒருவரான சுவாமி பரமானந்தா குருதேவருக்குத்

தொண்டு செய்ய முன்வருவார் ஆனால் குருதேவர் அவரிடம், ''வயதான மகாத்மாக்களுக்குத் தொண்டு செய்யுங்கள். அவர்களுக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடுங்கள். அவர்கள் அறைகளை சுத்தப்படுத்துங்கள். அவர்களது ஆடைகளைத் துவைத்துக் கொடுங்கள்'' என்று கூறுவார்.

பிறகு குருதேவர் நூலகம் நோக்கி விரைந்து செல்வார். தத்துவம் அல்லது யோகம் சம்பந்தமான புத்தகங்களை எடுத்துக்கொண்டு வருவார்.

மீதமுள்ள நேரத்தில், இரவு வெகுநேரம் வரை புத்தகங்களைப் படித்தல், தியானம் செய்தல் ஆகியவற்றில் ஈடுபடுவார். மாலையில் ஒருமணி நேரம் மக்கள் தன்னைச் சந்திக்க அனுமதிப்பார். மாலையில் சத்சங்கத்தில் பங்கு கொள்ளுவார் அல்லது சத்சங்கத்தை நடத்துவார். அங்கு தனது இனிய குரலில் கீர்த்தனைகளைப் பாடுவார்.

குருதேவர் செயல் துடிப்பு உடையவர். ஒரே நேரத்தில் பல வேலைகளை கவனிக்கும் ஆற்றல் உடையவர். ஆகவே, இவ்வளவு வேலைகள் இருந்தாலும், உணவு மற்ற வசதிகள் குறைவாக இருந்தாலும் அவரால் சிறப்பாகப் பணியாற்ற முடிந்தது. அவர் நோயாளிகளுக்கு சிகிச்சை அளிப்பார். மாணவர்கள் எழுதிக்கொள்ள குறிப்புக்களைச் சொல்லுவார். செய்தித்தாள்களுக்குக் கட்டுரைகள் எழுதுவார். யாத்திரீகர்களின் கேள்விகளுக்கு பதில் சொல்லுவார் — சில நேரங்களில் இவை அனைத்தும் 'பார்வையாளர் நேரத்தில் நிகழும். இவ்வாறு பணியாற்றியதால்தான் கல்யாண், பக்தி, பர்லோகி, சங்கீர்த்தன், விஷண், (Vision) லோகோபகாரி, பீஸ் (Peace) மெசேஜ், (Message), மை மேகஸின் ஆஃப் இண்டியா (My Magazine of India), சி. எஸ். எஸ். ரெவ்யூ (CSS

Review) மெஹர் கெசட் (Meher Gazette) சாந்தி, தி ஸ்டூடெண்ட் (The student) ஆகிய பத்திரிகைகளுக்கு அவரால் கட்டுரைகள் எழுதிக் கொடுக்க முடிந்தது.

இதைவிடச் சிறப்பாக குருதேவர் ஒரு சாதனை புரிந்தார். அதாவது ஒரு புத்தகம் எழுதி அதை அச்சிட்டு வெளியிடவும் செய்தார். "யோகப் பயிற்சி — பாகம் ஒன்று" என்பது அந்தப் புத்தகத்தின் தலைப்பு. குருதேவர் எழுதிய இந்த முதல் நூல் 1929-ல் வெளியாகியது. அவரிடம் தட்டச்சு இயந்திரம் கிடையாது. ஒரு பேனகூட இல்லை. பயன்படுத்தப்பட்ட அஞ்சல் உறைகளின் உள்பக்கத்தில் அவர் எழுதுவார். அவர் எழுதியதை பிரதிகள் எடுக்க ஆள் இல்லை. அவர் பிக்ஷை எடுத்து வாழ்ந்து வந்தாலும் இந்த அற்புதமான நூலை அவர் எழுதி வெளியிட்டார். இது இணையற்ற சாதனை ஆகும்.

பிறகு அவர் தியானத்தில் அதிக நாட்டம் கொண்டார். உணவு உண்பதில்லை, எவருடனும் பேசுவதில்லை. ஒவ்வொரு நாளும் பெரும் பகுதி நேரம் தியானத்திலேயே ஈடுபட்டிருந்தார். தியானத்திலும் சிறிதளவு ஆசனப் பயிற்சியிலும் பொழுது கழிந்தது. உலர்ந்த ரொட்டியையும் கங்கை நீரையும் உட்கொண்டுவிட்டு மென்மேலும் தீவிரமாக தியானத்தில் மூழ்கினார். குடிலின் கதவை மூடிவிட்டு பல நாட்கள் தொடர்ந்து இவ்வாறு இருந்தார். அவரது இச்செயல்கண்டு அவருடன் இருந்த துறவிகள் ஆச்சரியம் அடைந்தனர்.

ஒரு நாள்கூட அவர் ஓய்வு எடுத்துக் கொண்டதில்லை. நாட்கணக்கில், வாரக் கணக்கில், மாதக் கணக்கில் ஐந்து ஆண்டுகள் தொடர்ந்து குருதேவர் தீவிர ஆன்மீக சாதனையில் ஈடுபட்டார். ஒருநாள்

அனைத்து சாதனைகளுக்கும் இறுதிக் குறிக்கோளாக இருப்பதனை அவர் அடைந்துவிட்டார். அது 1929 அல்லது 1930ல் நிகழ்ந்திருக்கலாம். அவருக்கு ஏற்பட்ட ஆத்மானுபவம் என்று எப்பொழுது நிகழ்ந்தது என்பது குருதேவருக்கு மட்டுமே தெரியும். அவர் ஆழ்ந்த தியானத்தில் இருக்கும் போது உபநிடத ரிஷிகளையும் பகவான் கிருஷ்ணனை யும் தரிசித்ததாக அவரது உதடுகள் எப்போ தாவது முணுமுணுக்கும்.

அந்த நாள் எந்த நாளாக இருந்தாலும் அது பாரதத்தின் ஆன்மீக வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய நாள் ஆகும்.

## 23. முதற் சீடர்கள்

ஸ்ரீ சுவாமி நாராயணனந்தாஜி தான் எழுதிய 'சிவானந்தர் — பரிபூரண குருநாதர்' என்ற நூலில் அவர் (குருதேவர்) சந்நியாச தீக்ஷை அளித்து முதற் சீடராக ஏற்றுக்கொண்டவர் சுவாமி சச்சிதானந்தா'' என்று குறிப்பிட்டிருக் கிறார். இந்த சுவாமியைப்பற்றி இப்பொழுது தகவல் எதுவும் தெரியவில்லை: 1932-ல் ஸ்ரீ சுவாமி பரமானந்தாஜி குருதேவரிடம் வந்து சேர்ந்த பொழுது சுவாமி சச்சிதானந்தா குருதேவருடன் வாழ்ந்து வந்தார்.

பரமானந்தாஜி சென்னையில் ரயில்வே இலாகாவில் பணியாற்றிக் கொண்டிருந்த பொழுது குருதேவர் ஸ்வர்காஸ்ரமத்தில் இருந்தார். அச்சமயத்தில் குருதேவர் எழுதிய முதல் நூலாகிய ''யோகப்பயிற்சி — முதல்பாகம்'' என்னும் நூலை பரமானந்தாஜி படித்து உற்சாகம் பெற்றார். குருதேவரை நேரில் தரிசிக்க விரும்பினார். இயலு மாயின் குருதேவருடன் தங்கியிருந்து அவருக்குத்

தொண்டு செய்ய விரும்பினார். இது சம்பந்தமாக குருதேவருக்கும் பரமானந்தாவுக்குமிடையில் நடைபெற்ற கடிதப்போக்குவரத்து நம் கவனத்தைக் கவரக்கூடியது.

குருதேவர் பரமானந்தாவுக்கு 29–8–1930-ல் முதற் கடிதத்தை எழுதினார். அதன் சுருக்கம் வருமாறு: ''உங்களிடத்தில் ஆன்மீகப் பழக்க வழக்கங்கள் உள்ளன. அவற்றை மென்மேலும் சிறப்பாகக் கடைப்பிடியுங்கள். அவற்றைப் பாது காத்துக் கொள்ளுங்கள். அவற்றைப் பெருக்கிக் கொள்ளுங்கள். இங்கு வர வேண்டாம். பாண்டிச் சேரி அரவிந்தகோஷ் ஆசிரமத்தில் அல்லது ராம கிருஷ்ண மிஷனில் சேர முயற்சி செய்யுங்கள். அங்கு நீங்கள் நன்கு வளர்ச்சி அடைவீர்கள். அவற்றில் ஏதேனும் ஒன்றில் அட்டையைப்போல ஒட்டிக் கொள்ளுங்கள். சிறுவர்களைப்போல ஆன்மீகப் உற்சாகம் அடைவது போதாது. ஆன்மீகப் பாதையில் உணர்ச்சியால் மட்டும் எதையும் சாதிக்க முடியாது. அது ரோஜா மலர்கள் நிறைந் திருக்கும் பாதை அல்ல. முள், தேள் மற்றும் பாம்புகள் அந்தப் பாதையில் உள்ளன. அந்தப் பாதை கரடுமுரடானது, செங்குத்தானது, கடப் பதற்கு மிகவும் கடினமானது. ஆனால் தீவிரமான மன உறுதி உடையவர்கள் இந்தப் பாதையை எளிதில் கடந்து செல்லலாம். 'நான் ஆத்மானு பவம் பெற வேண்டும். இதற்காக என் வாழ்வை அர்ப்பணிப்பேன்' என்ற உறுதிப்பாடு வேண்டும். ஞானம் பெறுவதில் தணியாத தாகம் இருக்க வேண்டும். உங்களுடைய ஆன்மீக முன்னேற்றத் தை நாட் குறிப்பில் குறித்து வையுங்கள். அனைத் தையும் பதிவு செய்யுங்கள். இனிமேல் கடிதம் எழுதுகிறபோது நான் பதில் எழுத வசதியாக அஞ்சல் தலையும் வைத்து அனுப்புங்கள்''.

இரண்டாவது கடிதம் 3—10—1930-ல் எழுதப்பட்டது. அதில் குருதேவர் பின் வருமாறு அறிவுரை கூறுகிருர்:

''முடிந்த அளவுக்கு பணத்தை சேமித்து வையுங்கள். அதை 5 ஆண்டுகளுக்கு அஞ்சலகத்தில் அஞ்சல் ரொக்கச் சான்றிதழ்களைப் பெற்றுக் கொண்டு சேமித்து வையுங்கள். அதில் கணிசமான வட்டி கிடைக்கும். இந்தக் காலத்தில் துறவிகளுக்குக்கூட பணம் தேவைப்படுகிறது. ஏனெனில் இல்லறவாசிகள் போதிய அளவுக்கு அவர்கள்மீது கவனம் செலுத்துவதில்லை. மைலாப்பூரிலுள்ள ராமகிருஷ்ண மிஷனுக்குச் செல்லுங்கள். படித்தல், தியானம் செய்தல்—இவற்றில் மட்டும் நேரத்தைச் செலவிடுங்கள். உலகியல் விஷயங்களில் நாட்டம் கொள்ளாமல் துண்டித்து விடுங்கள்''.

பிறகு, இந்தச் சீடர் குருதேவரை தரிசிக்க முடிவு செய்து விட்டார். அதனை யொட்டி குருதேவர் எழுதிய மூன்ருவது கடிதத்தில் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிருர்:

''சில நாட்கள் ஸ்வர்க்காஸ்ரமத்தில் தங்கியிருங்கள். அங்கு அமைதியையும், ஆன்மீக அலைகளையும் அனுபவிப்பீர்கள். இதில் ஐயமில்லை. சுவாமி சச்சிதானந்தாவுடன் தங்குங்கள். அவரிடம் என் பெயரைச் சொல்லுங்கள். அவர் நீங்கள் தங்குவதற்கு ஏற்பாடுகள் செய்து தருவார். அவர் உங்களுக்குத் தொண்டு செய்வார். குடில்31ல் சுவாமி பாலானந்தாஜி இருக்கிருர். நான் அங்கு வரும் வரை அவர் உங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வார். தாங்கள் இங்கு வந்ததும் என்னுடைய சரியான முகவரியை ரிஷிகேசம் அஞ்சலக அதிகாரியிடம் கேட்டுக் கொண்டு என்னைத்

தொடர்பு கொள்ளுங்கள். அது சௌகரியமாக இருக்கும். சுவாமி அத்வைதானந்தாஜி, தபோவன சுவாமிஜி ஆகியோரையும் தரிசனம் செய்யுங்கள். அவர்கள் நல்ல துறவிகள். பிரம்ம புரிக் காடுகளுக்குச் சென்று சுவாமி புருஷோத்தமானந்தாவை தரிசனம் செய்யுங்கள். அவர்கள் அனைவரும் எனது நெருங்கிய நண்பர்கள். மற்றொரு விஷயம். அன்புடன் கவனியுங்கள்.... உலகைத் துறப்பதில் அவசரப்படாதீர்கள். பல் வேறு சாத்வீக குணங்களை வளர்த்துக் கொள்ள உலகம் ஒரு தகுந்த இடம் ஆகும். நலம் பெற விரும்பும் அனைவர்க்கும் உலகம் ஒரு நல்ல ஆசானாக விளங்குகிறது. இந்த உலகில் இன்னும் சிறிது காலம் வாழ்க்கையை நடத்துங்கள். வருவாயைப் பெருக்கிக்கொள்ளுங்கள். ஆறவாழ்வில் ஈடு படுங்கள். பணத்தை சேமித்து வையுங்கள். வைராக்கியம், போகத்திலிருந்துதான் வருகிறது. அந்த வைராக்கியம் மற்றும் உறுதியானதாகவும், சீரானதாகவும், தீவிரமானதாகவும் இருக்கும். திருமணம் செய்து கொள்ளாதீர்கள். அது வேறு விஷயம். உலகம் நரகம் அல்ல. அகந்தை யும், பகைமையும் இல்லாவிட்டால் உலகம் ஆனந்த மயமாக இருக்கும். மனப்போக்கை மாற்றிக் கொள்ளுங்கள். இங்கு வந்து புனிதத் தலங் களையும், மகான்களையும் தரிசனம் செய்யுங்கள். இதனால் நீங்கள் உற்சாகம் அடைவீர்கள். ஆனால் அவசரப்பட்டு உலகை வெறுத்துத் துறக் காதீர்கள்......ஆன்மீகப் பாதை மலர்ப்பாதை யல்ல; அது முட்கள் நிறைந்த பாதை.

அடுத்து 17—1—1931-ல் குருதேவர் எழுதிய கடிதம் வருமாறு:

''கடவுளிடத்திலும், மதத்தின் மீதும் உங்க ளுக்கு இருக்கிற நாட்டம் உங்களை இந்த உலகச்

சூழ்நிலையிலிருந்து பிரித்து உயர்த்தும். உங்களுக்கு ஆன்மீக பலத்தையும், இறையனுபவம் என்னும் லட்சியத்தை அடைவதற்கான சக்தியையும் இறைவன் தந்து அருள் புரியட்டும். ராமகிருஷ்ண மிஷனில் சேருங்கள். அங்கு நீங்கள் சிறப்பாக முன்னேற்றம் அடைவீர்கள். இதனை நான் உறுதியாகச் சொல்லுகிறேன். சில ஆண்டுகள் மிஷனில் இருங்கள். இங்கு வந்து பார்த்துவிட்டுப் போகலாம். நிரந்தரமாக இங்கு தங்கும் எண்ணத்துடன் வர வேண்டாம். எண்ணித் துணிக கருமம். சிந்தனை செய்யுங்கள். அலசி ஆராய்ந்து பாருங்கள். வேலையை ஒருபோதும் ராஜினமா செய்யாதீர்கள். இதற்காகப் பிறகு வருத்தப் படுவீர்கள். உங்களால் முடிந்த வரை சேமித்து வையுங்கள். இது மிகவும் முக்கியம். இன்னும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது ஏராளமாக இருக்கிறது. உலகம் மிகச் சிறந்த ஆசிரியர். நீங்கள் இந்த உலகில் நிறைய விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். அவசரப்படாதீர்கள். இளமைக் காலத்தில் மேற்போக்காக விஷயங்களை அணுகுகிற தன்மையும், சிறுபிள்ளைத் தனமான உற்சாகமும் அதிகமாக உதவப் போவதில்லை. இந்தப் பாதை கடப்பதற்குச் சிரமமானது; ஆபத்தானது''.

சீடரும் குருதேவரின் ஆணைப்படி ராமகிருஷ்ண மிஷனில் சேர்ந்தார்.

பரமானந்தாஜியைப் பாராட்டி குருதேவர் 1931-ல் எழுதிய கடிதம் வருமாறு:

''ஒரு நீண்ட கயிலாய யாத்திரைக்குப் பிறகு இப்போதுதான் திரும்பி வந்தேன். உங்களது அன்புக் கடிதம் கிடைத்தது. தாங்கள் துணிவாக

ஆன்மீகப் பணியில் ஈடுபட்டிருப்பதைப் பாராட்டு கிறேன். இது உங்கள் மதிப்பை உயர்த்துகிறது. (ராமகிருஷ்ண மிஷனில் சேர்ந்ததன் மூலம்) நீங்கள் ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறீர்கள். பிரம்மஞானம் பெற ஆன்மீக பலத்தையும் இருமடங்கு சக்தியையும் தந்து இறைவன் உங்களுக்கு அருள் புரியட்டும். உலகியல் தொடர்பை இப்போது துண்டித்துக் கொள்ளுங்கள். இப்போது உங்கள் பாதையில் தடையின்றி முன்னேறிச் செல்லலாம். மிஷனின் விதிமுறைகளின்படி செயல்படுங்கள். பெரியவர்களுக்கு மரியாதை, சிரத்தை, பற்றின்மை ஆகியவற்றுடன் தொண்டு செய்யுங்கள்.''

ஒரு நல்ல துறவியாக ஆவதற்கும் குருதேவர் அவருக்கு அறிவுரை கூறினார்.

''எந்த நிலையிலும் உண்மையே பேசுங்கள். உண்மை பேசுவதால் எவருக்கும் தீமை இல்லை. அது ஆன்மீக சக்தியளிக்கிறது. உண்மை பேசுவதன் மூலம்தான் உண்மைப் பொருளை அடைய முடியும். பொறுமை, க்ஷமை, அன்பு, தொண்டு, கருணை ஆகிய பண்புகளைக் கடைப்பிடித்து கோபத்தைக் கட்டுப்படுத்துங்கள். நீங்கள் பணிவு மற்றும் உதார குணத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும். ஆறு மணி நேரம் படிப்பிலும், ஆறு மணி நேரம் தியானத்திலும் இடையறாது ஈடுபட வேண்டும். கடந்த காலத்தை மறந்துவிடுங்கள். நிகழ்காலத்தை நன்கு கருத்தில் கொண்டு வாழ்க்கையை நடத்துங்கள். அனைத்து விதமான எதிர்பார்ப்புகளையும் கைவிட்டு விடுங்கள். மக்கள் உங்களைத் துன்புறுத்தினாலும், வெறுத்தாலும், கேலி செய்தாலும், பொறுமையாக இருங்கள். பழிவாங்காதீர்கள். தினசரி பணியாற்றத் துவங்கு

வதற்கு முன்பாக மலைப்பிரசங்கத்தைப் (புனித மாத்யூ) படியுங்கள். அதில் ஒரு பகுதியை இங்கு நான் குறிப்பிடுகிறேன். இதனை ஒரு நாளைக்கு ஒரு முறையேனும் நினைவுபடுத்திக் கொண்டால் நீங்கள் முக்தி அடையலாம். இதனை இடையருது பயிற்சி செய்யுங்கள்; உங்கள் எதிரியிடத்தில் அன்பு செலுத்துங்கள். உங்கள் மீது சாபமிடுபவர்களை வாழ்த்துங்கள். உங்களை வெறுப்பவர்களுக்கு நன்மை செய்யுங்கள். உங்களை நிந்திப்பவர்களும் துன்புறுத்துபவர்களும் நல்வாழ்வு வாழ இறைவனிடம், பிரார்த்தனை செய்யுங்கள். இதை செயலில் கடைப்பிடிப்பது கடினம்தான். இருப்பினும் இதனைச் செய்தாக வேண்டும்; செய்ய முடியும்.

துறவறம் மேற்கொள்ளுவது குறித்து குருதேவர் கடுமையாக எச்சரிக்கை செய்திருந்தபடியால் பரமானந்தாஜி ஸ்வர்காஸ்ரமத்தில் குருதேவரை தரிசித்த பிறகும்கூட பிரம்மச்சாரியாகவே இருந்தார். தருமச்சாலையில் துறவிகளுக்கு மட்டுமே உணவளிப்பார்கள். குருதேவரின் சொல்லுக்கு அங்கு செல்வாக்கு இருந்தது. இந்த பிரம்மச்சாரிக்கு உணவளிக்க குருதேவர் சிபாரிசு செய்தார். அதன்படி தினமும் உணவளிக்கப்பட்டது. சில நாட்களில் உணவு வழங்குவது நிறுத்தப்பட்டது. பிறகு குருதேவர் தருமச்சாலைக்குச் சென்று தொடர்ந்து உணவளிக்க வேண்டினர். அதன்பின் மீண்டும் உணவளிக்கப்பட்டது. இவ்வாறு ஆறுமாத காலம் கழிந்தது. குருதேவர் இதற்காக இருபதுமுறை தருமச்சாலைக்குச் செல்ல வேண்டியிருந்தது. பரமானந்தர் தான் எழுதிய 'சிவானந்தர் அமைதி மற்றும் அன்பின் தூதர்' என்னும் நூலில் இதனைக் குறிப்பிட்டிருக்கிருர்.

## குருநாதரின் உன்னத மகிழ்ச்சி

அந்தச் சமயத்தில் மூன்று பேர் குருதேவரிடம் பயிற்சி பெற்று வந்தனர். அவர்கள், பிரகாஷ் சைதன்யர், விவேக் சைதன்யர், பரமானந்தர் ஆகிய மூவரும்தான். அறிவிற்சிறந்த ஒரு அன்பர் அருகிலுள்ள ஒரு இல்லத்தில் தனது குடும்பத்தினருடன் வசித்துவந்தார். அவரையும் குருதேவரின் சீடராக்க பரமானந்தர் விரும்பினுர். ''நீங்கள் துறவு மேற்கொண்டால் நானும் துறவு பூணுகிறேன்'' என்று அவர் சொன்னுர். பரமானந்தர் இதற்குச் சம்மதித்தார். இருவரும் தமது கருத்தை குருதேவரிடம் சொல்ல விரும்பினர். ''எங்களுக்கு நாளைய தினமே சந்நியாச தீக்ஷை அளித்தால் பெரிதும் நன்றியுடையவர்களாக இருப்போம்'' என்று ஒரு தாளில் எழுதி குருதேவரது குடிலின் கதவில் ஒட்டிவிட்டனர்.

அதன் பிறகு நிகழ்ந்ததை பரமானந்தர் எழுதியிருக்கிறுர்:

''காலை 9 மணிக்கு நாங்கள் தருமச்சாலையில் இருந்தோம். சுவாமிஜி ஓடி வந்தார். அந்தக் குறிப்பைக் கையில் வைத்துக் கொண்டு, ''அந்தத் திருடன் எங்கே?'' என்று கேட்டார். நான் அறைக்குள் மாலை கட்டிக் கொண்டிருப்பதாக யாரோ அவரிடம் கூறினர். "வேண்டாம், வேண்டாம், மாலை வேண்டாம். நாவிதர் தயாராக இருக்கிறுர், அவரை சீக்கிரம் கூப்பிடுங்கள்'' என்றுர். இதைச் செவிமடுத்த நான் முன்னே ஓடி வந்து குருநாதரை வணங்கினேன். நாங்கள் குடிலுக்குச் சென்றோம். குருதேவர், நாவிதரை குடிலுக்குள் இருக்கச் சொல்லி வெளியில் கதவைப் பூட்டிக் கொண்டு வந்துவிட்டார். தனது சீடர்களைத் தேடும் நேரத்தில் நாவிதர் வேறு எங்கேனும்

போய்விடக்கூடாதே என்ற ஆர்வத்தில் குருதேவர் இப்படிச் செய்திருக்கிறார். பிறகு எங்களுக்கு மொட்டை அடிக்கப்பட்டது. நாங்கள் இருவரும் பரமானந்தா, ஸ்வரூபானந்தா என்ற புதிய பெயருடன் துறவிகளானோம்''.

ஆரம்ப காலத்தில் குருதேவரின் சீடர்களாக ஆகியவர்களில் ஒரு சிலர் வயதில் குருதேவரைவிட மூத்தவர்கள். ''சிவாவின் வாழ்வும் வாக்கும்'' (Life and Sayings of Siva) என்ற நூலில் சுவாமி பரமானந்தர் எழுதியுள்ள இரு சம்பவங்கள் இங்கு குறிப்பிடத்தக்கவை!

''ஆந்திர தேசத்தைச் சார்ந்தவரும், துறவு மேற்கொண்டு குருதேவரின் சீடராகத் திகழ்ந்தவருமான சுவாமி ஞானானந்தாஜி ஒரு ஞானி. அவருக்கு வயது 70 (இந்த நூல் 1934-ல் எழுதப் பட்டது). அவர் தூய்மையானவர். அவர் யாரிடம் எதைக் கேட்டாலும் அனைவரும் குருதேவரிடம் கேட்குமாறு அவரிடம் கூறினர். ''அவர் முன்னே நிற்பதற்கே இயலாமல் நடுங்குகிறேன். அவரிடம் என்னால் கேள்வி எப்படிக் கேட்க முடியும்'' என்று அந்த முதிய துறவி சொல்லுவார்.

''சுவாமிஜி வித்யானந்தர் வங்காளத்தைச் சார்ந்தவர். வயது 60 இருக்கும். அவர் நோயுற்று பலவீனமாக இருந்தார். சிறிது தூரம்கூட அவரால் நடக்க இயலவில்லை. ஒரு சமயம் தன்னை ஆசீர்வதிக்குமாறு அவர் குருதேவரிடம் கேட்டார்''. நீங்கள் குணமடைந்து விடுவீர்கள் என்று குருதேவர் கூறினார். ஒரு வாரகாலத்தில் அவர் பூரணமாக உடல் நலம் பெற்றார். இப்பொழுதும் அவர் மூன்று மைல் தூரம் நடந்து சென்று பிக்ஷை ஏற்றுக்

கொள்ளுகிறார். நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறார். நான் அவரைச் சந்திக்கும் போதெல்லாம், அவர் பின்வருமாறு கூறுகிறார். நான் சிவானந்தரின் பெயரை ஜபம் செய்தால் எல்லாம் நன்மையாக முடிகின்றன. முடியாதது என்று எதுவும் இல்லை. அவரது பெயரை ஜபம் செய்தால் புதிய சக்தியும் நம்பிக்கையும் கிடைக்கிறது. அனைத்துத் தொல்லைகளும் அகன்று விடுகின்றன.

## நிரந்தர மர்மம்

குருதேவர் தனது சீடர்களாக ஏற்றுக்கொண்டவர்களில் ஒரு சிலர் அவரது நற்குணங்களையும் மற்ற சீடர்களின் நற்குணங்களையும் சோதித்து அறிந்துகொள்ளுவதையே முக்கிய வேலையாகக் கொண்டிருந்தனர். குருதேவரும் அவர்கள் விருப்பம்போல் விஷயங்களை அறிந்துகொண்டு வளர்ச்சி அடைய வாய்ப்பளித்தார்.

ஸ்வர்காஸ்ரமத்தில் முதியவர் ஒருவர் குருதேவரை அணுகி 'நான் நேற்று இரவு ஒரு கனவு கண்டேன். கனவில் என் குரு காட்சி தந்தார். உங்களுக்கு சந்நியாச தீக்ஷை அளிக்கும்படி அவர் என்னிடம் கூறினார். நீங்கள் ஒரு தேதியை நிர்ணயம் செய்யுங்கள். நான் உங்களுக்கு முறையாக தீக்ஷை அளிக்கிறேன்' என்று கூறினார். தான் ஏற்கனவே ஸ்ரீ சுவாமி விஸ்வானந்தாவிடம் சந்நியாச தீக்ஷை பெற்றுக் கொண்டதாக குருதேவர் அவரிடம் கூறினார். அதே நபர் சில நாட்கள் கழித்து குருதேவரிடம் வந்தார். தனக்கு சந்நியாச தீக்ஷை அளிக்குமாறு வேண்டினார். அவர் உண்மையான துறவி இல்லை என்று சொல்லி, தருமச்சாலையில் உணவளிக்க மறுத்துவிட்டனர். ஆச்சரியமான விஷயம் என்ன

வென்றால் அந்த அன்பரின் நிலைகண்டு குருதேவர் கேலி செய்து நகைக்கவில்லை. அவர் விரும்பியபடி சந்நியாச தீக்ஷை அளித்தார். அவர் மீது கருணை கொண்டு அவ்வாறு செய்தார். அவர் உணவு பெற காவி உடை வேண்டும்! இந்தப் புதிய சீடர் ஒருநாள் குருதேவரிடம் வந்து, எனக்கு வேதாந்தத்தில் எல்லாம் தெரியும். ஆகவே எனக்கு 'வேதாந்த கேசரி' என்ற பட்டத்தைக் கொடுங்கள் என்றார். குழந்தை உள்ளம் கொண்ட குருதேவர், ''ஆம், ஆம், நீங்கள் வேதாந்த கேசரி'' என்றார். இந்த விந்தைமிகு சுவாமி குருதேவர் தன்னை வேதாந்த கேசரி என்று அங்கீகரித்துவிட்டதாகச் சென்றவிடமெல்லாம் பறைசாற்றிக் கொண்டார். இதைவிடமோசம் யாதெனில் சில நாட்கள் கழித்து அவர் சுவாமி பரமானந்தரிடம், ''சுவாமி சிவானந்தருக்கு வேதாந்தத்தில் எதுவும் தெரியாது, எனக்கு எல்லாம் தெரியும், ஆகவே அவரை விட்டு விட்டு நீங்கள் எனது சீடராக ஆகிவிடுங்கள்'' என்று கூறியதுதான்.

பரமானந்தர் பின்வருமாறு கூறுகிறார். ''பிரம்மானந்தர் தன்னைப்பற்றித் தவறாகப் பேசுகிறார் என்பது சுவாமிஜிக்குத் தெரிந்திருந்த போதிலும், அந்த முதியவருக்குத் தொண்டு செய்யுமாறும், தான் அவருக்கு வேதாந்த கேசரி என்று பட்டமளித்ததை மதிக்குமாறும் எங்களிடம் சுவாமிஜி கூறுவார்''.

சுவாமி சச்சிதானந்தாவின் நிலையும் இதுதான். அவர் குருதேவரை அணுகித் தனக்கு சந்நியாச தீக்ஷை அளிக்குமாறு வேண்டினார். ஆனால் குருதேவர் மறுத்துவிட்டார். பிறகு அவர் பத்ரி, கேதார் யாத்திரை சென்றுவிட்டு ரிஷிகேசம் திரும்பும்போது தாடி வளர்த்துக்கொண்டு வந்தார். தனக்கு அவசியம் சந்நியாச தீக்ஷை கொடுக்க

வேண்டும் என குருதேவரிடம் வற்புறுத்தினார். கருணைகொண்டு குருதேவரும் அவருக்கு சந்நியாச தீக்ஷை அளித்தார். குருதேவரிடம் கொஞ்சம் பணம் இருந்தது. இது எப்படியோ சச்சிதானந்தாவுக்குத் தெரிந்துவிட்டது. சில நாட்களுக்கு ஒரு முறை அவர் குருதேவரை அணுகி தனக்குத் தலை வலிக்கிறது என்பார். குருதேவரும் சில காசுகளை அவருக்குக் கொடுப்பார். அதற்கு மிளகாய், புளி வாங்கி சட்னி தயாரித்து விடுவார். குருதேவர் மீண்டும் கருணைகொண்டு அவரை உற்சாகப் படுத்தினார். பிறகு அவர் குருதேவரைக் காணச் செல்லும்போது சிறிதளவு சட்னியும் எடுத்துச் செல்வார். இதற்குப் பொருள் என்ன என்பதை குருதேவர் புரிந்து கொண்டார். இருப்புத் தீர்ந்து விட்டது. குருதேவர் சட்னியை ருசிபார்த்து அதற்காகப் பாராட்டுத் தெரிவித்துவிட்டு சச்சிதானந்தாவிடம் மேலும் சில காசுகளைக் கொடுப்பார்.

குருதேவர் தனது சகாக்களோ அல்லது தனது சீடர்களோ எப்போதும் தன்னிடத்தில் மட்டுமே விசுவாசமாக இருக்கவேண்டும் என்று எதிர்பார்த்ததில்லை, வலியுறுத்தியதில்லை. மற்ற மகாத்மாக்களின் சீடர்களுக்கும் அவர் சந்நியாச தீக்ஷை அளித்தார். தனது சீடர்களிடம் மற்ற மகாத்மாக்களுக்கும், துறவிகளுக்கும் தொண்டாற்றுமாறு சொல்லுவார். (பரமானந்தர் குருதேவரிடம் வந்து சேர்ந்த பிறகு சாந்தி ஆஸ்ரமத்தைச் சார்ந்த ஸ்ரீ சுவாமி ஓங்கார்ஜி பரமானந்தரை தனக்குத் தொண்டு செய்ய அனுப்பிவைக்குமாறு வேண்டினார். அப்போது குருதேவரின் ஒரே உதவியாளராக பரமானந்தர் இருந்தார். ஆயினும் குருதேவர் சுவாமி ஓங்கார்ஜியின் கோரிக்கையை நிறைவேற்றிவைக்கச் சம்மதித்தார். பரமானந்தர்

சாந்தி ஆசிரமம் சென்று தொண்டு செய்து கொண்டிருந்த பொழுது, குருதேவர் பரமானந்தருக்கு எழுதிய கடிதங்களுள் ஒன்றில் பின்வருமாறு கூறுகிறார். ''சகோதரி சுசீலா, சுவாமி ஓங்கார்ஜி, ஆசிரமவாசிகள், துப்புரவுப் பணியாளர்களுக்கு நமஸ்காரம் செய்யுங்கள். தினசரி காலையில் முதற் பணியாக இதனைச் செய்யுங்கள்'') சுவாமி ஆத்மானந்தாஜி, மாதாஜி ஓங்காரேஸ்வரிஜியின் சீடர். அவரை குருதேவரிடம் சந்நியாச தீக்ஷை பெற்றுக் கொள்ளுமாறு மாதாஜி கூறினார். குருதேவர் உடனே தீக்ஷை அளித்துவிட்டார். அவர் சீடராக ஏற்றுக்கொள்ளுகிறவர்கள் தனக்கு மட்டுமே தொண்டு புரிய வேண்டும் என அவர் ஒரு போதும் வற்புறுத்துவதில்லை. துறவறம் மேற்கொள்ள ஆவலுடையவர்களுக்கு தீக்ஷை அளிப்பார். அதன் பிறகு குருதேவருடன் இருப்பதும் அவரைப் பிரிந்து செல்வதும் அவர்கள் விருப்பம். ஆனால் ஆத்மானந்தர் ஆரம்ப காலத்தில் குருதேவருக்குப் பெரிதும் உறுதுணையாக இருந்தார். குருதேவர் சுற்றுப்பயணம் செய்யும்போது அவரும் உடன் சென்று பெருமளவுக்கு உதவி புரிந்தார்.

ஒரு சில ஆண்டுகள் கழித்து 1934-ல் குருதேவர் பரமானந்தருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு கூறுகிறார்: பிரம்மச்சாரி சிவராமை வரவேற்கிறேன். அவருக்கு எனது நல்வாழ்த்துக்கள். ஆன்மீக சாதகர்கள் அனைவர்க்கும் தொண்டு செய்வதற்கே இந்த உடல் இருக்கிறது. நான் அவரை நன்கு கவனித்து ஆன்மீகப் பாதையில் தகுந்த முறையில் வழிகாட்டுவேன். சிரத்தையுள்ள சாதகர்களை — அவர்கள் எத்தனை பேராயினும் அனுப்புங்கள். அவர்களுக்கு இங்கு சிறப்பாகக் களம் அமைத்திருக்கிறேன். அனைவரும் வளர்ச்சி அடையலாம்''.

# 24. ஆன்மீகப் பிரசாரத்தின் துவக்கம்

''மதம் இன்றி உங்களால் வாழ முடியாது. இறைவன் நாமம் இன்றி உங்களால் வாழ முடியாது. இறைவனின் இனிய திருப்பெயரே உங்களுக்குப் பாதுகாப்பான இடம். கடவுளிடத்தில் வாழ்ந்திருங்கள். பிரம்மத்தில் நிலைத்திருங்கள். இந்த உலகம் ஒரு சத்திரம். ஆன்மீக சாதனையில் தீவிரமாக ஈடுபடுங்கள். தன்னலமற்ற தொண்டு, துறவு, பற்றின்மை, தியானம் ஆகியவற்றுடன் வாழ்க்கையை நடத்துங்கள் சத்சங்கத்தில் ஈடுபடுங்கள். 'நான் யார்?' என்று எண்ணிப் பாருங்கள். அறியாமை அகன்றுவிடும். பிரம்மஞானம் உதயமாகும். பற்றற்ற தன்மை மற்றும் தீவிர சாதனையின் மூலம் சீராக உயர்ந்து சென்று ஞானத்தின் சிகரத்தை அடையுங்கள்''.

குருதேவரின் முதற் சொற்பொழிவின் சுருக்கம் இது. வழக்கறிஞர் பண்டித சந்த் நாராயண் ஹர்குலியின் அழைப்பின் பேரில் குருதேவர் சீதாபூரில் இந்தச் சொற்பொழிவை நிகழ்த்தினார்.

1932 நவம்பர் 20-ந் தேதி குருதேவர் தீவிர ஆன்மீக விழிப்புணர்வுப் பிரசாரத்தைத் துவக்கினார். அவருடன் சுவாமி ஆத்மானந்தாவும், சுவாமி ஸ்வரூபானந்தாவும் சென்றனர்.

சுவாமி ஆத்மானந்தா கீர்த்தனைகள் பாடுவார். சுவாமி ஸ்வரூபானந்தா குருதேவரின் அருளுரைகளை ஹிந்தியில் மொழி பெயர்ப்பார். குருதேவர் இறைவனின் திருப்பெயரை எல்லோரும் கேட்க வேண்டும் என்று விரும்பினார். அது வாழ்வை அற்புதமாக மாற்றியமைக்கும் என்பதை அவர் செயலில் கண்டிருக்கிறார். அவர் கடவுளைக்

கண்டிருக்கிறார். பிறர் காண வழி காட்டிட அவர் ஆவல் கொண்டார்.

ஒரு வாரத்தில் சீதாபூர் முழுவதும் இறைவனின் திருநாமம் ஒலிக்கத் தொடங்கியது. மக்கள் அவருடைய கீர்த்தனைகளை கேட்க பல்லாயிரக் கணக்கில் கூடினர். ''இவர் தனக்காக உலகில் எதுவும் வைத்துக் கொள்ளவில்லை. ஆயினும் மகிழ்ச்சியாக, அமைதியாக இருக்கிறார். மிகப் பெரிய பணக்காரர்களைவிட அதிக சக்தி யுடனும், உற்சாகத்துடனும் வாழ்கிறார் — என்று மக்கள் குருதேவரைப் பற்றிக் கருதினர். குருதேவரின் வெற்றிகரமான, மகிழ்ச்சிகரமான வாழ்க்கையின் ரகசியத்தை அறிய மக்கள் விரும்பி னர். அவரும் அதனைச் சொல்லித்தரத் தயாராக இருந்தார்.

குருதேவர் பாடினார், ஆடினார். அவரது கீர்த்தனைகள் மக்களைப் பரவசத்தில் ஆழ்த்தின. இரு சங்கீர்த்தன நிகழ்ச்சிகளுக்கிடையில் அவர் அருளுரை நிகழ்த்துவார். இதில் தன்னலமற்ற தொண்டு, தர்மம், தூய்மை, ஆசனங்கள், பிராணா யாமம் ஆகியவை பற்றிப் பேசுவார். ஆன்மீகத் துறையில் முன்னேறத் துடிக்கும் அன்பர்களுக்கு வேதாந்தக் கருத்துக்களையும் விளக்கியுரைப்பார்.

சீதாபூர் சம்பவங்களை விளக்கி சுவாமி பரமானந்தருக்கு குருதேவர் 1932 நவம்பர் 26-ந் தேதி ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதில் பின் வருமாறு கூறுகிறார்; ''நான் இப்போது சீதாபூரில் இருக்கிறேன். உத்திரப்பிரதேசம் முழுவதும் நிறைய பணிகளில் ஈடுபட்டேன். எனக்குத் தேதி தெரியவில்லை. நீங்கள், தபால் தேதி, முத்திரை யிலிருந்து அதைத் தெரிந்து கொள்ளுங்கள். நான்

வேதாந்த சிங்கமாக கர்ஜனை புரியத் தொடங்கி யிருக்கிறேன். கேட்பவர்களுக்கு இது ஆச்சரியமாக இருக்கிறது. நான் காலையில் சமரஸப் பிரார்த்தனை, தியானம், விடியற்காலை நகர் கீர்த்தனை, ஆசனம், லிகித ஜபம், போட்டிகள் ஆகிய நிகழ்ச்சிகளை நடத்தி வருகிறேன். நான் பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் சென்று தீப்பொறி பறக்கும் சொற்பொழிவுகளை நிகழ்த்துகிறேன். இரவு சத்சங்கத்தில் பக்தர்களை கீர்த்தனை மற்றும் பஜனைப் பாடல்களைப் பாடுமாறு செய்கிறேன். ஆயிரக்கணக்கான துண்டு பிரசுரங்கள் இலவசமாக விநியோகிக்கப்படுகின்றன.

எதிர்கால சுற்றுப்பயணம் பற்றியும் அவர் குறிப்பால் உணர்த்துகிறார். தனக்குக் கடிதம் எதுவும் எழுத வேண்டாம் என்கிறார். ஆன்மீகப் பிரசாரத்தில் அவர் தீவிரமாக இறங்கிவிட்டதை இது சுட்டிக் காட்டுகிறது.

''நான் கீர்த்தனை மாநாட்டில் கலந்துகொள்ள மீரட்டுக்குச் செல்ல வேண்டியிருக்கும். எனக்கு நேரம் இல்லை. எனக்குக் கடிதம் எதுவும் எழுத வேண்டாம். என்னால் கடிதம் எழுத முடியாது. அது எனது பணிக்கு இடையூறாக இருக்கும். இங்கு எனது சக்தி முழுவதையும் செலவிட்டு பணிசெய்து வருகிறேன். மக்கள் எல்லாப் பக்கங்களிலுமிருந்து என்னை நாடி வருகின்றனர்.

கீர்த்தனை நிகழ்ச்சி, திருக்கோயில்கள், தருமச் சாலைகள், பள்ளிகள் போன்ற இடங்களில் ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த நிகழ்ச்சிகளில் மக்கள் திரளாகக் கூடினர். சீதாபூர் மாவட்டத்தில் உள்ள ஒவ்வொருவரும் ராம நாம ஜபம் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் கமலாபூர், சித்த ஹௌளி, லஹர்பூர் மற்றும் பல இடங்களில்

கீர்த்தனை நிகழ்ச்சிகளை நடத்தினர். ஹைதிராபாத் ஜமீன்தார் ஸ்ரீ பிரயாக் நாராயண் தனது வீட்டுக்கு முன்பாக கீர்த்தனை நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார். கீர்த்தனை நிகழ்ச்சிகளில் ஐரோப்பியர்களும் கலந்து கொண்டனர். மாக்லார் தம்பதிகள் பல கீர்த்தனை நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டனர்.

ஒரு மாணவன் பள்ளியில் குருதேவரின் சொற்பொழிவைக் கேட்டான். அதன் பிறகு வீட்டில் ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டு வீட்டை விட்டுப் போய்விட்டான். அவன் தனது தந்தையின் படுக்கையின் மீது வைத்திருந்த கடிதத்தில் பின் வரும் வாசகம் இருந்தது. ''அப்பா, இது எனது கடைசி பிரணும் (வணக்கம்). நான் எனது இதயத்தில் குடிகொண்டிருக்கும் இறைவனை— உண்மையான தந்தையைத் தேடிச் செல்லுகிறேன். சுவாமி சிவானந்தரின் அருளுரை என்னைக் கவர்ந்து விட்டது. இப்போது எனது கண்கள் திறந்து விட்டன. இதுதான் எனது உண்மையான கடமை. இறையனுபவம் பெறுவது எனது தலையாய கடமை''.

குருதேவர் சீதாபூரில் இருந்தபோது தனிமையில் இருந்து தியானம் செய்ய விரும்பினார். ஆகவே அவர் எவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் நகரத்திலிருந்து இரண்டு மைல் கடந்து ஓரிடத்தை அடைந்தார். அங்கு இடிந்துபோன குடிசை ஒன்று இருந்தது. அவர் அந்தக் குடிசைக்குள் சென்று அன்றைய தினம் முழுவதும் தியானம் செய்தார்.

## உலகக் காவலர்

சீதாபூர் அருளுரை ஒரு துவக்கம்தான். அதன் பிறகு தனது கடுந்தவத்திஞல் பெற்ற பலனை

மக்களுக்குப் பகிர்ந்தளிக்க குருதேவர் பேராவல் கொண்டார்.

அவர் இனி சாதனையில் ஈடுபடத் தேவையில்லை. அவர் 'சஹஜ' சமாதி நிலையினை அடைந்து விட்டார்.

அவரது அருளுரை கேட்க மக்கள் பெருந் திரளாக வந்து கூடினர். அவர் ஆங்கிலத்தில்தான் பேசுவார். ஆயினும் மக்கள் அதனை அமைதியாகக் கேட்டனர். அதற்குக் காரணம் மக்கள் உள்ளத்தைக் கவரும் ஆற்றல் அவரது சொற்களுக்கு இருந்ததுதான். 1959 ல் குருதேவரின் 73 வது பிறந்தநாள் விழாவையொட்டி 'டிவைன் லைஃப்' (Divine Life) என்ற பத்திரிகை வெளியிட்ட மலருக்கு அப்போதைய மத்திய பாதுகாப்புத்துறை துணை அமைச்சர் ஒரு சிறப்புச் செய்தி அனுப்பி யிருந்தார். அதில் அவர் பின் வருமாறு எழுதி யிருந்தார்.

''தத்துவமேதைகளை சந்திப்பது கடினம் அல்ல. ஆன்மீக விஷயங்களில் அருமையாகப் பேசுபவர்களை அடிக்கடி நாம் சந்திக்கிறோம். ஆனால் உங்களைப் பார்த்தமாத்திரத்திலேயே உங்களை உலகியல் வாழ்விலிருந்து பிரித்தி உயர்த்தி நிலையான வாழ்வைச் சுட்டிக் காட்டுவோர் அரிது. சுவாமி சிவானந்தரின் உன்னத ஆத்மா பேரானந்தம் மற்றும் ஞானஒளியினை நிலையாக தவறாது தரும் என உலகில் எண்ணற்ற மக்கள் எண்ணுவதுபோல நானும் எண்ணுகிறேன். அவர் இன்னும் பல்லாண்டுகள் மனித குலத்துக்குத் தொண்டாற்ற இறைவன் அருள் புரியட்டும்''.

## அற்புத மாற்றம்

குருதேவர், ஸ்ரீ ராம்சந்த் சதுர்வேதி பி. ஏ., எல். எல். பி, சனாதன தர்மசபை சார்பாக விடுத்த அழைப்பின் பேரில் சீதாபூரிலிருந்து லகிம்பூர் சேரிக்குச் சென்றார். அங்கு கீர்த்தனை நடத்தியதுடன் இரு உயர்நிலைப்பள்ளிகளுக்குச் சென்று பிரம்மசரியம் மற்றும் அதன் அவசியம் பற்றி அருளுரையாற்றினார். அவர் ஆசனங்கள் மற்றும் பிராணாயாமம் செய்து காட்டி அவற்றில் மாணவர்களுக்குப் பயிற்சி அளித்தார்.

குருதேவர் லக்கிம்பூரிலிருந்து லக்னோ சென்றார். மண்டி மகாராணி அரண்மனையில் கீர்த்தனை செய்தார். அங்கிருந்து அவர் அயோத்தி சென்றார். அங்கு திரு. பண்டித ராம்வல்லபசரணின் கதை மண்டபத்தில் கீர்த்தனை செய்தார். பிறகு அவர் அங்கிருந்து மாங்கீருக்குச் சென்றார்.

மாங்கீரில் அவர் ஒரு சங்கீர்த்தன மாநாட்டுக்குத் தலைமை வகித்தார். கீர்த்தனை மண்டபத்தில் ஐயாயிரம் மக்கள் அமர்ந்திருந்தனர். காசி பல்கலைக் கழகப் பேராசிரியர் ஒருவர் ''உபாசனை விஞ்ஞான நோக்கு'' என்ற தலைப்பில் பேசினார். அவரால் மக்களது கவனத்தை முழுமையாக ஈர்க்க முடியவில்லை. நிலைமையைச் சமாளிக்க உதவுமாறு மாநாட்டு அமைப்பாளர்கள் குருதேவரிடம் வேண்டினர். குருதேவர் உடன் எழுந்து இறைவனின் பெயரைப் பாட ஆரம்பித்தார். அனைவரும் சேர்ந்து பாடினர். அடுத்து அரங்கில் முழு அமைதி நிலவியது. அனைவரும் சிவானந்தரின் மீது வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர்.

மாங்கீர், பகல்பூர் மற்றும் பல இடங்களில் குருதேவர் 'லாரி கீர்த்தனைகளுக்கு ஏற்பாடு'

செய்தார். இந்தப் புதிய ஏற்பாட்டின் மூலம் அவர் சூழ்நிலையினை முழுமையாகத் தூய்மைப்படுத்தினார். கீர்த்தனைக்குழு அலங்கரிக்கப்பட்ட லாரிகளில் அமர்ந்து இறைவனின் பெயரைப் பாடிக்கொண்டே சென்றது. லாரி, நாள் முழுவதும் பவனி வந்தது. நகரம் முழுவதும் அதன் சுற்றுப்புறங்களிலும் சந்து சந்தாக தெருத் தெருவாகச் சுற்றியது.

அவர் மாங்கீரிலிருந்தபோது, ஆந்திராவில் தொட்டபள்ளி குன்றிலுள்ள சாந்தி ஆஸ்ரமத்தைச் சார்ந்த சுவாமி ஓங்கார்ஜி மகராஜ் தனது ஆசிரமத்துக்கு வருமாறு குருதேவருக்கு அழைப்பு விடுத்தார். குருதேவர் அந்த அழைப்பை உடனே ஏற்றுக்கொண்டு மாங்கீரிலிருந்து கல்கத்தா சென்றார்.

கல்கத்தாவில் கோவிந்தபவன் மற்றும் தென்னிந்திய பஜனை ஹாலில் கீர்த்தனை நிகழ்ச்சிகள் நடத்தி தென்னிந்திய மக்களையும் வடஇந்திய மக்களையும் திருப்திப்படுத்தினார். பிறகு கல்கத்தாவிலிருந்து சாந்தி ஆசிரமத்துக்கு விஜயம் செய்ய ஆந்திராவுக்குப் புறப்பட்டார். குருதேவர் சிந்தல்பூர், வெங்கடநகரம் ஆகிய கிராமங்களுக்கும் சென்று கீர்த்தனை செய்தார். லட்சுமி நரசாபுரம் மகாராணி, ஜமீந்தார் — கோத்தா வெங்கடரத்னம் ஆகியோரின் இடங்களிலும், உப்படா என்ற இடத்தில் கடற்கரையிலும் கீர்த்தனை நிகழ்ச்சிகளை நடத்தினார். குருதேவர் ஆந்திராவில் சுற்றுப்பயணம் செய்தது தொடர்பாக இரு சம்பவங்களை சுவாமி பரமானந்தர் நினைவு படுத்துகிறார். ஒன்று; குருதேவர் சாந்தி ஆசிரமத்திலிருந்து சென்ற பல நாட்களுக்குப் பிறகும் அந்தப் பகுதியில் ஓங்கார சப்தம் ஒலித்துக்

கொண்டிருந்ததை தம் காதுகளால் கேட்டதாக அந்தப்பகுதி கிராம மக்கள் கூறினர். மற்ெருரு சம்பவம் — பரமானந்தரே நேரில் கண்டது. குருதேவர் விஜயத்துக்குப் பின் அந்தப்பகுதி மக்கள் வயலில் உழுகிறபோதும், நாற்று நடுகிறபோதும் விதை விதைக்கிறபோதும் 'சீதாராம்' என்று ஜபம் செய்துகொண்டேயிருந்தனர்.

''குருதேவர் சாந்தி ஆசிரமத்தில் தங்கியிருந்த போது ஏழைகளுக்கு மருத்துவத் தொண்டு புரிந்தார். ''மருந்துப் பெட்டியை (chest) அவர் எப்போதும் தன்னுடன் வைத்திருப்பார். ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் தொண்டு செய்து அவர்கள் இன்னல் அகற்றும்போது குருதேவர் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிருர். அவரைப் பொறுத்தவரையில் அது மகாயோகம் என்று பரமானந்தர் கூறுகிருர்.

குருதேவர் சுற்றுப்பயணம் செய்தபோது நிகழ்ந்த மற்ெருரு சம்பவத்தை சுவாமி நாராயணுனந்தர் விளக்குகிருர்.

''சிகோஹாபாத்'' என்ற இடத்தில் ஒரு காளைமாடு நோயுற்று உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தது. குருதேவர் இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு கீர்த்தனை பாடினுர். காளை மாடு புத்துயிர் பெற்றுத் துள்ளி ஓடியது''.

## 25. பிரம்மாண்டமான ஆன்மீக விழிப்புணர்வுக் கூட்டங்களின் தொடக்கம்

குருதேவரைத் தரிசிக்க ஸ்வர்க்காஸ்ரமத்துக்கு வரும் மக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள்

அதிகரித்துக் கொண்டிருந்தது. சங்கீத மாநாடு களுக்கும், வேதாந்த மாநாடுகளுக்கும் தலைமை தாங்க வருமாறு மக்கள் வற்புறுத்திக் கொண்டே யிருந்தனர். குருதேவர் தொடர்ந்து சுற்றுப் பயணம் செய்தார். பஞ்சாப் மற்றும் காஷ்மீரத்து மக்கள் குருதேவரிடம் பெரு மதிப்புக் கொண்டிருந் தனர். குருதேவர் சுற்றுப்பயணம் செய்தபோது நடைபெற்ற நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டவர்கள் பிறகு சிவானந்த ஆசிரமத்துக்கு வருகை புரிந்த போது அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போது அவர்களிடம் குருதேவரின் சுற்றுப்பயணம் பற்றிக் கேட்டு அறிந்து கொண்டேன். அவற்றை இங்கு தொகுத்துத் தருகிறேன்:

காஷ்மீரத்தைச் சார்ந்த பேராசிரியர் ஒருவர், 1949 ஏப்ரல் 5-ந் தேதி ஆசிரமத்துக்கு வந்தார். காஷ்மீரில் கீர்த்தனை நிகழ்ச்சிகள் நடத்தச் சுற்றுப் பயணம் செய்தபோது இந்தப் பேராசிரியரைப் பார்த்ததாக குருதேவர் கூறினார். குருதேவரின் நினைவாற்றலைக் கண்டு வியந்த பேராசிரியர் பின்வருமாறு கூறினார்; ''சுவாமிஜி! தாங்கள் பாடிய (Agad-Bhum) பாடலையும், நடனத்தையும் நாங்கள் இன்னும் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறோம். அமைதியும், செல்வமும், வளமும் நிறைந்திருந்த அந்தக் காலகட்டத்துக்குப் பிறகு எவ்வளவோ சம்பவங்கள் நிகழ்ந்துவிட்டன. ஆயினும் நாங்கள் தங்களின் இனிய, பரவச மூட்டும் கீர்த்தனையை இன்னும் மறக்காமல் இருக்கிறோம். அப்போது நான் சிறுவனாக இருந்தேன். ஆயினும் இந்த விஷயம் மட்டும் இன்னும் பசுமையாக நினைவில் இருக்கிறது.

பேராசிரியரின் தந்தை தொடர்ந்தார், ''எவ்வளவு பிரம்மாண்டமான கூட்டம்! சுவாமிஜி!

என் வாழ்வில் அதற்குப் பிறகு அவ்வளவு பெரிய கூட்டத்தை நான் கண்டதேயில்லை'' ''ஆயிரக் கணக்கான பேர்கள் கூட்டத்தில் பங்குகொண் டிருப்பார்களா'' — இது எனது கேள்வி. 'ஆயிரக் கணக்கிலா? ஒரு நாளைக்கு பத்தாயிரம் பேருக்குக் குறையாமல் கலந்து கொள்ளுவார்கள். சுவாமிஜி கீர்த்தனை பாடுகிறபோது மக்கள் தலைகளை அசைப்பது, கடல் நீர் அலைகளாக இங்குமங்கும் அசைவதுபோல இருக்கும். அது தெய்வங்கள் காணவேண்டிய காட்சி'' — இது பேராசிரியர் தந்தை தந்த பதில்.

1949 செப்டம்பர் 24-ந் தேதி டேராடூன் தலைமை அஞ்சல் நிலைய அதிகாரி ராம் பியாரி திரிவேதி ஆசிரமத்துக்கு வந்தார். அவர் அலுவலகத்துக்குள் நுழைந்ததும் அவரை பைசாபாத் அஞ்சலக அதிகாரி என குருதேவர் அடையாளம் கண்டுகொண்டார். உடனே திரிவேதி, ''சுவாமிஜி உங்களுக்கு எவ்வளவு ஞாபகசக்தி! பதினைந்து ஆண்டுகளுக்கு முன் தாங்கள் பைசாபாத் வந்தபோது நாங்கள் தங்களை தரிசித்தோம். அப்போது தாங்கள் கூறிய அறிவுரைகளை நான் இன்னும் நினைவில் வைத்திருக் கிறேன். அப்போது கீர்த்தனை செய்யுமாறும், ஜபம் மற்றும் தியானப் பயிற்சியில் ஈடுபடுமாறும் தாங்கள் எங்களுக்கு அறிவுரை கூறினீர்கள். இதில் எங்களால் எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்குச் செய்து வருகிறோம் என்று கூறினார். பிறகு, திரிவேதியின் இல்லத்துக்கும் தான் சென்றதை குருதேவர் நினைவுபடுத்திக் கூறினார். உடனே திரிவேதி, ''ஆம் சுவாமிஜி, எங்கள் இல்லத்தில் தாங்கள் கீர்த்தனை செய்தீர்கள். அது இறைவனின் வரப்பிரசாதமாகும்.

1950 ஜனவரி 17-ந் தேதி ஆசிரமத்துக்கு விஜயம் செய்த குருதேவரின் சீடர் ஸ்ரீ தேஸ்ராஜ் சச்தேவ் தெரிவித்த சம்பவம் வருமாறு:

''1933-ல் நாங்கள் ஒரு சங்கீர்த்தன மாநாட்டை ராவல்பிண்டியில் நடத்த முயற்சி செய்து கொண்டிருந்தோம். அங்கு அப்பொழுது தான் எனது வேலையில் ஈடுபட்டிருந்தேன். கீர்த்தன் மண்டலி பற்றி மக்களுக்கு அவ்வளவாகத் தெரியாது. கீர்த்தனை மாநாடு நடத்த நிதி வசூல் செய்வதும் கடினமான காரியம். ஆயினும் எங்களில் இரண்டு, மூன்று பேர் தமது ஒரு மாத ஊதியத்தை இந்த மாநாட்டுச் செலவுக் காகக் கொடுக்கத் தீர்மானித்தோம். நாங்கள் சுவாமிகளையும் மற்றும் சிலரையும் மாநாட்டுக்கு அழைத்திருந்தோம். சுவாமிகள் அங்கு வந்தார் கள். ஒரே நாளில் ராவல்பிண்டி மக்கள் அனைவரின் உள்ளத்தையும் கவர்ந்துவிட்டார்கள்''.

மாநாடன்று பல இளைஞர்கள் இந்த மாநாட்டில் என்னதான் நடக்கிறது என்று காண ஆவலுடன் வந்திருந்தனர். 'சங்கீர்த்தனம் செய்வ தால் என்ன பயன்!' — சுவாமிகளின் உள்ளத்தை உருக்கும் அருளுரை இந்த கேள்விக்கு பதிலளித்தது. சுவாமிகளின் ஆங்கிலப் பேச்சை சுவாமி ஸ்வரூபா னந்தா ஹிந்தியில் மொழி பெயர்த்தார். சுவாமிஜி, பக்தி மற்றும் சங்கீர்த்தனம் பற்றி ஆங்கிலத்தில் பேசியது அனைவரையும் கவர்ந்தது.

''உடனே சுவாமிகள் 'சுனஜா சுனஜா சுனஜா கிருஷ்ணு; து கீதாவாலா ஞான சுனஜா கிருஷ்ணு' என்று பாடத் தொடங்கினர். அங்கு திரண்டிருந்த மக்கள் பேரானந்தப் பெரு வெள்ளத்தில் மிதந்தனர். சிறிது நேரத்தில் சுவாமிகள் நடன

மாடத் தொடங்கினர். அது கண்ணுக்கினிய காட்சி! அனைவரும் அவருடன் சேர்ந்து ஆடினர். சிறிது நேரத்துக்கு முன் சங்கீர்த்தனத்தில் நம்பிக் கையின்றி இருந்தவர்கள் கூட இப்போது பகிரங்கமாக சுவாமிகளுடன் சேர்ந்து ஒரே மேடையில் ஆடினர். இது ஒரு அற்புதம்.

பெண்களுக்காகத் தனியாக ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. சுவாமிகள் இங்கும் கீர்த்தனை செய்தார். இங்கு இடப்பொருத்தம் வாய்ந்த பாடல் ஒன்றைப் பாடியது குறிப்பிடத்தக்கது.

ஹரே கிருஷ்ண ஹரே ராமா ராதே கோவிந்த
சுப சுபே உட்டோ சார் பஜே
ஹரே கிருஷ்ண ஹரே ராமா ராதே கோவிந்த
ரோடி பனவோ ஹரே கிருஷ்ண போலா
ஹரே கிருஷ்ண ஹரே ராமா ராதே கோவிந்த
சர்கா கரோ ஹரே கிருஷ்ண போலோ
ஹரே கிருஷ்ண ஹரே ராமா ராதே கோவிந்த

சுவாமிகள் மனதில் நினைத்ததை குறிப்பால் உணர்த்தினர். பெண்கள் வீட்டில் எந்த வேலை செய்தாலும் மனதுக்குள் இறைவனின் பெயரை ஜபம் செய்ய வேண்டும். இதுதான் அவரது உபதேசம்.

''அதன் பிறகு தாலாட்டுப் பாட்டு. குழந்தை அழுகிறபோது அதனை சாந்தப்படுத்த பஞ்சாபில் விநோதமான ஒரு தாலாட்டுப் பாடலைப் பாடுவர். அந்த ராகத்தில் குருதேவர் புதிய பாடலைத் தந்தார். உலகியல் சம்பந்தமான சொற்களுக்குப் பதிலாக தெய்வீக வாழ்க்கையை நினைவு படுத்தும் சொற்களை சுவாமிகள் சேர்த்துப் பாடினர்.

ஜய சியா ராம் ஜய ஜய சியா ராம்
ஜய சியா ராம் ஜய ஜய சியா ராம்

''இந்தத் தாலாட்டுப் பாடலைப் பாடிய சுவாமிகள், தொட்டிலை ஆட்டுகிற பாவனையில் கைகளை முன்னும் பின்னும் அசைத்தார்.

எனது மகன் மேடைக்கு அருகில் நின்றான். அவனை மேடைக்குக் கொண்டு சென்றார். அவனுக்குப் பின்னால் நின்று கொண்டு,

ஜயகோவிந்த ஜய போல்
கேசவ மாதவ தீனதாள்

என்று பாடினார். அந்தப் பாட்டுக்கு ஏற்றவாறு பையனை ஆடச் செய்தார்.

''இவற்றின் மூலம் நமது பெண்களையும் குழந்தைகளையும் பண்படுத்தச் சிறந்த வழி முறையை சுவாமிகள் சுட்டிக் காட்டினார். அவர் எங்களுக்குப் பயிற்சி தந்தார். அத்துடன் நிற்க வில்லை. எங்கள் பெண்களையும் குழந்தைகளையும் நாங்கள் பயிற்றுவிக்கவும் எங்களுக்குப் பயிற்சி அளித்தார். அவரது போதனை பூரணமானது. அவரது பயிற்சி முறையானது.

## தனிச்சிறப்புமிக்க சிவானந்தர்

''மாநாடு மகிழ்ச்சிகரமாகவும் வெற்றிகர மாகவும் நிறைவுற்றது. நாங்கள் எதிர்பார்த் ததைவிட அதிகமான அளவில் நிதி வசூல் ஆகியது. செலவுக்கு அதிகமாகவே நிதி கிடைத்தது. பணக்கார ஜமீன்தார்கள் எங்களுக்கு உதவிட முன் வந்தார்கள். அனைவரும் பெருமகிழ்ச்சி அடைந் தனர். அது எங்கள் கண்ணால் கண்ட மிகச்சிறந்த அற்புத நிகழ்ச்சியாகும்''.

''இந்தச் சிறப்புக்கெல்லாம் காரணம் சுவாமிகள் ஒரு உண்மையான மகாத்மாவாக விளங்குவது தான். அவரைப் போன்றவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். மக்களைக் கவரும் வகையில் அவரிடத்தில் தெய்வீக காந்த சக்தி இருக்கிறது. வேறு எவரும் இதனைச் செய்ய முடியாது. படித்துப் பட்டம் பெற்ற பண்பாளராகிய சுவாமிகள் ஆங்கிலத்தில் சிம்ம கர்ஜனை செய்து சொற்பொழி வாற்றும் ஆற்றல் பெற்றிருந்தும் கீர்த்தனை செய்து ஆடிப்பாடுவதைக் காணுகிற நாத்திகர்களும்கூட கீர்த்தனை பற்றித் தாங்கள் கொண்டிருந்த தவறான எண்ணங்களை மாற்றிக்கொண்டு அவர்களும் சுவாமிகளுடன் கீர்த்தனையில் ஈடுபட்டு ஆடிப்பாடு கின்றனர்.

''ராவல்பிண்டியில் பணக்காரர்கள் சுவாமிகளைச் சூழ்ந்துகொண்டனர். ஆனால் சுவாமிகளின் விருப்பம் ஏழை எளிய மக்களுடன் கலந்துபேசி அவர்களிடம் அன்பு செலுத்துவதுதான். அவர் துப்புரவுப் பணியாளர்கள், மற்ற தொழிலாளர்கள் ஆகியோருடன் சகஜமாகப் பழகி அவர்களையும் கீர்த்தனைப் பாடல்களைப் பாடவைப்பார். இதுவும் ஒரு அரிய செயல். இக்காலத்தில் துறவிகள் பணத்தில் கவனம் வைத்து ஜமீன்தார்கள் விடுக்கும் அழைப்புக்கே செவிசாய்க்கிறார்கள்.

அவருடைய தனிச் சிறப்புக்கு தலையாய காரணமாக இருப்பது அவருடைய தலையாய ஒழுக்கம் தான். மற்றொரு சாதுவும் அடிக்கடி ராவல் பிண்டிக்கும், பஞ்சாபுக்கும் வருவார். சுவாமிகளைப் போல அவர் ஒழுக்கசீலராக இல்லை என மக்கள் கண்டறிந்து கொண்டு அவரைப் பின்பற்று வதை நிறுத்திவிட்டனர்''.

''ராவல்பிண்டியிலிருந்து சுவாமிகள் லாகூர், அமிர்தசரஸ் ஆகிய இடங்களுக்கும் பஞ்சாப், உ. பி. யில் உள்ள மற்ற இடங்களுக்கும் விஜயம் செய்தார்.

''பிறகு சில லாகூர் சீடர்கள் சங்கீர்த்தன மாநாடு ஏற்பாடு செய்தனர். சுவாமிகள் தலைமை வகிக்க வேண்டும் என விரும்பினர். ஆனால் குருதேவர் அந்த மாநாட்டுக்குச் செல்ல விரும்ப வில்லை. மறுத்துவிட்டார். ஆனால் லாகூர் பக்தர்கள் ரிஷிகேசம் வந்துவிட்டனர். சுவாமிகள் தம்முடன் புறப்படுகிறவரை அவரை விடப் போவதில்லை என்று விடாப்பிடியாக இருந்தனர். சிறிது நேரம் சுவாமிகள் பிடிவாதமாக இருந்தார். லாகூர் பக்தர்கள் சாகும்வரை உண்ணாவிரதம் இருப்போம் என்று எச்சரித்தனர். அவர்கள் சுவாமிகளிடம் கொண்டிருந்த அன்பும் சுவாமி களின் கீர்த்தனையைக் கேட்க பஞ்சாப் மக்கள் கொண்டிருந்த ஆவலும் அத்தகையதாக இருந்தது. இறுதியில் சுவாமிகள் சம்மதித்தார். பக்தர் களிடத்தில் அவர் கொண்டிருந்த கனிவு அத்தகைய தாக இருந்தது. ஆயுதத்தைக் கையில் எடுக்க மாட்டேன் என சபதம் செய்த இறைவன் பக்தர்களை திருப்திப் படுத்த வண்டிச் சக்கரத்தைக் கையில் எடுத்துக் கொண்டதை இச் சம்பவம் நினைவுபடுத்தியது.

''சுவாமிகள் எப்போதும் இப்படி இழுத்த இழுவைக்கு வருவார் என நினைக்கக் கூடாது. மகத் தான மன உறுதி படைத்த மகாத்மா அவர். ஒரு முறை அவர் ராவல்பிண்டியிலிருந்து ரிஷிகேசத் துக்குப் பயணம் செய்து கொண்டிருந்தார். அப் போது நான் லாகூரில் இருந்தேன். நான் அவரை ரயில் நிலையத்தில் சந்தித்தேன். அங்கு இறங்கி

என் வீட்டில் இரண்டு நாட்கள் தங்கிவிட்டுச் செல்லுமாறு கூறினேன். ஆனால் அவர் மறுத்து விட்டார். அவசரமாக ரிஷிகேசம் செல்ல வேண்டும் என்று கூறிவிட்டார். நீங்கள் என்னுடைய கீர்த்தனையை அந்த அளவுக்கு விரும்புவதாக இருந்தால், நீங்கள் ஏன் ரிஷிகேசம் வரக் கூடாது என்று சுவாமிகள் என்னிடம் கேட்டார். இந்தச் சொற்கள் இன்னும் எனது காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அப்பொழுதிலிருந்து தொடர்ந்து ரிஷிகேசம் வந்து கொண்டிருக்கிறேன்''.

## ஒற்றுமையின் தூதர்

குருதேவர் சுற்றுப்பயணம் மேற்கொண்டிருந்த ஆரம்ப நாட்களில் ஸ்ரீ சுவாமி ஸ்வரூபானந்தர் உடன் செல்லுவார். சுவாமிகள் 1948-ல் ஆசிரமத்துக்கு வந்திருந்தபோது சுற்றுப் பயணம் பற்றிய கருத்தைக் கூறுமாறு கேட்டோம். அப்போது அவர் கூறியதாவது:

''சியால்கோட் வாசியும், லாகூர் பாரத் பாங்க் லிமிடெட்டில் பணியாற்றியவருமான ஸ்ரீ வைஷ்ணதாஸ் சேகாரி, 1933ல் முதன்முறையாக குருதேவர் லாகூர் செல்லக் காரணமாக இருந்தவர். ஒரு சமயம் ஸ்வர்காஸ்ரம ஆனந்த குடீரத்தில் குருதேவரின் சத்சங்கத்தில் அவர் கலந்துகொள்ளும் பேறு பெற்றார். அங்கு ஹரிநாம சங்கீர்த்தனத்தில் அவர் தீக்ஷை பெற்றார். அப்போது ஸ்ரீ சேகாரிஜி லாகூர் சங்கீர்த்தன மண்டலின் கௌரவச் செயலாளர். அடுத்த ஆண்டே லாகூரில் சங்கீர்த்தன மாநாடு ஒன்றில் கலந்து கொள்ள சுவாமிஜி மகராஜ் அழைக்கப்பட்டார். லாகூரில் நடைபெற்ற முதல் சங்கீர்த்தன மாநாடு அது.

''சுவாமிகள் கேவல அத்வைத பரம்பரையில் வந்த ஆங்கிலந் தெரிந்த துறவி என்ற செய்தி பரவிவிட்டது. அவர் புதுமையான முறையில் சங்கீர்த்தனம் செய்கிறார் என்ற செய்தியும் பரவியிருந்தது. ஒவ்வொரு நாள் இரவு நிகழ்ச்சியில் சுமார் பத்தாயிரம் பக்தர்கள் கலந்து கொண்டனர். விசார் சாகர் சம்பிரதாயத்தைச் சார்ந்த ஆயிரக் கணக்கான பஞ்சாபிப் பெண்களும் நிகழ்ச்சியில் பங்கு கொண்டனர்.

''ஹரிநாமத்தின் புனித இனிய அலைகள் லாகூர் முழுவதும் நிறைந்திருந்தன. அதுவரை வைணவ பக்தர்களாக இருந்த — வைணவ சமயத்தைச் சார்ந்த ஆங்கிலம் தெரிந்த பஞ்சாபி இளைஞர்கள், வேதாந்த பரம்பரையில் வந்த சுவாமிகளின் கீர்த்தனைகளையும் ஆடல் பாடலையும் காணவும், கேட்கவும் ஆவல் கொண்டு வந்தனர். அத்வைத தத்துவத்தில் மேதையாகத் திகழும் ஒரு துறவி தனக்கேயுரிய முறையில் சங்கீர்த்தன மேடையில் ஆடிப் பாடுவதைக் கண்ட பஞ்சாப் மக்கள் வியப்புற்றனர். சுவாமிஜி இனிமையாக, ஆன்ம விழிப்புணர்வூட்டும் முறையில் ஆங்கிலத்திலும் மணிப்பிரவாள நடையிலும் பக்தி, ஞானம், யோகம் ஆகிய பொருளில் நிறையப் பாடல்களைப் பாடுவதுடன் பக்தி, ஞானம், யோகம் பற்றிச் சொற்பொழிவுகளும் நிகழ்த்தியது — அதுவரை சமயக் கூட்டங்களில் கலந்து கொள்ளாத படித்தவர்களையும் செல்வந்தர்களையும் கவர்ந்து இழுத்தது. லாகூரின் சேட், சாஹுகர், ஜமீன்தார், ராம் வகுப்புக்களைச் சார்ந்தவர்களும் ஆர்ய சமாஜம், தேவ சமாஜம், ராதா சுவாமி சம்பிரதாயம் ஆகியவற்றைச் சார்ந்தவர்களும் சுவாமிகளின் நிகழ்ச்சிகளில் பங்குகொண்டனர். முதலில் அவர்கள் நிகழ்ச்சியைப் பார்வையிட மட்டுமே வந்தனர்.

முதல் நாள் நிகழ்ச்சியிலேயே ஒரு வயதான ஆரிய சமாஜ அன்பரை சங்கீர்த்தன நிகழ்ச்சியில் பங்கு கொள்ள வைத்த சுவாமிகள், மேடையில் அவர் ஆடிப்பாடுமாறும் செய்தார். நவநாகரிக ஆடை அணிந்த ஒருவர் அடுத்த நாள் இதேமாதிரி நிகழ்ச்சியில் கரைந்து விட்டார். அவர் முதலில் ஆங்கிலம் தெரிந்த துறவியைக் கேலி செய்யவே வந்ததாகவும் ஆனால் நிகழ்ச்சிக்கு வந்த பின்தான் தீவிரமாக சங்கீர்த்தனம் செய்யும் அளவுக்கு மாற்றப்பட்டதாகவும் கூறினர்.

''லாகூரில் முதல் முறையாக பெருத்த எண்ணிக்கையில் அனைத்துப் பிரிவு மக்களும் ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் ஒரு பொது மேடையில் திரண்டிருந்தனர். அவர்கள் இரவு 12 அல்லது 1 மணி வரை விழித்துக்கொண்டிருந்தனர். மேடையிலேயே அவர்கள் உறங்கிவிட்டு மறுநாள் அதிகாலை பிரம்ம முகூர்த்தத்தில் (காலை 4 மணி முதல் 6 மணி வரை) சுவாமிகளின் இனிய குரலைக் கேட்கும் பொன்னான வாய்ப்புக்காகக் காத்திருந்தனர்.

## முறையான பணி

''சங்கீர்த்தன உலகின் சரித்திரத்தில் முதன் முறையாக லாங்கேமண்டி லக்ஷ்மி நாராயணர் திருக்கோயிலில் முதியவர்களும், இளைஞர்களும், பெண்களும், குழந்தைகளும் திருமணமானவர்களும், திருமணம் ஆகாதவர்களும் முறை வைத்துக் கொண்டு சங்கீர்த்தன மேடைக்கு வந்து ஆடிப்பாடினர். இதனை மக்கள், குறிப்பாக பக்தர்கள் கண்டு களித்தனர். ஆங்கிலம், ஹிந்தி, உருது ஆகிய மொழிகளில் அச்சிடப்பட்ட தலைமை உரையும் மற்றும் சிறு புத்தகங்களும் துண்டுப்

பிரசுரங்களும் சங்கீர்த்தன நிகழ்ச்சியில் விநியோகம் செய்யப்பட்டன. சுவாமிகள் தலைமையில் நடைபெற்ற அந்த சங்கீர்த்தன மாநாட்டில் மாலைகள் மற்றும் பிரசாதம் வழங்கப்பட்டது முக்கிய அம்சமாகும். லங்கேமண்டி பகுதியில் இரவு முழுவதும் இனிய ஹரிநாமமும் சங்கீர்த்தனத்தின் குரலும் ஒலித்துக் கொண்டே இருந்தன. பஞ்சாபி பக்தர்கள் சுவாமிகளை தரிசிக்க தேனீக்கள் போலத் திரண்டு வருவர். சுவாமிகள் ஒரு சில நிமிடங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளுவது என்பது இமாலய முயற்சி ஆகும்.

சுவாமிகள் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொள்ள அனுமதிக்குமாறு கேட்டுக் கொள்ளப் பட்டவர்கள், சுவாமிகளை தரிசிக்க விடாமல் அவரது சீடர்கள் தடுப்பதாகவும் அவர்கள் ரோஜா மலரில் உள்ள முட்களைப்போல இருக்கின்றனர் என்றும் சுவாமிகளிடமே கூறுவர். சுவாமிகளும் சிரித்துக் கொண்டே, கருணை வடிவமான இறைவன் ரோஜா மலரின் நன்மைக்காகத்தான் முட்களையும் படைத்திருக்கிறான் என்று கூறுவார்.

''இந்த அனைத்து மாநாடுகளிலும், லாகூரில் நடைபெற்ற மாநாட்டுக்கும் தாராளமாக பணம் செலவழிக்கப்பட்டது. லாகூர் முழுவதும் சுவாமிகளின் அருளுரைகளும், சங்கீர்த்தனப் பாடல்களும் ஒலித்துக் கொண்டே இருக்கும். லாகூரில் நடைபெற்ற சுவாமிகளின் எழுச்சிமிகு நிகழ்ச்சியினை அனைவரும் புகழ்ந்து பாராட்டினர் அது வெற்றிகரமாக நடைபெற்றதாகவும் மகிழ்ச்சியுடன் கூறினர். பிறகு சங்கீர்த்தன இயக்கம் பஞ்சாப் முழுவதும் பரவியது. அத்தகைய சங்கீர்த்தன மண்டலிகள் குறிப்பாக லாகூர் நகரத்திலும் பொதுவாக மாநிலம் முழுவதும் அமைக்கப்பட்டன.

''1935-ஆம் ஆண்டு பஞ்சாப் மாநில முதல் சங்கீர்த்தன மாநாடு லாகூரில் நடைபெற்றது. இந்த மாநாட்டில் உறுப்பினர்கள் அனைவரும் சாதனை குறித்து பல உறுதிமொழிகளை எடுத்துக் கொண்டு பல தீர்மானங்களை நிறைவேற்றினர். இதன்மூலம் அவர்களது பணிக்கு சாதனை வடிவம் கிடைத்தது. லாகூரில் உள்ள கில்லா குஜார் சங்கீர்த் தன மண்டல் அனைத்து சங்கீர்த்தன நடவடிக்கை களுக்கும் ஆதாரமாக இருந்தது. மதிப்பிற்குரிய கங்கா சரண்வர்மா அதன் தலைவர். அவரது முயற் சியின் விளைவாகத்தான் லாகூரில் 'டிவைன் லைஃப்' (Divine Life) பத்திரிகை தொடங்கப்பட்டது. கங்கா நிவாஸில் எப்பொழுதும் ஹரிநாம கீர்த் தனைகள் ஒலித்துக் கொண்டிருப்பதும், தெய்வீக வாழ்க்கைச் சங்கப் பணிகள் நடைபெறுவதும் அசாதாரணமான காட்சிகள் ஆகும். அது உண்மை யில் சுவாமிஜி இயக்கிய ஆன்மீகத் தொழிற்சாலை ஆகும்.

அடுத்த மாநாடு இன்னும் அற்புதமாக, சிறப்பாக நடைபெற்றது. அந்த மாநாட்டுக்கு வர இயலாது என சுவாமிகள் கூறியபோது அந்த மாநாட்டு அமைப்பாளர்கள் கங்கைக் கரையில் சாகும் வரை உண்ணாவிரதம் இருப்பதாக அச்சுறுத்தினர். இறுதியில் சுவாமிகள் அந்த மாநாட்டுக்குச் செல்ல ஒப்புக்கொண்டார்.

## மறக்க முடியாத சம்பவங்கள்

''அந்த மாநாட்டு மேடையில் சுவாமிகள் நிலையான தூய்மை மற்றும் பணிவு கலந்த சகஜ சாதனையுடன் ஸ்ரீ சுவாமி விஜயகிருஷ்ண கோஸ்வாமியின் முன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். ஸ்ரீ கோஸ்வாமி மகராஜ் அதிர்ச்சியும்

ஆச்சரியமும் அடைந்தார். இந்த ஆன்மீகக் கட்டளை எப்படித் திருப்பிச் செலுத்துவது என்று அறியாது உணர்ச்சிப் பெருக்கில் ஆனந்தக் கண்ணீர் உகுத்தார்.

"இந்த லாகூர் சங்கீர்த்தன மாநாட்டில் சுவாமிகள் சங்கீர்த்தன சமாதி நிலையில் இருந்ததைக் காணும் பேறு பஞ்சாபி பக்தர்களுக்குக் கிடைத்தது. சுவாமிகள் சமாதி நிலையில் நிமிர்ந்து நின்று தனது அருட் பார்வையை அங்கு கூடியிருந்த ஏராளமான மக்கள்மீது செலுத்தி சம்பவி முத்திரையுடன் தனது ஆன்மீக சக்தியின் தெய்வீக கதிர்களை அவர்கள் அனைவரிடத்திலும் செலுத்தி அவர்கள் பரவசநிலை அடையுமாறு செய்தார். அவர்களிற் சிலர் பாடினர், சிலர் அழுதனர். மற்றும் சிலர் முற்றிலுமாக உலக நினைவிழந்தனர். பூரண மௌனத்தைக் கடைப்பிடிக்கும் பாவ சங்கீர்த்தனத்தின்போது (Bhava-Sankirtan) ஆறு அல்லது ஏழு வயதுக் குழந்தை அவ்வப்போது அசாதாரணமாக பரவசநிலை அடைந்தது. இந்த அற்புத காட்சியை மாநாடு கண்டு களித்தது. மற்றொரு அசாதாரண சம்பவமும் அந்த மாநாட்டில் நிகழ்ந்தது. லூதியானாவைச் சார்ந்த சாவித்திரி தேவி தனது உடலைப்பற்றிய நினைவையே இழந்து விட்டார். சுவாமிகள் 'ஜய ஜய சீதா ராம்' என்ற கீர்த்தனையை உரத்த குரலில் பாடியதும் அந்த அம்மையாருக்கு மீண்டும் நினைவு வந்தது.

இறுதியாக 1936ல் சுவாமிகள் லாகூருக்கு விஜயம் செய்தார்கள். அப்போது அங்கு நடைபெற்ற மாநாட்டுக்கு வர இயலாது என சுவாமிகள் தெரிவித்திருந்தார்கள். அமைப்பாளர்களும் சுவாமிகளின் முழு உருவப் புகைப்படத்தை மேடையில் வைத்து மாநாட்டை நடத்த முடிவு

செய்தனர். ஆனால் சுவாமிகள் திடீரென்று அந்த மாநாட்டுக்கு விஜயம் செய்து லாகூர் மக்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தினார். சுவாமிகளின் வருகைக்கு இறையருளே காரணம் என லாகூர் மக்கள் கருதினர்.

## துடிப்பான செயலுக்கு அழைப்பு

ஸ்ரீ சுவாமி நாராயணானந்தர் தான் எழுதிய ''சிவானந்தர் — பரிபூரண குருநாதர்'' என்ற நூலில் குருதேவர் விஜயம் செய்த அனைத்து இடங்களையும் பட்டியல் போட்டுத் தந்திருக்கிறார். அந்த நூலில் குருதேவரின சுற்றுப்பயணம் சம்பந்த மான சில ருசிகரமான சம்பவங்கள் உள்ளன.

குருதேவர் ஆசிரமத் தோட்டத்துக்கும் ஸ்வர்காஸ்ரமத்துக்கும் செல்லுகிறபோது ஒரு மூட்டை புத்தகங்களையும் துண்டுப் பிரசுரங்களையும் எடுத்துச் செல்லுவார். இதனை நான் நேரில் கண்டிருக்கிறேன். குருதேவர் அகில இந்திய சுற்றுப் பயணம் செய்யப் புறப்படுவதற்கு முன்னதாக ஒரு உல்லாசப் பயணத்திற்கு ஏற்பாடு செய்திருந்தோம். அவருக்குப் பிடித்தமான கங்கைக் கால்வாய் பாதையில் இதற்கு ஏற்பாடு செய்திருந்தோம், வழியில் ஓரிடத்தில் குருதேவர் கீழே இறங்கி வழியில் சென்றவர்களுடன் பேசினார். பிறகு எங்களைப் பார்த்து, ''புத்தகங்கள்?'' என்றார். நாங்கள் புத்தகங்கள் எதுவும் எடுத்துச் செல்ல வில்லை. இதனை குரு தேவரிடம் தெரிவித்துவிட்டு, 'நாங்கள் குருதேவரை உல்லாசப் பயணத்திற்கு அழைத்து வரவே விரும்பினோம்' என்று கூறினோம். 'எனக்கு உல்லாசப் பயணம் தேவையில்லை. எப்பொழுதும் தொண்டுதான்' என்று குருதேவர் பதிலளித்தார்.

குருதேவர் சுற்றுப் பயணம் செய்யத் தொடங்கிய ஆரம்ப நாட்களில் அவர் ஒரு பெரிய பையில் மருந்துகளையும், துண்டுப் பிரசுரங்களையும் எடுத்துச் செல்வார் என்று நாராயண சுவாமிகள் கூறுகிறார். அந்தப் பை ஒரு சிறிய கடை. அதில் கத்தி, கத்தரிக்கோல், டேப், தீப்பெட்டி, மெழுகு வர்த்தி, கடிதம் எழுதும் தாள்கள், சிவப்புப் பென்சில் மற்றும் திடீரென்று தொண்டு செய்யத் தேவைப்படும் பிறபொருட்கள் ஆகியவை அந்தப் பையில் இருக்கும். ஒரு சமயம் குருதேவர் சின்ஹாய் மகாராணி திருமதி சூரத்குமாரி தேவி யுடன் லக்னேவுக்கு காரில் பயணம் செய்து கொண்டிருந்தார், வழியில் கார் பஞ்சர் ஆகிவிட்டது. கார் நின்றுவிட்டது. அப்பொழுது இரவு மணி பத்து. இருள் சூழ்ந்திருந்தது. வெளிச்சம் தேவைப்பட்டது. உடனே குருதேவர் தனது பையிலிருந்த மெழுகுவர்த்தியை எடுத்துப் பற்றவைத்து டிரைவரிடம் கொடுத்தார்.

குருதேவர் ஆரம்ப காலத்தில் கீர்த்தனை, சொற்பொழிவு நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டது போலவே பிற்காலத்தில் அவரது உடல்நிலை பாதிக்கப்பட்டபோதும் கலந்து கொண்டார். இதுபற்றி நாராயண சுவாமிகள் பின்வருமாறு கூறுகிறார்கள்: ''குருதேவர் ஒரு வேலையை எடுத்துக் கொண்டால் மழைக்கும் வெயிலுக்கும் அஞ்சுவ தில்லை. நெடுந்தூரம் கடும் வெயிலில் காலணி இன்றி நடப்பார். கடுமையான மழையிலும் நனைந்துகொண்டே சென்று கீர்த்தனை அல்லது சொற்பொழிவு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளு வார். அவர் பீஹாரில் சுற்றுப் பயணம் செய்தபோது நவி நகரிலிருந்து குடும்பாவுக்கும் பிறகு மீரட்டிலிருந்து பரிக்ஷித்கருக்கும் இவ்வாறு சென்றார். பரிக்ஷித்கரிலிருந்து அவர் மீரட்டுக்குத்

திரும்பும்போது கடுமையாக மழை பெய்தது. அவரிடம் இருந்த ஆடை இரண்டு துண்டுகள். இரண்டும் தொப்பென்று நனைந்துவிட்டன. ஆயினும் அவர் தொடர்ந்து நடந்து சென்றார். பொழுது சாய்ந்து இருள் கவ்வியது. அவர் எங்கும் ஓய்வு எடுத்துக் கொள்ளவில்லை. இரவில் உறங்க இடமும் இல்லை. அவர் ஒரு குக்கிராமத்தை அடைந்தபோது அங்கு ஒரு முஸ்லீம் அன்பர் வைக்கோல் போர்மீது படுத்து உறங்க அனுமதித் தார்''.

அவரை எதுவும் அச்சுறுத்தியதில்லை. எதுவும் அவரை பாதித்ததில்லை. அவர் இறைவனுடன் ஒன்றி இருந்தார். இறைவன் எப்போதும் அவருடன் இருந்தார். ''சிவானந்தர், மக்கள் கூட்டம் நிறைந்த லக்னோ, லாகூர் அல்லது கல்கத்தா தெருக்களில் நடந்து செல்லுகிறபோது தெருவில் என்ன நடக்கிறது என்று கவனிக்க மாட்டார். அவரது சிந்தனையெல்லாம் லட்சியப் பணியின்மீது இருக்கும். ஆனால் அவர் ஒருபோதும் இறைவனைப் பற்றிய எண்ணத்திலிருந்து விடுபட்ட தில்லை. அவர் எப்போதும் சகஜ நிர்விகல்ப சமாதி நிலையில் இருந்து வருகிறார்.

''குருதேவர் தனது சுற்றுப்பயண நிகழ்ச்சி களின்போது தன்னை எவரும் மக்களுக்கு அறிமுகம் செய்துவைக்க அனுமதிக்கமாட்டார். நிகழ்ச்சிக்கு எவரும் தலைமை வகிப்பதில்லை. சம்பிரதாயங்களை யெல்லாம் அவர் முறியடித்தார். அவர் ஒரு மாநாட்டுக்குத் தலைமை தாங்குகிற சூழ்நிலையிலும் பிரதிநிதிகளுடன் அமர்ந்து உரையாடுவார். மாநாட்டு முடிவில் அனைவர்க்கும் அவரே நன்றி நவில்வார். தனக்கு நன்றி சொல்ல எவரையும் அவர் அனுமதித்ததில்லை. சிறப்பு அழைப்பாளர் அனைவரையும் அவரே வரவேற்றார்.

தன்னை யாரும் மதிக்காவிட்டால் அவர் அது பற்றிக் கவலைப்படுவதில்லை. நிகழ்ச்சிகளுக்குச் செல்லுகிறபோது தேவையான ஏற்பாடுகளை சம்பந்தப்பட்டவர்கள் செய்யாவிட்டால் அவற்றைத் தமது சொந்தச் செலவில் செய்து கொள்ளுவார். எவர் மீதும் குறை கூறமாட்டார். இறைவன் திருநாமத்தைப் பரப்பும் லட்சியம்தான் எல்லாவற்றையும்விட முக்கியம் என அவர் கருதினார்.

மாநாடுகளின் வெற்றியை, லட்சியம் நிறைவேறுவதற்குச் சாதகமாக குருதேவர் பயன்படுத்திக் கொண்டார்.

டிசம்பர் 8-ந் தேதி அவர் எழுதிய கடிதத்தில் இத்தகைய மாநாடுகளின் அமைப்பாளர்களுக்கு அற்புதமான அறிவுரைகளை குருதேவர் வழங்கியிருக்கிறார்.

''உங்களது பணிகள்பற்றி எதுவும் எனக்கு எழுதாததால் எனக்கு விபரம் எதுவும் தெரியவில்லை. நீங்கள் யோகம் சம்பந்தமான பணி என்றும் களத்தில் இருக்கிறபோது கடிதப் போக்குவரத்து மிகவும் முக்கியம். பணி பூரணமாக நடைபெற — தேவைப்பட்டால் — இன்னும் சிறிதளவு பணத்தை முன்பணமாகத் தருமாறு நான் சேதுராம்ஜி அவர்களுக்கு எழுதியிருக்கிறேன். தத்துவ ரீதியாக பந்தலை அலங்காரம் செய்யுங்கள். இது விஷயத்தில் தங்களுக்கு என்னைவிட அதிகம் தெரியும். பந்தலில் சொற்பொழிவாற்ற ஆயத்தமாக இருங்கள். இது விஷயமாக தங்களுக்கு தகேதா முகவரிக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன். 'டிரிப்யூன்' 'டெய்லி ஹெரால்டு' ஆகிய பத்திரிகைகளில் 'ஆசிரியருக்குக் கடிதம்' பகுதியில் பின்வரும் விஷயத்தை எழுதவும் (இது விபரம் எனக்குத் தெரிவிக்கவும்). சத்தியநாராயண திருக்கோயிலில்

22, 23, 24 ஆகிய தேதிகளில் நடைபெறும் சங்கீர்த்தன மாநாட்டு நுழைவு வாயிலில் பக்தி, வேதாந்தம், யோகம், பிராணாயாமம், ஆசனம், சங்கீர்த்தனம் ஆகியவை குறித்து சுவாமி சிவானந்தரின் கருத்துக்கள் அடங்கிய அரிய புத்தகம் இலவசமாகக் கிடைக்கும். லாகூர் சங்கீர்த்தன சபைச் செயலாளர் அதில் கையொப்பமிட்டிருப்பார். ''பின்வரும் விஷயத்தையும் கடிதத்தில் சேருங்கள்'' ''சுவாமி சிவானந்தா, ஆனந்த குடில், ரிஷிகேசம் என்ற முகவரிக்கு ஒரு அணுவுக்கு தபால்தலை அனுப்பியும் இந்தப் புத்தகத்தைப் பெற்றுக் கொள்ளலாம்''.

## அடிப்படை விஷயங்கள்

டிசம்பர் 13ந்தேதி எழுதிய கடிதத்தில் நிகழ்ச்சி அமைப்பாளர்களுக்கு நிகழ்ச்சிகள் பற்றிய அறிவுரை தரப்பட்டுள்ளது.

''சேது ராம்ஜி விஷயத்தில் நான் சிறிதளவு மகிழ்ச்சியாக இருக்கிறேன். இதனை அவரிடம் தெரிவிக்கவும். தனிமேடையில் 3 நாட்களுக்கு அகண்ட கீர்த்தனை நடத்துவது மிக மிக அவசியம். இது பணியின் மிக முக்கிய அம்சம். சங்கீர்த்தனம் பலவேறு கேந்திரங்களில் நடத்தி சூழ்நிலை முழுவதிலும் மின் அலையினைப் போன்ற உணர்வினைத் தோற்றுவிப்பது மிகவும் அவசியம்.

குருதேவர் 1933ல் எழுதிய தனது கடிதத்தில் சங்கீர்த்தன நிகழ்ச்சி நடத்துவதில் பல புது முறைகளைக் கண்டு பிடித்திருப்பதாக எழுதியுள்ளார். அதில் அவர் எழுதியிருப்பதாவது :– ''சீதாபூர், லக்கிம்பூர் ஆகியவை ராம நாமத்துக்கு முன்னால் கல்வரத் தொல்லை எதுவும் செய்ய முடியாது.

சிறிதளவுகூட அஞ்சத் தேவையில்லை. ஸ்வரூபா னந்தர் சொல்வது செய்யப்பட வேண்டும். சங்கீர்த்தனைக் குழுவிற்கு அவர் மூத்த ஆலோசகர். அவர் ரொட்டியும் வெண்ணெயும் காலையிலும் இரவிலும் உட்கொள்ளுவார். எங்களுக்கு இனிப்புத் தேவையில்லை. 21ந் தேதி காலை உணவில் இவை இடம்பெற வேண்டும். இந்த வட்டத்தில் தாங் களும் எனது நண்பர்களில் ஒருவராக இருப்பீர்கள் எனக் கருதுகிறேன். எனக்கு ஒரு சாய்வு நாற்காலி யும் மூன்று கைவைத்த நாற்காலிகளும் அறையில் தேவைப்படும். பெண் தொண்டர்களும் பயிற்று விக்கப்பட்ட ஏராளமான ஆண் தொண்டர்களும் தேவை. ஸ்வரூபானந்தரின் யோசனைப்படி உறுதி மொழிப் பத்திரங்கள் அச்சிடப்பட வேண்டும்.

இந்தக் கடிதங்களுக்குக் கீழே குருதேவர் "தங்கள் பணிவுள்ள தொண்டன் — சிவானந்தா" என்று கையொப்பமிடுவார். சீடர்கள் குருநாதரை விடத் தாம் தாழ்ந்தவர்கள் என்று எண்ணுத அளவுக்கு அவர் பார்த்துக் கொண்டார். அவர்கள் தனது பணியில் தனக்கு உதவியாக இருந்து அதனைப் பகிர்ந்து கொள்ள இறைவனால் அனுப்பப்பட்டவர் கள் என்று அவர் கருதினர். ஆகவே குருதேவர்

---

பூலோக வைகுண்ட திருத்தலங்கள். நான் வீடுகளில் கீர்த்தனை செய்து வருகிறேன். நேற்று லக்கிம்பூர் இதுவரை கண்டிராத அளவில் 3000 பேருடன் பிரம்மாண்டமான கீர்த்தனை நிகழ்ச்சி நடத்தினேன். இன்று ஹரிஜனங்களுடன் கீர்த்தனை செய்கிறேன். நாளை 24 மணி நேரத்துக்கு அகண்ட கீர்த்தனை நடைபெற உள்ளது. அடுத்த நாள் நான் நகர கீர்த்தனையில் பங்கு கொள்வேன். கீர்த்தனை இயக்கம் மூலம் நீங்கள் இந்தியாவைப் புரட்சிகரமாக மாற்றி விடுவீர்கள். இந்தியாவுக்கு இது தேவை. இப்போது மறுமலர்ச்சி ஏற்பட்டு வருகிறது.

அவர்களுடன் உணவு உட்கொள்ளுவார். பக்தர்கள் தனக்கு சமர்ப்பணம் செய்த பழங்களை அவர் தமது சீடர்களுடன் பகிர்ந்து உண்பார். உண்மையில் முதற்பங்கு சீடர்களுடையது. சீடர்கள் தன்னைப் போல் சிறந்து விளங்க வேண்டும் என அவர் விரும்பினர். தன்னைப்போலவே அவர்கள் சொற் பொழிவுகள் நிகழ்த்த வேண்டும், கீர்த்தனை செய்ய வேண்டும் என்றும், ஆடிப்பாட வேண்டும் என்றும் அவர் விரும்புகிறார்.

லட்சியத்தைப் பரப்பும் தனது சீடன் எப்படி இருக்க வேண்டும் என்பதை குருதேவர் தெளிவாக விளக்கியுள்ளார். எதையும் சீராகச் செய்ய வேண்டும் என்பது அவரது சிறப்பான பண்பு. பரமானந்தர் சென்னையில் இருந்தபோது அவருக்கு குருதேவர் எழுதியுள்ள கடிதங்களில் இது பற்றி விரிவாகக் கூறுகிறார் :

## சீடரின் கடமை

1933 மார்ச் 4ல் குருதேவர் எழுதிய கடிதம் வருமாறு :

''நீங்கள் சென்னை மற்றும் அதன் சுற்றுப் புறத்தில் உள்ள உயர்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர் களைத் தொடர்பு கொண்டு அவர்களது கல்வி நிலையங்கள் பிரம்மச்சரியம், ஆசனம், பிராணு யாமம் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்த (செய் முறைப் பயிற்சிகளுடன்) ஏற்பாடு செய்யுமாறு கேட்டுக்கொள்ளுங்கள்.... பிரம்மச்சரியம் பற்றி நான் எழுதியுள்ள கட்டுரையைப் படிக்கலாம். அதனை மெதுவாக ஆனல் ஆணித்தரமாகப் படிக்க வேண்டும். விறுவிறுப்புடன் படிக்க வேண்டும். கேட்போரைப் பார்த்துக் கொண்டே படிக்க

வேண்டும். கட்டுரை நீளமாக இருப்பதாக நீங்கள் கருதினால் ஓரிரு பக்கங்களைப் படிக்காமல் விட்டுவிடுங்கள். இந்தப் பணியைச் செய்யத் தவறாதீர்கள். நான் சுற்றுப்பயணம் செய்தபோது 9 பள்ளிக்கூடங்களில் இந்த நிகழ்ச்சியை நடத்தினேன். இரவில் பல்வேறு இடங்களில் கீர்த்தனை அல்லது பஜனை நிகழ்ச்சிகளை நீங்கள் நடத்த வேண்டும். உங்களுக்குத் தெரிந்த நாமாவளிகள் இதற்குப் போதுமானவை. காலை அல்லது மாலை எனது கட்டுரைகளைப் படித்து விளக்கிச் சொல்லுங்கள். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைக் கொண்ட சிறு கூட்டத்தை நடத்துங்கள். இறுதியில் உங்கள் செய்தியைச் சொல்லுங்கள். ஓங்கார மந்திரத்தைச் சொல்லி நிகழ்ச்சியை நிறைவு செய்யுங்கள். இந்த மூன்று வகைப் பணிகளையும் செய்யுங்கள். அவ்வப்போது இந்த நிகழ்ச்சிகள் பற்றி தகவலை எனக்குத் தெரியப்படுத்துங்கள். பொருத்தமற்ற முறையில் சாக்குப்போக்குச் சொல்லாதீர்கள். மனந்தளராதீர்கள். மருந்துகளை வினியோகம் செய்யுங்கள்''.

1933 மார்ச்சு 8-ந் தேதி குருதேவர் எழுதிய கடிதம் அரிய ஆன்மீக விஷயம். இது பரமானந்தருக்கு மட்டும் சொல்லப்பட்டதல்ல; உங்களுக்கும் எனக்கும் சேர்த்துச் சொல்லப்பட்டது. பரம்பொருளை அறிந்து அனுபவிக்கத் துடிக்கும் அனைவருக்காகவும் சொல்லப்பட்டது. அது உண்மையில் சிவானந்த கீதை.

''நீங்கள் தொடர்ந்து முறையாக தியானம், ஜபம், பாராயணம் செய்யவேண்டும். 'நான் தனியாக உத்திரகாசியில் இருக்கும்போது நான் படிப்பேன்' என்று நினைக்காதீர்கள். அது தவறு, அது முட்டாள்தனம். உங்களுக்கு தினசரி பழக்கம்

இருக்கவேண்டும். 'அந்த நாள் ஒருபோதும் வரப் போவதில்லை'. காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளுங்கள். மனதை ஒருநிலைப் படுத்துங்கள். தியானம் செய்யுங்கள். சில மணிநேரம் தனிமையில் இருங்கள். பணிவாக இருங்கள். ஒருபோதும் முரட்டுத்தனமாக நடந்து கொள்ளாதீர்கள். சகிப்புத்தன்மையையும் பொறுமையையும் கடைப் பிடியுங்கள். இந்தப் பண்புகளை சொல்லிலும் செயலிலும் வெளிப்படுத்துங்கள். ஒவ்வொரு எண்ணத்திலும் விழிப்பாக இருங்கள். நாடகமல்ல. நீங்கள் பொறுப்பாக உடை அணிந்து கொண்டிருக்கிறீர்கள். இதனை நீங்கள் உணருகிறீர்களா? பிச்சை எடுக்காதீர்கள். பிச்சை எடுக்கிறோம் என்ற உணர்வுடன் எதையும் எவரிடமும் கேட்காதீர்கள். ஆணையிடுங்கள், அனைத்தும் கிடைக்கும். உலகம் முழுவதும் உங்கள் இல்லம். இதனை மனப்பூர்வமாக உணர்ந்து கொள்ளுங்கள். அவ்வப்போது உள்ள தகவல்களை கடிதம் மூலம் தெரியப்படுத்துங்கள். பணியில் ஒரு முறையும், கட்டுப்பாடும் அவசியம் தேவை. அந்தராத்மாவிடத்திலும், இறைவனிடத்திலும் முழுமையான நம்பிக்கை கொள்ளுங்கள். உங்களது நோக்கங்களை பரிசீலனை செய்யுங்கள். சுயநல நோக்கத்தை அழியுங்கள். மட்டமான அனைத்தையும் அழியுங்கள். உங்களது ஒவ்வொரு செயலிலும் தலையாய பண்பு வெளிப் படட்டும். சிறு சிறு விஷயங்களுக்குச் சண்டையிடாதீர்கள். புறங்கூறுவதையும், கதை கட்டுவதையும் விட்டுவிடுங்கள். தீய குணத்தை நற்குணமாக மாற்றவேண்டியது மிகவும் அவசியம்'' — சிவா.

லட்சியப் பணி வளரத் தொடங்கிவிட்டது. கருவிகள் கூர்மையாக்கப்பட்டு மெருகேற்றப் படுகின்றன.

# 26. முதல் இயக்கம்
## ஸ்வர்காஸ்ரம சாது சங்கம்

துறவிகளுடன் குருதேவர் நெருங்கிப் பழகியதால் அவர்களுக்குத் தொண்டு செய்ய அவசியம் இருப்பதை உணர்ந்தார். சாதுக்களுக்கு வழி காட்டுதல் தேவைப்பட்டது. அவர்களில் பலருக்கு ஆன்மீகத் துறையில் எவரும் வழிகாட்டவில்லை. அவர்கள் வைராக்கியம் காரணமாக வீட்டைவிட்டு வந்துவிட்டனர். ஆன்மீகத் துறையில் தம்மை வழி நடத்த ஒரு குருவை அவர்கள் தேடிக்கொள்ளவில்லை. தருமச்சாலைகளிலும், எவருடைய வழி காட்டுதலின்பேரில் ஒருவரை துறவி என ஏற்றுக் கொள்ளுவது அல்லது புறக்கணிப்பது என்ற பிரச்னை இருந்தது. இந்தச் சூழ்நிலையில் ஒரு இயக்கம் தேவைப்பட்டது. இந்தத் தொண்டினைச் செய்ய குருதேவர் முன் வந்தார்.

இதன்மூலம் இருவித லாபம் பெற குருதேவர் விழைந்தார். முதலாவதாக சாதுக்களுக்கு அங்கீகாரம் கிடைக்கிறது. இதன்மூலம் சாதுக்களிடமிருந்து கிடைக்கும் ஆதரவைப் பயன்படுத்தி, நான்கு சுவர்களுக்குள் இருக்கும் அவர்களை காலப் போக்கில் வெளியே கொண்டு வந்து அதைவிடப் பயனுள்ள பணியினைச் செய்யுமாறு தூண்டலாம்.

இந்த எண்ணங்கள் 'ஸ்வர்காஸ்ரம சாது சங்கத்தைத் தொடங்குமாறு அவரைத் தூண்டின. சாதுக்களுக்குத் தேவையான அனைத்தும் கிடைக்கும் என நிர்வாகம் சார்பாக குருதேவர் வாக்குறுதி அளித்தார். குருதேவர் தனது தொண்டின்மூலம் அவர்களின் நம்பிக்கையைப் பெற்றார். இப்போது குருதேவர் நிர்வாகத்தின் நன்மதிப்பையும்

பெற்றார். நன்றி உணர்வுடன், சாதுக்கள் குருதேவரையே தமது சங்கத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். நிர்வாகமும் இந்தத் தேர்தலை வரவேற்றது. ஏனெனில் குருதேவர் செய்கிற சிபாரிசு நியாயமானதாகவும், ஒப்புக்கொள்ளக் கூடியதாகவும் இருக்கும்.

ஸ்வர்காஸ்ரம சாது சங்கம் 1933 ஆகஸ்டு 24ல் தொடங்கப்பட்டது. 1933 அக்டோபர் 25ந் தேதி லக்னோவில் சங்கங்கள் பதிவுச்சட்டப்படி (1860 சட்டம் 21ன் படி) இந்த சங்கம் பதிவு செய்யப்பட்டது.

பல நகரங்களிலும், மாநிலங்களிலும் இறைவனின் திருநாமம் ஒலிக்குமாறு குருதேவர், செய்து வந்திருக்கும் பணியை இன்னும் விரிவாக இந்தச் சங்கம் செய்யவேண்டும் என குருதேவர் விரும்பினார். சங்கத்தின் நோக்கங்களில் இது தெளிவாக்கப்பட்டிருக்கிறது. இது குருதேவரின் வாழ்க்கை லட்சியம். அவரிடத்தில் ஆன்மீகச் செல்வம் இருந்தது. ஆர்வமுள்ள சாதகர்களும் இருந்தார்கள். விழிப்பூட்ட வேண்டிய மக்களும் இருந்தார்கள். இந்தப்பணியை திட்டமிட்ட ரீதியில் செய்யவேண்டும் என குருதேவர் விரும்பினார். லட்சியப்பணி நிறைவேற ஒவ்வொரு வாய்ப்பையும் குருதேவர் பயன்படுத்திக்கொள்ள விரும்பினார். ஸ்வர்காஸ்ரம சாது சங்கம் முதல் வாய்ப்பு.

இயக்கத்தின் பெயர் ஸ்வர்காஸ்ரம சாது சங்கம் என இருந்தாலும் விரைவில் குருதேவர் நிறுவவிருந்த தெய்வீக வாழ்க்கை சங்கத்துக்கு அதில் விதை ஊன்றப்பட்டது.

## இரண்டாவது துறவறம்

சிரத்தைமிக்க சாதகர்கள் தமக்கு ஆன்மீகத் துறையில் பயிற்சியளிக்குமாறு வேண்டுவர்.

ஆனால் 1931லேயே சிறுவயதில் உற்சாகத்துடன் துறவறம் நாடி வராதீர்கள் என எச்சரித்துள்ளார். "நான் ஒரு பொதுவான சாது. நான் உங்களுக்கு அதிகம் உதவ முடியாது. மேலும் நான் சீடர்களைச் சேர்த்துக் கொள்ளுவதில்லை. நான் எனது வாழ் நாள் முழுவதும் உங்கள் நண்பனாக இருக்க முடியும். நான் யாரையும் என் அருகில் நீண்ட நாட்கள் தங்க அனுமதிப்பதில்லை. நான் ஒரு சில மாதங் களுக்கு எனது மாணவர்களுக்கு பாடங்களை போதிக் கிறேன். பிறகு காஷ்மீர் அல்லது உத்தரகாசி போன்ற இடங்களில் தனித்திருந்து ஆன்மீகப் பயிற்சியில் ஈடுபட அவர்களைத் தூண்டுகிறேன்". ஆயினும் அவரது நிழலில் நிற்க பல இளைஞர்கள் வந்தனர். குருதேவரே தனது சுய சரிதையில் பின்வருமாறு கூறுகிறார் :- 1930 லிருந்து . . இந்த உலகுக்குத் தொண்டாற்ற நான் ஆவல் கொண்டி ருந்தேன். சில துறவிகளையும் யோகிகளையும் முறை யாகப் பயிற்றுவிக்க விரும்பி அவர்களை என் குடிலுக்கு அருகில் தங்க அனுமதித்தேன். தியா னத்தில் அவர்களுக்குள்ள சங்கடங்களைப் போக்க பயனுள்ள சில குறிப்புக்களைத் தந்தேன். இவ்வாறு அதிகமதிகமான அன்பர்கள் என்னை நாடி வந்தனர். ஸ்வர்காஸ்ரம நிர்வாகம், அதிகரித்துவரும் சாதகர் களின் எண்ணிக்கையைச் சமாளிக்க முடியவில்லை".

இந்தச் சூழ்நிலையில் குருதேவர் தான் 'நேசித்த தாகக்' குறிப்பிட்ட ஸ்வர்காஸ்ரமத்தை விட்டு வெளியேற வேண்டும். அல்லது தன்னை நாடி வந்துள்ள சீடர்களைக் கைவிட்டுவிட வேண்டும் என்ற நிலை உருவாகியது.

மனித குலத்துக்கும் ஆன்மீக சாதகர்களுக்கும் தொண்டு செய்வது என்னும் தனது குறிக்கோளுக்காக தான் செய்யும் எந்தத் தியாகமும் பெரிதல்ல என குருதேவர் கருதினார்.

குருதேவர் சுற்றுப் பயணத்தில் இருந்தபோது பிரச்னை எழுந்தது. அவருக்கு தகவல் தெரிவிக்கப் பட்டது. குருதேவர் மனத்தின் சமநிலை மாறாமல் ஜீவன்முக்தருக்குரிய இலக்கணத்துடன் நடந்து கொண்டார். அனைத்தையும் அமைதியாக உற்சாகத்துடன் எடுத்துக் கொண்டார். பரமானந்தருக்கு மீரட்டிலிருந்து கடிதம் எழுதினார். அஞ்சலட்டையில் தந்தி வாசகம்போல் எழுதப்பட்டிருந்த விஷயம் வருமாறு ;

1934 ஜனவரி 11ந் தேதி தங்கள் 10ந் தேதி கடிதம். ''கடவுளை நம்புங்கள். பிரார்த்தனை செய்யுங்கள். தீமையிலும் நன்மை விளைகிறது. எல்லாம் இறைவன் செயல். ஓம் சாந்தி சாந்தி. உங்கள் அனைவருக்கும் சக்தியும் அமைதியும் தந்து இறைவன் அருள் புரியட்டும்''.

குருதேவர் ஜனவரி 17ந்தேதி சுற்றுப் பயணத்திலிருந்து திரும்பி வந்தார். அன்றைய தினமே ஸ்வர்காஸ்ரமத்திலிருந்து வெளியேறி கங்கையின் வடகரையிலிருந்த ராமாஸ்ரமத்துக்குச் சென்று தங்கினார்.

விரைவில் நிகழ்ந்த சம்பவங்கள் குருதேவர் சொன்னது உண்மை என நிரூபித்தன. இதன் பயனாக அளவிட முடியாத நற்பயன்கள் விளைந்தன. அவற்றை அடுத்துவரும் பக்கங்களில் காணலாம்.

## 27. சிவானந்தாஸ்ரமம்

குருதேவர் பரமானந்தர், கிருஷ்ணனந்தா புரி, யோகி நாராயண மற்றும் ஸ்வர்ணகிரி ஆகிய நான்கு சீடர்களுடன் (இப்போதுள்ள சிவானந்தாஸ்ரமத்துக்கு அருகிலுள்ள) ராமாஸ்ரமத்துக்குச் சென்றார். பிரதான கட்டிடத்தில் நூலகத்திற்கு கிழக்கேயுள்ள ஒரு அறையில் குருதேவர் தங்கினார்.

ரிஷிகேசத்தில் உள்ள கம்ளிவாலா தருமச்சாலையிலிருந்து உணவு பெற்று வருவது ஒரு பிரச்னையாக இருந்தது. அந்த இடம் ராமாஸ்ரமத்திலிருந்து இரண்டு மைல் தொலைவில் இருந்தது. ரிஷிகேசத்துக்குச் செல்லுகிற பாதை இப்போதுள்ளதுபோல் முன்பு இல்லை. இரண்டு மாத காலமாக, கடும் வேகத்துடன் பாய்ந்து வரும் சந்திரபாகா நதியைக் கடந்து செல்லுவது உயிருக்கு ஆபத்தான வேலையாக இருந்தது. மீண்டும் இத்தனை தொல்லைகளையும் இறைவன் பணிக்காக அனுபவிக்க வேண்டியிருந்தது. பிறகு கிருஷ்ணனந்தர் குருதேவருக்கு உணவு பெற்றுவரச் சம்மதித்தார். பிறகு தருமச்சாலை நிர்வாகிகள், குருதேவரும் அவரது சீடர்களும் கஷ்டப்படுவதைக் கண்டு ஐந்து பேருக்குரிய சமைக்காத உணவுப் பொருட்களை மொத்தமாகக் கொடுத்துவிட முன்வந்தனர். இந்தச் சமயத்தில் சுவாமி ஸ்ரீ ஸ்வரூபானந்தரும் குருதேவருடன் சேர்ந்து கொண்டார். அண்மையில் மகாசமாதி அடைந்துவிட்ட ஓவியரான நாராயணனந்தர் உணவு சமைக்கும் பணியை மேற்கொண்டார்.

குருதேவர் டெஹ்ரி கார்வால் மன்னருக்குக் கடிதம் எழுதி, ஆசிரமம் கட்ட நிலம் தருமாறு வேண்டினார். மன்னர் உடனே நிலம் தந்தார்.

அத்துடன் இப்போது கைலாச மலைக் குடில்கள் இருக்கும் இடத்தில் அப்போது பயன்படுத்தப் படாமல் கிடந்த குடிசையையும் கொடுத்தார். இது குருதேவருக்கும் அவரது சீடர்களுக்கும் வரப் பிரசாதமாக அமைந்தது. அவர்கள் இந்தக் குடிசையை தங்குவதற்கும் பணியாற்றுவதற்கும் பயன்படுத்திக்கொண்டனர். இந்தப் பணிகள் நடைபெற்ற வேகம், குருதேவரின் தீவிரத் தன்மைக்கு உதாரணம். குருதேவர் ராமாஸ்ரமம் சென்றது 1934 ஜனவரி 17ந் தேதி. மன்னரிட மிருந்து நிலம் பெற்றது 1934 பிப்ரவரி 10ந் தேதி. குருதேவர் பரமானந்தருக்கு அன்றைய தினம் பின்வருமாறு எழுதினார், ''நமக்கு மேன்மைமிகு டெஹ்ரிவால் மன்னரிடமிருந்து நிலம் கிடைத்திருக் கிறது. ஆயுர்வேத மருத்துவ மனைக்கு எதிரில் உள்ள பழைய கட்டிடத்தையும் அவர் நமக்குக் கொடுத்திருக்கிறார். இது முன்னேற்றத்தின் அறிகுறி''.

குருதேவரும் சீடர்களும், தங்கவும் பணி புரியவும் குருதேவர் ஒரு இடம் தேடினார். ஆயினும் இச்சூழ்நிலை அவர்களை ரிஷிகேசம் நகருக்கு அனுப்ப முடியவில்லை. கவனிப்பாரற்றுக் கிடந்த ஒரு மாட்டுக்கொட்டகையை குருதேவர் கண்டார். அது அவருக்கு ஒரு அரண்மனை. அதில் நான்கு அறைகள் இருந்தன. அவர் அதனை முழுமையாகத் துப்புரவு செய்துவிட்டு அங்கு தங்கினார். 1934 மார்ச் 28-ந் தேதி அவர் பின்வருமாறு எழுதினார் :

''நான் இப்போது நான்கு அறைகள் உள்ள சிறு குடிலில் வசிக்கிறேன். ஸ்ரீ சுவாமி ஆத்மானந் தரும் என்னுடன் தங்குவார்''.

பெரிய இயக்கத்தை இயக்கிய சிறிய குழு இது. ஒரு அறையை குருதேவர் தான் தங்கவும், தனது அலுவலகமாகவும் பயன்படுத்திக் கொண்டார். மற்றொரு அறை மருத்துவமனையாகப் பயன் படுத்தப்பட்டது. மற்ற இரு அறைகளும், குன்றில் உள்ள அறையும் சீடர்களால் பயன்படுத்திக் கொள்ளப்பட்டன.

குருதேவரைக் காண பக்தர்கள் திரளாக வந்து கொண்டிருந்தபடியால் அதிக இடவசதி தேவைப் பட்டது. கட்டிடங்கள் கட்டப் பணம் வேண்டும். குருதேவர் உணவுக்கே பணம் செலவிடமாட்டார். ஆகவே கட்டிடம் கட்டப் பணம் செலவிடுவது என்பது கேள்விக்கு அப்பாற்பட்ட விஷயம்.

அவர்கள் இன்னும் சில மாட்டுக் கொட்டகை களைக் கண்டனர். அவை சுத்தம் செய்யப்பட்டு தெய்வீக வாழ்க்கைப் படை அங்கு தங்க ஏற்பாடு செய்யப்பட்டது. ஆரம்பத்தில் மாடு மேய்க்கும் ஒருவர் அங்கு தங்கியிருந்தார். பிறகு அவரும் அங்கிருந்து போய்விட்டார்.

## சாதகர்களின் ஸ்வர்க்கம்

பரம்பொருளை அறிந்து அனுபவிக்கத் துடிக்கும் தீவிர சாதகர்கள் குருதேவரைத் தமது குருநாத ராக ஏற்றுக்கொண்டனர். அவர்கள் அடிக்கடி ரிஷிகேசம் வந்து குருதேவரை தரிசித்தனர். அவர் கள் டெஹ்ரி மன்னர் தந்துள்ள நிலத்தில் கட்டிடம் கட்டித்தர முன்வந்தனர். அத்தகையவர்களில் முதன்மையானவர் இப்போது எங்களுடன் மகிழ்ச்சி யாக இருக்கும் ஹரி ஓமானந்தா மகராஜ். இந்தத் திருப்பணியில் ஈடுபட முன் வந்த மற்றொரு பக்தை. ரயில்வே இலாகாவில் உயர் அதிகாரியாகப் பணி

யாற்றிய ஒரு அன்பரின் துணைவியாராகிய திருமதி ஆர். லால், இந்த ஒத்துழைப்புக்களுடன் குருதேவர் யோக சாதனைக் குடில்களைக் கட்டினார்.

மற்றும் சில பக்தர்களும் இவ்வாறு குடில்களைக் கட்ட முன்வந்தனர். தாம் குருதேவரை தரிசிக்க வரும்போது தங்க வசதியாக இருக்கும் என அவர்கள் எண்ணினர். இதில் மற்றொரு நற்பயனும் இருந்தது. அவர்கள் குருதேவரை தரிசித்து விட்டுச் சென்றபின் அந்தக் குடில்களில் துறவி களாக உள்ள சீடர்கள் தங்கலாம்.

குருதேவர், செங்கற்களையும் சுண்ணாம்பையும் கொண்டு கட்டிடம் கட்டுவதைவிட மனிதர்களைத் துறவிகளாக ஆக்குவதுதான் சிறப்பான பணி எனக் கருதினார். அதிலிருந்து சிவானந்த ஆசிரமத்தில் பல குடில்களை பக்தர்கள் கட்டினர். அவர்கள் தங்கிய நாட்கள் தவிர மற்ற நாட்களில் அந்தக் குடில்களில் ஆசிரமவாசிகள் தங்கி வருகின்றனர்.

கங்கைக் கரையில் குடில்களைக் கட்டுவதில் அனைவரும் நாட்டம் கொள்ளுவதை கவனித்த குருதேவர் அவர்களை ஊக்குவித்தார்.

பணியிலிருந்து ஓய்வு பெற விரும்பும் சாதகர் கள் தமக்காக ஆசிரமத்தில் ஒரு குடில் கட்டிக் கொள்ள விரும்பினர்.

சிறிது காலத்தில் பஜனை மண்டபம் கட்டப் பட்டது. இதற்காக கல்கத்தாவில் ஸ்ரீ மீனாக்ஷி மோரே தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டி ருந்தது. பக்தர்கள் இத்திருப்பணிக்கு தாராளமாக ஒத்துழைப்பு நல்கினர். 1942ல் பஜனை மண்டபம் கட்டிப் பூர்த்தி செய்யப்பட்டது. முக்கியமான

நிகழ்ச்சிகள் அனைத்தும், குறிப்பாக சாதனு வார நிகழ்ச்சிகள் இந்த மண்டபத்தில் நடைபெற்று வருகின்றன.

இந்த மண்டபம் 1942 ஏப்ரல் 2ந் தேதி முறையாகத் திறந்து வைக்கப்பட்டது.

குருதேவர் பிரம்மானந்த ஆசிரமத்தில் தங்கியிருந்தபோது இப்போது சிவானந்தாஸ்ரமத்தில் விசுவநாதர் திருக்கோயில் அமைந்துள்ள இடத்துக்கு குருதேவர் அடிக்கடி செல்லுவார். அங்கு இருக்கும் வில்வ மரங்களிலிருந்து வில்வத்தை எடுத்து மானசீகமாக சிவ பெருமானுக்கு அர்ப்பணம் செய்வார்.

பஜனை மண்டபம் கட்டி முடிக்கப்பட்டவுடன் விசுவநாதர் திருக்கோயில் திருப்பணி மேற்கொள்ளப்பட்டது. மிசார் கோவிந்த பை அழகிய முரளி மனோகர் விக்கிரகத்தையும், பம்பாயைச் சார்ந்த திரு. எச், எம். மேத்தா பகவான் ஸ்ரீ ராமர், லக்ஷ்மணன், சீதை, அனுமன் ஆகியோரின் விக்கிரகங்களையும் அனுப்பி வைத்தனர்.

குருதேவரின் சத்சங்கல்பம் இவ்வாறு நிறைவேறி விசுவநாதர் திருக்கோயில் உருவாகியது. அதன் மகா கும்பாபிஷேகம் 1943 டிசம்பர் 31-ந் தேதி காலை 11-30 மணிக்கு நடைபெற்றது.

இதற்கிடையில் குருதேவர் 1941-ல் சிறிது காலம் ஆசிரமத்தில் இல்லை. பிறகு குருதேவர் திரும்பி வந்ததும் குருதேவர் பயன்படுத்த ஒரு குகை—கைவல்ய குகை—கட்டப்பட்டது.

வைர விழா ஆண்டில் வைர விழாக் கட்டிடம் கட்டப்பட்டது. அப்போது ஆசிரமம் முழுவதும் பரவியிருந்த ஆசிரம அலுவலகம், இந்தக் கட்டிடத்தில் செயல்படத் துவங்கியது. அதில் குருதேவரின் அலுவலகமும் அமைந்தது. பிறகு அஞ்சலகம் தற்போதுள்ள அறைக்கு மாற்றப்பட்டது. வைர விழா ஆண்டில் (1947) கங்கைக் கரையில் விசுவநாத கூட்டம் பொங்கிப் பெருகியது. மேலும் மூன்று குடில்களை உள்ளடக்கிய ஒரு கட்டிடம் இந்த ஆண்டில் கட்டப்பட்டது. இந்த ஆண்டில் தீவிரமாகப் பணிகள் நடைபெற்றன. பணி அளவிட முடியாத அளவுக்கு வளர்ச்சி அடைந்தது. குருதேவரின் புகழ், உலகின் நான்கு திசைகளிலும் பரவியது. மக்கள் குருதேவரின் விருப்பத்தை நிறைவேற்ற மகிழ்ச்சியுடன் முன் வந்தனர்.

குருதேவரின் அகில இந்திய சுற்றுப் பயணத்திற்குப் பிறகு ஏராளமான பக்தர்கள் ஆசிரமத்துக்கு வந்தனர். அவர்கள் தங்குவதற்கு மேலும் பல குடில்கள் தேவைப்பட்டன. அருகிலிருந்த அறைகளெல்லாம் வாடகைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. இவ்வாறு ஆசிரமம் ஒரு நகரமாக—சிவானந்த நகரமாக உருவெடுத்தது.

சீடர்களின் உன்னதமான குருபக்தியின் விளைவாக சிவானந்த ஆசிரமத்தில் சிவானந்த மந்திர் கட்டப்பட்டது. இது முழுவதும் சலவைக் கற்களால் கட்டப்பட்டு குருதேவரின் உருவச்சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்தத் திருப்பணிக்கு செகந்தராபாத்தைச் சார்ந்த திரு. ரமேஷ் முதன் முதலில் நன்கொடை வழங்கினார். இந்தத் திருக்கோயில் பவள விழா சமயத்தில் (1956 செப்டம்பர் 8) ஹைதராபாத்தைச் சார்ந்த

திருமதி ராணி சிவானந்தா — குமுதினி தேவி அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

ஆசிரமத்தில் கடைசியாக எழுப்பப்பட்ட நினைவுச் சின்னம், மகத்தான சிவானந்தர் நினைவுத் தூண் ஆகும். இதில் வாழ்க்கையைச் செம்மைப் படுத்த, குருதேவர் அருளிய உபதேசங்கள் பொறிக் கப்பட்டுள்ளன. சென்னையைச் சார்ந்த திரு. டி. ஏழுமலை மற்றும் பிற பக்தர்கள் இதற்கு நன்கொடை அளித்தனர். 1958 மே 23ந் தேதி திரு. ராஜா ராமதேவ் ராவ் அவர்களால் இது திறந்து வைக்கப்பட்டது.

இது சிவானந்த ஆசிரம வளர்ச்சியைப் பற்றிய கண்ணோட்டம்.

இந்தக் கட்டிடங்களையும், திருக்கோயில்களையும், நினைவுச் சின்னங்களையும் கட்டப் பலர் நன்கொடை வழங்கியுள்ளனர். ஆனால் இந்தப் பணிகள் சிறப் பாக நிறைவுறுவதற்குக் காரணமாக இருந்தது, குருதேவரின் அருளாசியும், பணியில் ஈடுபட்டவர் களை அவர் ஊக்குவித்ததும்தான்.

விசுவநாதர் திருக்கோயில் கட்டப்பட்ட பொழுது குருதேவர் தனது தலையில் செங்கற்களைச் சுமந்து சென்றது குறிப்பிடத்தக்கது.

1944ல் ரிஷிகேசத்தில் ஹரித்வார் சாலையில் உள்ள 'விசுவநாத் பாக்' (பூங்கா வீடு) தெய்வீக வாழ்க்கைச் சங்கத்துக்காக வாங்கப்பட்டது. ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தர் அதில் ஒரு குடிலும் குகையும் கட்டினார். ஸ்ரீ சுவாமி சங்கரானந்தர் பிற்காலத்தில் அதனை காய்கறி மற்றும் பூந்தோட்ட மாக மாற்றியதுடன் அங்கு அனைத்து அறைகளையும் மாற்றி அமைத்து, அழகான கட்டிடமாக ஆக்கினார்.

## 28. தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

இயக்கம் மூலம் மனித குலத்துக்கு மகத்தான தொண்டு செய்ய முடியும் என்பதை ஸ்வர்காஸ்ரம சாது சங்கத்தின்மூலம் குருதேவர் புரிந்துகொண்டார். குறிக்கோள், ஆன்மீக ஞானத்தைப் பரப்புவதும், சாதகர்களுக்கு யோகம் மற்றும் வேதாந்தத்தில் பயிற்சி அளிப்பதும்தான். குருதேவரும் ஸ்வரூபானந்தரும் பஞ்சாப் சுற்றுப்பயணத்திலிருந்து 'திரும்பியபோது ரயிலில் இது பற்றி விவாதித்துக்கொண்டே வந்தனர். ரயில் அம்பாலா ஸ்டேஷன் அருகில் வந்தபோது ஒரு முடிவு எடுக்கப்பட்டுவிட்டது. ரயில் நிலையத்தில் குருதேவரை தரிசிக்க ஏராளமான அன்பர்கள் கூடியிருந்தனர். அவர்களில் ஒருவர் வழக்கறிஞர். ஒரு ஸ்தாபனத்தை நிறுவ வேண்டும் என்ற எண்ணத்தை குருதேவர் வழக்கறிஞரிடம் தெரிவித்தார். இதற்காக ஒரு அறக்கட்டளையை நிறுவவேண்டும் என்றும் அதற்கு அறக்கட்டளை விதிமுறைகள் (Trust Deed) தேவைப்படும் என்றும் வழக்கறிஞர் கூறினர். குருதேவர் சிறிதும் தயங்கவில்லை. 'அதனை இப்போதே செய்து விடுவோம்' என்று கூறி தொடர்ந்து பயணம் செய்யாமல் அன்று அம்பாலாவில் தங்கினர். அன்றைய தினமே 1936 ஜனவரி 13ந்தேதியே — அறக்கட்டளை விதிமுறைகள் உருவாக்கப்பட்டன. பிறகு அது அம்பாலா கன்டோன்மென்டில் பதிவு செய்யப்பட்டது.

அறக்கட்டளை உறுப்பினர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. குருதேவரின் லட்சியப் பணியில் இணைந்துகொள்ள விரும்பியவர்களின் எண்ணிக்கை ஏராளம். ஆகவே, குருதேவர் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தை (The Divine Life Society) நிறுவினர்.

தெய்வீக வாழ்க்கைச் சங்கம் 1939 ஏப்ரல் 16-ந் தேதி லாகூரில் 1860-ம் ஆண்டு சங்கங்கள் பதிவுச் சட்டம் 21ன்படி (Under the Societies Registration Act of 1860) பதிவு செய்யப்பட்டது.

தெய்வீக வாழ்க்கைப் பாதையில் இறையனுபவம் பெறும் வழியில் அனைவரையும் வழி நடத்திச் செல்லுவதுதான் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் நோக்கம்.

சாதகர்களுக்குத் தொண்டு செய்யவும், அவர்கள் ஆத்மஞானம் பெற உதவவும் இச்சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. குருதேவரும் அவருடன் இணைந்து பணியாற்றியவர்களும் தன்னலமற்ற தொண்டினைக் குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றினர். அவர்கள் உன்னதத் துறவறத்தின் திருவுருவங்கள். குருதேவருக்கு இந்த உலகிலிருந்து எதுவும் தேவைப்படவில்லை. குருதேவர் எந்த இறைவனுடன் ஒன்றியுள்ளாரோ அந்த இறைவனின் சிறப்பான கருணைதான் தெய்வீக வாழ்க்கைச் சங்கமாக வடிவம் பெற்றுள்ளது. இதனை நாம் ஒருபோதும் மறக்கக் கூடாது.

## லட்சியம் பரவுகிறது

தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் கிளைகள் தொடங்கப்பட்டன. இந்தியாவில் முதல் கிளை மாங்கீரில் தொடங்கப்பட்டது. வெளி நாட்டில் முதல்கிளை லட்வியாவில் துவக்கப்பட்டது. குருதேவரின் சீடரும் மேற்கு நாடுகளின் மகத்தான யோகியும் 'யோக சக்கரவர்த்தி' என்ற நூலின் ஆசிரியருமான யோகிராஜ் ஸ்ரீ ஹாரி டிக்மென் துவக்கினர்.

குருதேவர் கங்கைக் கரையில், தனித்துள்ள ஒரு குடிலில் அமர்ந்துகொண்டு தனது பரந்த உள்ளம் காரணமாக உலகம் முழுவதும் வாழும் மக்களின் உள்ளங்களில் ஒளி பரவச் செய்தார். கங்கைக் கரையில் அமர்ந்துகொண்டு உலகம் முழுவதும் வாழும் மக்களின் பிரச்னைகளைப் புரிந்து கொண்டார். அவர்களை நேரில் பார்க்காமலேயே அவர்களுக்கு நல்வழி காட்டினார். குருதேவர் கங்கைக் கரையில் அமர்ந்துகொண்டு உலகம் முழுவதும் தனது சீடர்கள் சங்கத்தின் கிளைகளைத் தோற்றுவிக்க வழிகாட்டினார். அவர்கள் மத்தியில் தான் இருப்பதாக அவர்கள் உணருமாறு செய்தார். 1936ல் துவங்கப்பட்ட தெய்வீக வாழ்க்கைச் சங்கம் இன்று மகத்தான வளர்ச்சி பெற்றிருப்பதற்குக் காரணம் குருதேவரின் தெய்வீக ஆற்றல்தான். பம்பாயைச் சார்ந்த திரு. எம். எம். மெஹ்ரா, பி. ஏ., எல். எல். பி. என்பவர் ஒரு தெய்வீக மனிதரைத் தவிர வேறு எவரும் இத்தகைய ஸ்தாபனத்தை நிர்வாகம் செய்ய முடியாது என்றார்.

ஓராண்டில் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் பல கிளைகள் உலகம் முழுவதும் தொடங்கப் பட்டன.

கிளைகள் சாதனைப் பயிற்சி வகுப்புக்களையும், மாநாடுகளையும் நடத்தின. முக்கியமான விழாக் களை நடத்தின. குருதேவரின் உபதேசங்கள் அடங்கிய பிரசுரங்களை அச்சிட்டு வினியோகம் செய்தன. அவை 'ஆனந்த குடிலி'ன் சிறு வடிவங் களாகத் தோற்றமளித்தின.

அவ்வாறு ஆரம்பத்தில் தொடங்கப்பட்ட கிளை களில் ஒன்றாகிய லாகூர் ஜில்லா குஜ்ஜார்சிங் கிளை

தனது முதல் ஆண்டில் ரிஷிகேசத்தின் சிவானந்தர் நூல்கள் வெளியீட்டுப் பிரிவு ஆசிரமத்தின் அனைத்து வெளியீடுகளையும் அச்சிட்டு வெளியிடப் பொறுப்பேற்றுக் கொள்ளுவதற்கு முன்னதாக 'தி டிவைன் லைஃப்' என்ற பத்திரிகையை நடத்தி வந்தது. அதன் முதல் ஆசிரியர் குருதேவர், முதல் பதிப்பாளர் லாகூரின் திரு. எல். உல்பத் ராய் வர்மா, பி. ஏ.

## சிவானந்த ஜயந்தி

சங்கம், உலகத்தின் அனைத்து மதங்களையும் சார்ந்த எல்லா மகான்களின் பிறந்த நாள் விழாக்களையும் சிறப்பாகக் கொண்டாடியது. குருதேவரின் சீடர்களும், பக்தர்களும் குருதேவரின் பிறந்த நாளை மிகச் சிறப்பாகக் கொண்டாடினர்.

## கிராமபோன் ரிகார்டுகள்

லட்சியப் பணி தீவிரமாக நடைபெற்று எங்கும் பரவியது. சிவானந்தர் ஜெயந்தி உலக நாட்காட்டியில் நிரந்தரமாக இடம் பெற்றது. 1940-ஆம் ஆண்டு மனித குலத்துக்கு மற்றொரு வரப் பிரசாதத்தை அளித்தது.

1940 அக்டோபரில் குருதேவர் தனது அருள் வாக்கை கிராமபோன் ரிகார்டில் பதிவு செய்ய கல்கத்தாவுக்கு வந்தார்.

13 ரிகார்டுகள் தயாரிக்கப்பட்டன. குருதேவர் 1940 நவம்பர் 13-ல் ஆசிரமத்துக்குத் திரும்பி வந்தார்.

1944-ல் குருதேவர் பம்பாய் சென்றபோது மேலும் பத்து கிராமபோன் ரிகார்டுகள் தயாரிக்கப்

பட்டன. பம்பாயில் சொலிஸிடார் திரு. எச். எம். மேத்தாவின் சிறப்பு விருந்தினராக குருதேவர் தங்கியிருந்தார். திரு. மேத்தா குருதேவரிடத் திலும், மகாத்மா காந்தியடிகளிடத்திலும் மிகுந்த பக்தி கொண்டிருந்தார்.

குருதேவரின் சொற்கள் எழுத்திலும், ஒலி யிலும் பதிவாகின. இப்போது அவரது தெய்வீகத் திருவுருவம் பற்றிய பணி.

1949 பிப்ரவரி 25-ந் தேதி மகா சிவராத்திரி அன்று குருதேவர் சிவானந்தர் ஆர்ட் ஸ்டுடியோ வைத் திறந்து வைத்தார்.

குருதேவரின் லட்சியப் பணிக்கு இந்த ஸ்டுடியோ உதவியாக இருப்பதைச் சொற்களால் விவரிக்க முடியாது. இந்த ஸ்டுடியோ குருதேவரின் வாழ்க்கை வரலாற்றைப் படம் பிடித்தது. குருதேவரின் ஹடயோக சீடர்களின் யோக ஆசனங்கள், கிரியை, பிராணயாமம் ஆகியவற் றையும் படமாக்கியது.

லண்டன், ஆஸ்திரேலியா மற்றும் ஜெர்மனியில் உள்ள யோகப் பயிற்சிப் பள்ளிகளில் இந்தத் திரைப்படங்கள் உள்ளன. ஆசிரமத்துக்கு வருகிறவர்கள், குருதேவர் இன்னும் ஒரு சிறுவன் போல குதிப்பதையும், பாடுவதையும், ஆடுவதை யும், வாழ்த்துவதையும், நீச்சலடிப்பதையும், பிரமுகர்களுடன் பேசுவதையும் காணலாம். ஸ்டுடியோவில் குருதேவரின் படங்களும் மற்ற உண்மைத் தகவல்களும் பாதுகாத்துவைக்கப் பட்டுள்ளன.

## சிவானந்தரின் மருத்துவ இயக்கம்

குருதேவர் உபதேசம் செய்ததுடன் நிற்க வில்லை. சாதகர்கள் தெய்வீக வாழ்க்கை வாழ அவர் பயிற்சி அளித்தார். சாதனை வாரங்களில் சாதாரணப் பணிகளைக்கூட குருதேவர் செய்து கொண்டிருப்பதை நம் கண்களால் கண்டிருக் கிறோம். நோயாளிகளுக்குத் தொண்டு செய்வதை அவர் மிகச் சிறந்த தொண்டாகக் கருதுகிறார். ஒருங்கிணைந்த யோகத்தில் ஆசிரமத்துக்குப் புதிதாக வருகிறவர்களுக்குப் பயிற்சி அளித்தார். நோயாளிக்குத் தொண்டு செய்யும்போது பகவான் நாராயணனுக்குச் செய்யும் தொண்டாக நினைத்துச் செய்து இதயத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ளு மாறு அவர் சீடர்களுக்கு அறிவுரை கூறுவார்.

குருதேவர் சென்றவிடமெல்லாம் மருத்துவத் தொண்டு புரிந்தார். தென்னிந்தியாவிலும், மலேயாவிலும், ஸ்வர்காஸ்ரமத்திலும் நடைபெற்ற இத்தொண்டு இறுதியில் ஆனந்தக் குடிலிலும் (**Ananda Kutir**) தொடர்ந்து நடைபெற்று வரு கிறது.

குருதேவர் ஸ்வர்காஸ்ரமத்திலிருந்து தற் போதைய இடத்துக்கு வந்தபோது அவருடன் நடமாடும் மருந்தகமும் வரும். சுறுசுறுப்பான அவரது காலை நேரப் பணிகளில் இரண்டு மணி நேரப் பணி மருத்துவத் தொண்டாகத்தான் இருக் கும். ஆரம்பகாலச் சீடர்களில் யாரேனும் ஒருவர் அவருக்கு உதவி வந்தனர். நோயாளியை குணப் படுத்தும் பணியில் அவர்கள் தொழில் நுணுக்க ரீதியிலும், ஆன்மீக ரீதியிலும் பயிற்சி பெற்றனர். குருதேவர் ஸ்வர்காஸ்ரமத்தில் இருக்கும் போதே அவரை அனைவரும் 'டாக்டர் சுவாமி' அல்லது

'டாக்டர் சிவானந்தா' என்று புகழ்ந்து போற்று வார்கள். இப்போது சாதுக்களும் ஏழை கிராம வாசிகளும் மருத்துவ உதவிக்காக குருதேவரை நாடி வந்தனர்.

1950-ஆம் ஆண்டு துவக்கத்தில் கண் மருத்துவர் ஒருவர் சில நாட்கள் ஆசிரமத்தில் தங்கினர். இந்த டாக்டர் தொண்டு பற்றிய தனது உணர்வைப் புரிந்து கொண்டு அதன்படி செயலில் இறங்கத்தக்கவர் என குருதேவர் கருதினர். இதன் விளைவாக முதல் கண் சிகிச்சை முகாம் நடைபெற்றது. தொடர்ந்து இதுபோன்ற முகாம்கள் நடைபெற்றன. கண் மருத்துவமனை ஒன்று தொடங்கப்படும் வரை குறைந்தபட்சம் ஆண்டுக்கு ஒருமுறையேனும் இந்த முகாம்கள் நடைபெற்று வந்தன.

இந்த மருத்துவமனை ஒரு இயக்கமாகவே உருவெடுத்திருக்கிறது. நவீன கருவிகள் மூலம் இந்தப் பகுதியில் உள்ள ஏழைகளுக்கும், ரிஷிகேசத்தைச் சார்ந்த மகாத்மாக்களுக்கும் மருத்துவத் தொண்டு செய்யப்பட்டது. எக்ஸ்ரே மற்றும் அறுவை சிகிச்சைக்குத் தேவையான கருவிகளும் மருத்துவ மனையில் ஏற்பாடு செய்யப்பட்டது. மருத்துவ மனையில் தங்கும் நோயாளிகளுக்குப் படுக்கை வசதி செய்து தரப்பட்டது. இறுதியாக கட்டிடம் முழுமையாக மாற்றி அமைக்கப்பட்டது. சிகிச்சை பெறுவோர் மகிழ்ச்சியும், நிவாரணமும், சுகமும் பெற்றனர். மருத்துவ நிபுணர்களின் கவனிப்பு, சிகிச்சை, உணவு ஆகியவை நோயாளிகளுக்கு வேறு இடங்களிலும் கிடைக்கும். ஆனல் குருதேவரின் சத்சங்கல்பத்தால் தோன்றும் புனித அலைகள் மூலமும், பிரார்த்தனையின் மூலமும் நோய் குணப்படுத்தப்படுவது இங்குதான்; வேறு எங்குமில்லை.

1953 நவம்பர் 4-ந் தேதி சிவானந்தர் பொது மருத்துவமனையின் ஒரு தனி அறையில் எக்ஸ்ரே சிகிச்சைப் பிரிவை குருதேவர் துவக்கி வைத்தார். எக்ஸ்ரே கருவிகளை நீதிபதி அச்ருராம் என்பவர் தனது மனைவியின் நினைவாக நன்கொடையாகக் கொடுத்திருந்தார்.

1952-ல் குருதேவர் இடுப்பு வலியினால் அவதிப் பட்டார். குருதேவர் பயன்படுத்தத் தேவைப்படும் கருவி இருக்குமா என்று பார்க்க ராணுவ மருத்துவ மனைக்குச் சென்றோம். அவர்கள் ஒரு தடவைக்கு ரூ. 10 கட்டணம் செலுத்த வேண்டும் என்றனர். பிறகு இது தேவையில்லை என்று கருதப்பட்டதால் அந்த முயற்சி கைவிடப்பட்டது.

அடுத்த ஆண்டு தனக்கு இப்படி ஒரு வலி ஏற்பட்டபோது இந்தக் கருவியை பொது மருத்துவ மனைக்காக குருதேவர் வாங்கிக் கொடுத்துவிட்டார். 'இது மலைவாழ் மக்களுக்கும், அருகில் வாழும் துறவிகளுக்கும் பெரிதும் உதவியாக இருக்கும். அவர்களால் பணம் எதுவும் கட்ட முடியாது. ஆகவே அவர்களுக்கு இந்த சிகிச்சையை இலவசமாக அளிப்போமாக! விலையுயர்ந்த கருவியை ஏழைகள் இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தரப் பட்டது. இந்தக் கருவி 1954 பிப்ரவரி 26-ந் தேதி முறைப்படி மருத்துவ மனையில் வைக்கப் பட்டது.

1954 மார்ச் 21-ந் தேதி சிகிச்சைப் பிரிவு திறக்கப்பட்டது. தேவாரி கண் டாக்டராகிய டாக்டர் சிவானந்த — ராம்ஜாஸ் திறந்து வைத்தார். மைக்ராஸ்கோப் கருவி ஒன்றையும் அவர் நன்கொடையாகத் தந்தார்.

## சிவானந்தர் கண் மருத்துவமனை

இதற்கிடையில் கேப்டன் ஸ்ரீவஸ்தவா (இவரைப்பற்றி ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம்) அமரராகிவிட்டார். அவர் குருதேவரின் பணி களில் குறிப்பாக மருத்துவத் தொண்டில் பெரிதும் ஈடுபாடு உடையவர். அவர் ரூ. 20,000-ஐ சிவானந்த நகரில் கண் மருத்துவ மனை கட்டுவதற் காக எழுதி வைத்துவிட்டார். இது சம்பந்தமான மற்ற விபரங்களை குருதேவரே பின்வருமாறு கூறுகிறார்.

### மர்மங்களின் மர்மம்

கேப்டன் ஸ்ரீ வஸ்தவா அவர் என்னைப் பார்த்ததே இல்லை. ஆயினும் மருத்துவ மனைக்காக ரூ. 20,000 நன்கொடை தந்து உயில் எழுதிவைத் திருக்கிறார்.

இது மிகப் பெரிய மர்மம்.

சிறிது காலம் ஆசிரமத்தில் தங்க வந்த டாக்டர் செல்லம்மாள், குடும்பத்தைத் துறந்து செல்வத் தையும் நிறைய வருமானம் தரும் தொழிலையும் விட்டுவிட்டு கண் மருத்துவ மனையின் டாக்டராகி விட்டார்.

இது மிகப் பெரிய மர்மம்.

கருவிகள் ஸ்விட்சர்லாந்திலிருந்தும், பம்பாயி லிருந்தும் வந்து சேர்ந்தன.

இது மற்றொரு மர்மம்.

மற்றொரு புண்ணியாத்மா சிமெண்ட் வாங்கிக் கொடுத்தார். மருத்துவமனையைக் கட்ட உதவினார்.

இது இன்னும் ஒரு மர்மம்.

இந்த மர்மங்களின் மர்மம் என்ன?

அதுதான் கடவுளின் நம்பிக்கை.

கடவுளிடம் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் அவர் உங்களுக்குத் தக்க நேரத்தில் உதவுகிறார்.

சாதிக்க முடியாதவற்றையெல்லாம் சாதிக்க முடிகிறது.

இது மர்மங்களின் மர்மம்.

புதிய கண் மருத்துவமனை 1957 டிசம்பர் 24-ந் தேதி திறந்து வைக்கப்பட்டது.

பொது மருத்துவமனைபோல கண் மருத்துவ மனையிலும் அறுவை சிகிச்சைப் பிரிவு நவீன கருவிகளுடன் இருந்தது.

ஏழைகளுக்கும் மகாத்மாக்களுக்கும் இலவசமாக சிகிச்சை அளிக்கப்பட்டது. இது குருதேவரின் தணியாத ஆசையாக இருந்தது. ஆசிரமத்துக்கு வருகிற எவரும் இந்தத் தொண்டில் சம்பந்தப்படாமல் இருக்க முடியாது. குருதேவரின் 'வற்புறுத்தல்' நிச்சயமாக அவர்களைத் தொண்டு செய்யத் தூண்டும். பல மருத்துவ முகாம்கள் இப்படித்தான் நடைபெற்றன. ஒரு பெண் டாக்டர் விடுமுறையைச் செலவிட ஆசிரமம் வந்தபோது குருதேவர் பெண்கள் 'மருத்துவ முகாமை' அறிவித்து விட்டார். அந்த முகாம் நடைபெறும் நாள் எந்நாள் என நோயாளிப் பெண்கள் விசாரிக்கத் துவங்கினர். டாக்டர் தேவகி குட்டி, லக்னோ, டாக்டர் வசந்தா, பம்பாய், டாக்டர் லக்ஷ்மி மிர்சந்தானி, டெல்லி, டாக்டர் அமர் கௌர், டேராடூன், டாக்டர் சரோஜ், பம்பாய், டாக்டர் பத்மா முதோல்கர், நாகபுரி ஆகியோர் இந்த அற்புத வேள்வியில் பங்கு கொண்டனர்.

டெல்லியைச் சார்ந்த டாக்டர் எஸ். என். சர்மா பல் மருத்துவ முகாமை நடத்தினர்.

ஆரோக்கியமாக வாழ்வது எப்படி என்பதை குருதேவர் தனது சீடர்களுக்கும் பொது மக்களுக்கும் உபதேசம் செய்தார். 1954, 1955 ஆம், ஆண்டு களில் திரு. எல். காமேஸ்வர சர்மா, திரு. கைலாச நாத் குப்தா ஆகியோரின் உதவியுடன் இயற்கை வைத்திய வகுப்புக்களை நடத்தினர்.

மேற்கு நாடுகளைச் சார்ந்த சில டாக்டர்கள் (Psychologists) ஆசிரமத்துக்கு வந்த போது அவர்கள் சொற்பொழிவாற்ற குருதேவர் ஏற்பாடு கள் செய்தார். 1952-ம் ஆண்டு பாரிஸைச் சார்ந்த டாக்டர் மரிசே சாய்ஸியும், 1953ல் லண்டனைச் சார்ந்த டாக்டர் கிரகாம் ஹோவேயும் ஆசிரமம் வந்து தொடர் சொற்பொழிவுகளை நிகழ்த்தினர்.

1949ல் குருதேவர் முதல் உதவி மற்றும் வீட்டு வைத்திய வகுப்புக்களை நடத்தினர். ஸ்ரீ சுவாமி சிதானந்தர் சொற்பொழிவுகளை நிகழ்த்தி பயிற்சி களையும் செய்து காட்டினர். டாக்டர் கே. சி. ராய் ஆசிரமத்துக்கு வந்தபோது இதே விஷயத்தில் வகுப்புக்களை நடத்த குருதேவர் அருளாணை பிறப் பித்தார். பிறகு மேஜர் ஜெனரல் ஏ. என். சர்மா, (ஆசிரமத்துக்கு இவர் ஆண்டுக்கு ஒருமுறை வருவது வழக்கம்) முதல் உதவி மற்றும் வீட்டு வைத்தியத் தில் இரு வகுப்புக்களை நடத்தி, செயின்ட் ஜான் ஆம்புலன்ஸ் சான்றிதழ்களை பயிற்சியில் வெற்றி பெற்ற அன்பர்களுக்கு வழங்கினர். கிரீஸ் நாட்டைச் சார்ந்த டாக்டர் லில்லா விலாச்சு ஆசிரமம் வந்தபோது 'மசாஜ்' (Massage) சிகிச்சைபற்றி வகுப்பு நடத்தினர்.

இவை அனைத்துக்கும் மேலாக கடவுளின் கருணையே முக்கியம் என்று கருதிய குருதேவர் நல்ல உடல் ஆரோக்கியம் கிட்ட அனைவரையும் முறை யாக பிரார்த்தனை செய்ய வலியுறுத்தினார். சாலை யோரத்தில் ஒரு பிராணி நோயுற்றுக் கிடந்தாலும் குருதேவர் பிரார்த்தனை செய்வார். அவர் இதனைக் கண்ட இடத்தில் நின்று மகா மிருத்யுஞ்சய மந்திரத்தை ஜபம் செய்து பிரார்த்தித்துவிட்டு அதன் பிறகு அங்கிருந்து செல்லுவார்.

குருதேவர் அகில இந்திய சுற்றுப் பயணம் செய்தபோது மந்திர ஜபத்தின் மகிமைபற்றி எடுத்துரைத்தார். அனைவருக்கும் பொதுவாக மந்திர தீக்ஷை அளிப்பார். எவராவது உடல்நலம் குன்றி அவதிப்படுவதாக குருதேவர் கேள்விப்பட்டால் சத்சங்கத்தில் மிருத்யுஞ்சய மந்திரஜபம் செய்வார். அண்மையில் நிகழ்ந்த ஒரு அற்புதம் என் நினைவுக்கு வருகிறது.

கர்னல் ரிக்கீ என்ற அன்பர் குருதேவரிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவர். 1954-ல் குருதேவர் டைபாயிடு நோயால் பாதிக்கப்பட்ட பிறகு ரூர்க்கியில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அப் போது கர்னல் ரிக்கீ அவருக்குத் தொண்டு செய்தார். 1959-ம் ஆண்டில் கர்னல் ரிக்கீ இதய நோயால் பாதிக்கப்பட்டார். மரணப் படுக் கையில் இருந்த அவர் குருதேவரின் ஆசீர்வாதத் தைப் பெற்று வருமாறு சொல்லி ஒரு ஆளை ரிஷிகேசத்துக்கு அனுப்பினார். அந்த அன்பரும் ரிஷிகேசம் புறப்பட்டார். அவர் பாதி வழியில் சென்றிருக்கும்போது கர்னல் ரிக்கீயை கவனித்து வந்த நர்ஸ் அவர் இறந்துவிட்டதாக அறிவித்து விட்டார். கர்னல் ரிக்கீயின் மனைவி அழுது புலம்பினார். அவரது குழந்தைகளுக்குத் தந்தி

கொடுக்கப்பட்டது. டாக்டர்களுக்குச் சொல்லி அனுப்பப்பட்டது. ஆனல் கர்னல் ரிக்கீயின் மனைவியும் மற்றவர்களும் ஆச்சரியப்படுகிற அளவில் அவர் இரவு 9-15 மணிக்கு படுக்கையிலிருந்து 'விழித்தெழுந்து' தாகத்துக்குத் தண்ணீர் கேட்டார். இறந்தவர் உயிர் பெற்ருர். இதே நேரத்தில் கர்னல் ரிக்கீ அனுப்பிய அன்பர் கேட்டுக்கொண்டபடி, குருதேவர் ஆசிரமத்தில் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். கர்னல் அன்று இரவு முழுவதும் சுகமாக இருந்தார். மறுநாள் காலை ரிஷிகேசத்திலிருந்து குருதேவரின் பிரசாதமும் புத்தகங்களும் வந்து சேர்ந்தன. கர்னல் பிரசாதத்தை நெற்றியில் பூசிக் கொண்டார். புத்தகங்களை பக்தி சிரத்தையுடன் நெற்றியில் வைத்துக் கொண்டார். அன்று இரவு அவர் அமைதியாக இறைவன் திருவடி எய்தினர்.

விசுவநாதர் திருக்கோயிலில் அளவிடற்கரிய இந்தத் தொண்டு தொடர்ந்து நடைபெற்று வருகிறது. பக்தர்களின் நீண்ட ஆயுள் மற்றும் ஆரோக்கியத்துக்காக இறைவனுக்கு பூஜை, அர்ச்சனை, அபிஷேகம் செய்யப்பட்டு பிரசாதங்கள் அனுப்பி வைக்கப்படுகின்றன.

## சிவானந்த ஆயுர்வேத மருந்தகம்

1945ல் நல்ல பற்பொடி தயாரிக்கும் பணியில் குருதேவர் ஆர்வம் கொண்டார். இதுபற்றிய விஷயங்களை ஒரு சாதுவிடம் முதலில் தெரிந்து கொண்ட குருதேவர் சிவானந்த ஆரம்பப்பள்ளியில்

பணியாற்றிக் கொண்டிருந்தவரும், ஆயுர் வேதத்தில் ஞானம் உடையவருமான ஒருவரை இந்தப் பணியில் ஈடுபடுத்தினார். தயாரிக்கப்பட்ட பல்பொடி ஆசிரமத்தில் தங்க வருகிறவர்களுக்கும் தரப்பட்டது. பல்பொடி நன்கு தயாரிக்கப்பட்டிருப் பதாக அவர்கள் பாராட்டினர். அதனால் அவர் களுக்குத் தொடர்ந்து பல்பொடி வினியோகம் செய்ய குருதேவர் விரும்பினார். இது எப்படி முடியும்? அதிக அளவுக்கு பல்பொடி தயாரித்தால்தான் முடியும். ஆயுர்வேதாசார்யர் ஸ்ரீ சச்சிதானந்த மைதானி அதிக அளவுக்கு பல்பொடி தயாரித்துத்தர சம்மதித்தார். 1945 மே 6-ந் தேதி சிவானந்த ஆயுர்வேத மருந்தகம் தொடங்கப்பட்டது.

பிராமி-அம்லா எண்ணெய், சியவனப்ராசம் ஆகியவையும் இவ்வாறே மருந்தகத்தில் தயாரிக் கப்பட்டன. இமயமலை மூலிகைகள் மற்றும் புனித கங்கை நீருடன் குருதேவரின் சீடர்களால் தயாரிக்கப்படும் ஆயுர்வேத மருந்துகளும் டானிக்கு களும் மற்றவர்கள் தயாரிப்பதைவிடச் சிறந்த வையாகவே உள்ளன. ஆகவே குருதேவர் திரு. மைதானியை ஆசிரியர் பொறுப்பிலிருந்து விடுவித்து சாதகர்களின் ஆரோக்கியம் பேணத் தேவையான மூன்று டானிக்குகளைத் தயாரிக்கும் பணியில் முழுமையாக ஈடுபடுத்தினார். பிறகு இவற்றிற்குச் சமமான மற்ற மருந்துகளும் மருந் தகத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டன.

## சிவானந்தர் நினைவகம்

சிவானந்த நகர் அஞ்சல் நிலையத்திற்கு மேலே சிவானந்தர் நினைவகம்* உள்ளது.

இந்த நினைவகத்தில் குருதேவரின் வாழ்க்கை வரலாறு மற்றும் லட்சியப் பணியை உலகத்துக்கு என்றும் நினைவுபடுத்தும் பொருட்கள் உள்ளன. ரிஷிகேசத்தில் குருதேவர் அன்று முதல் இன்று வரை பயன்படுத்திய — நமக்கு உற்சாகந் தருகிற பொருட்கள் அனைத்தையும் திரட்டி வைத்திருக்கிறார். அவர் ஆரம்ப காலத்தில் பிக்ஷை எடுத்த திருவோடு முதல், அகில இந்திய சுற்றுப்பயணத்தின்போது சென்னை மக்கள் அன்பளிப்பாகத் தந்த வெள்ளிப் பெட்டி வரை அனைத்துப் பொருட்களையும் திரட்டி இந்த நினைவகத்தில் காட்சிக்கு வைத்திருக்கிறார்.

குருதேவர் உயிருடன் இருக்கும்போதே அவரது தெய்வீகத் தொண்டினை நிரூபிக்கும் பொருட்கள்

---

* சிவானந்தர் நினைவகம் துவக்கப்பட்ட அன்று (1956 ஜனவரி 9) குருதேவர், பரமானந்தருக்கு பின்வருமாறு பாராட்டுத் தெரிவித்தார்.

"சுவாமி பரமானந்தர் சுய சிந்தனை உடையவர். மக்களிடமிருந்து நன்கொடை வசூல் செய்து அவர்தான் பஜனை மண்டபத்தை கட்டினார். வெளியீட்டுத் துறையை அவர் தான் தொடங்கினார். அவர்தான் எனது அகில இந்திய சுற்றுப்பயணத்தை ஏற்பாடு செய்து நடத்தினார். எனது நூல்கள் ஜெர்மன், பிரெஞ்சு மொழிகளில் வெளியிடப்பட அவரே காரணமாக இருந்தார். வெளி நாடுகளில் எனது ஞானம் பரவச் செய்தார். அவர் கடுமையாக உழைக்கும் தொண்டர். அவர் இரவு முழுவதும் பணியாற்றுகிறார்".

திரட்டி வைக்கப்பட்டன. குருதேவர் உலகைத் துறந்து மனித இதயங்களில் ஆட்சி செலுத்துபவர் என இந்த நினைவகம் சித்தரிக்கிறது. குருதேவர் ஆரம்பத்தில் குடிசையில் இருந்தது முதல், இப்போது கங்கையின் மறுகரையில் கேந்திரம் அமைக்கப்பட்டு உலகம் முழுவதும் ஆன்மீக ஒளி பரப்பி வருவது வரையிலான வளர்ச்சியை இந்த நினைவகம் நினைவுபடுத்துகிறது.

சிறிய குடில் சிறு நகரமாக மாறி உலக மக்கள் அனைவரின் கவனத்தையும் கவருவது இங்கு சித்தரிக்கப்பட்டுள்ளது.

சிவானந்தர் நினைவகம் தெய்வீக வாழ்க்கைச் சங்க சரித்திரத்தின் அருங்காட்சியகம்.

## சிவானந்தர் தொடக்கப் பள்ளி

ஆசிரமத்தைச் சுற்றியுள்ள பகுதியில் உள்ள சிறுவர், சிறுமியர் தகுந்த கல்வி வசதியின்றி அல்லற்படுவதை கவனித்த குருதேவர், அவர்கள் வசதிக்காக ஒரு தொடக்கப் பள்ளியைத் தொடங்க முன்வந்தார். 1943 அக்டோபர் 15-ந்தேதி விஜய தசமியன்று சிவானந்தா தொடக்கப்பள்ளி உதய மாயிற்று. அந்தப்பகுதி குழந்தைகளுக்கு அது வரப்பிரசாதமாக அமைந்தது. குருதேவரும் ஆசிரமத்தில் உள்ள சாதகர்களும் ஆசிரமத்தால் நியமிக்கப்பட்ட ஆசிரியர்களும் அவர்களுக்கு கல்வி போதித்தனர். அறநெறிகள், ஒழுக்கம், உண்மையான ஆன்மீக வாழ்க்கையின் அடிப்படை விஷயங்கள் ஆகியவை குழந்தைகளுக்கு போதிக்கப் பட்டன.

அரசு, தொடக்கப் பள்ளியை அங்கீகரித்தது. இந்த நூல் எழுதப்படுகிற வேளையில், ஆசிரியர்களுக்குரிய சம்பளத்தை அரசு தந்து கொண்டிருக்கிறது.

## செயல்பாட்டில் அன்பு

குருதேவர் தனது சீடர்களிடத்தில் தாயைப் போல அன்பு செலுத்துவார்; அன்பு செலுத்தும் பெற்றோர்களும் அவர்களிடத்தில் பாடம் கற்றுக் கொள்ளவேண்டும்.

1949 அக்டோபர் 3-ந் தேதி குருதேவர் தனது குடிலிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தார். திரு. சுப்பிரமணியன் சாலையில் சைக்கிளில் வந்து கொண்டிருந்தார். அவர் குருதேவரைக் கண்டதும் கீழே இறங்கி நடந்தார். இதை கவனித்த குருதேவர் திரு. சுப்பிரமணியனிடம் பின்வருமாறு கூறினார்;

"இது போன்று நடப்பது தேவையற்றது என்பது என் கருத்து. அன்புக்கும், மரியாதைக்கும் உரிய இடம் இதயம். எப்போதும் உங்கள் இதயத்தில் பெரியோர்களிடம் செலுத்தும் அன்பும் மரியாதையும் இடம் பெற்றிருக்க வேண்டும். அதனை நான் அறிவேன். இதுபோன்ற புறச் செயல்களுக்கு நான் அதிக முக்கியத்துவம் தருவதில்லை".

குருதேவர் மேலும் தொடர்ந்து கூறினார்: "நீங்கள் கடும் வெயிலில் செல்லுகிறீர்கள். ரிஷிகேசில் கட்டுமானப் பொருட்களை வாங்கிக் கொண்டு கட்டிடப் பணியினை மேற்பார்வையிடச் செல்லுகிறீர்கள். உங்களுக்குத் தேவையான எதையும் எடுத்துக் கொள்ளத் தயங்காதீர்கள்.

இப்போது நீங்கள் நல்ல குளிர்பானம் அருந்த வேண்டும். அரை மணி நேரம் கழித்து சூடான பானம் ஏதேனும் அருந்துங்கள். தேவைப்பட்டால் சில பழங்களையும் சாப்பிடுங்கள். தயங்காதீர்கள். உங்கள் உடலை பூரண ஆரோக்கியத்துடன் வைத் திருக்கத் தேவையான அனைத்தும் செய்ய உங்க ளுக்குப் பூரண உரிமை உண்டு.

## செயல்படத் தூண்டும் யோக—வேதாந்தம்

ஆன்மீக ஞானத்தைத் தீவிரமாகப் பரப்புவது குருதேவரின் லட்சியம். யோகம், சமாதி, இறை வழிபாடு பற்றி தொடர்ந்து சிறப்பாக போதனை செய்து வந்தார்.

1935-ம் ஆண்டு ஜூலை 14-ந் தேதி குருதேவர் பரமானந்தருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் பின்வருமாறு கூறுகிறார்:

''மாயா வேதாந்திகளைப்போல அல்லாமல் — அலிகளாக இருக்காமல் — அறையைப் பூட்டிக் கொண்டு உள்ளே கையாலாகாதவர்களாக இருப் பதைவிட இந்தப் பணி மிகவும் சிறந்தது.

1935 ஜூலை 16-ந் தேதி இதுபற்றி மேலும் குருதேவர் பின்வருமாறு கூறியிருக்கிறார்:

''இப்போது நீங்கள் செய்கிறபணி, இக்கால நிவ்ருத்தி வேதாந்தங்கள் செய்கிற தியானம் எனப்படும் பயனற்ற செயலைவிடச் சிறந்ததாகும். இப் பணி, அதைவிட 1,00,000 மடங்கு சிறந்தது''.

அதே நேரத்தில் வேலைமட்டும்தான் செய்ய வேண்டும் என குருதேவர் வலியுறுத்தவில்லை.

யோக சாதனையில் பாவம் (Bhav) மிக முக்கியம் என்பதை இளந் தொண்டர்களுக்கு உணர்த்த குருதேவர் தவறியதில்லை.

பரமானந்தர் சென்னையில் இருந்து குருதேவரின் பணியைச் செய்து கொண்டிருந்தபோது, குருதேவர் அவருக்கு எழுதிய இரு கடிதங்களின் விபரம் வருமாறு:

"வேதாந்தத்தின் இரு கருத்துக்களை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

1) உலகம் மாயை (மித்ய நிஸ்சயம்).

2) நான் பிரம்மமாக இருக்கிறேன் (அஹம் பிரம்மாஸ்மி நிஸ்சயம்).

நிஸ்சயம் என்பது உறுதிப்பாடு.

பணி செய்கிறபோது எங்கும் நிறைந்துள்ள ஞானம் பற்றிய உணர்வில் ஓம் கலந்திருக்கட்டும். (1935 ஜுலை 14).

"நீங்கள் எப்போதும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும், மிகுந்த பலத்துடன் இருக்க வேண்டும். சக்திமிக்கவராக இருக்க வேண்டும், நீங்கள் ஆதாரத்தை மறந்துவிட்டால் மெதுவாக பலமிழந்து துவண்டு விடுவீர்கள். பலவீனம் எதிர்மறை விசாரம். பின்வருமாறு உறுதிப் படுத்துங்கள்.

நான் சர்வசக்திவாய்ந்தவன் ஓம் ஓம் ஓம்
நான் வாழும் உண்மை ஓம் ஓம் ஓம்
நான் வாழும் அனுபவம் ஓம் ஓம் ஓம்
நானே அனைவரிடத்திலும் உள்ள ஆத்மா
ஓம் ஓம் ஓம்
(1935 ஆகஸ்டு 2)

குருதேவர் தான் எழுதும் கடிதங்களின் துவக்கத்தில் அல்லது முடிவில் உயர்ந்த கருத்துக்களைச் சொல்லத் தவறுவதில்லை.

குருதேவர் 1935 ஆகஸ்ட் 14-ந் தேதி எழுதிய கடிதத்தில் சுவாமிகளை 'பரபிரம்மம்' என்று குறிப்பிட்டுள்ளார். கடிதத்தின் இறுதியில் ''தாங்கள் சாட்சி, அகர்த்தா, சிவானந்தா நிர்விசேஷ சின்மத்ரோஹம்'' என்று குறிப்பிட்டிருந்தார்.

ஆன்மாவைத் தட்டி எழுப்பும் வாசகம் இது!

## திறமையை வெளிக்கொணருபவர் அறிவை வளர்ப்பவர்

உண்மையும், சிரத்தையும், தாகமும் உடைய சாதகர்தான் குருதேவரின் கடவுள். அத்தகைய சாதகர்களுக்காகவே தான் வாழ்ந்து வருவதாக குருதேவர் அறிவித்துள்ளார். சாதகர்களுக்கு அவர் செய்யாதது எதுவும் இல்லை. குருதேவர் இந்த வயதிலும் (இப்போது 73 வயது) இடையறாது பணியாற்றுகிறார். ஆசிரம சாதகர்கள் இடையறாது சாதனை புரிய அவர் இவ்வாறு பணிபுரிகிறார். சாதகர்களின் உணவு, உடை, தங்கும் வசதி, மருத்துவ வசதி ஆகிய அனைத்தைப்பற்றியும் அவர் கவலைப்படுகிறார்.

பெற்றோரைக் காட்டிலும் சிறப்பாக குருதேவர் சாதகர்களின் முன்னேற்றத்தில் அக்கறை எடுத்துக் கொள்ளுகிறார். யாரேனும் ஒருவரிடத்தில் சிறிதளவு திறமையைக் கண்டாலும் அந்தத் திறமையை முழுமையாக வெளிக்கொணர அவர் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளுவார். சாதகர்களுக்கும் உலகுக்கும் தனது கருத்தை முழுமையாக வெளிப்படுத்த இரவுபகலாக குருதேவர் சிந்திப்பார்.

ஆனந்த குடிலின் பல துறைகள் இந்த நோக்கில் தான் தொடங்கி வளர்க்கப்பட்டன. 1948-ல் காகிதம் தயாரிப்பதில் திறமையாளர் எனச் சொல்லிக்கொண்டு ஒரு அன்பர் ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தார். மறுநாளே குருதேவர் ஒரு குழியை வெட்டச் சொன்னார்; குப்பைகளை அதில் போடச் சொன்னார். அந்த அன்பர் காகிதம் தயாரிக்க இது பயன்படும் என்று கருதி இப்படிச் சொன்னார்.

நீங்கள் செய்கிற பணியை மேலும் திறமை யாகச் செய்ய குருதேவர் சிறந்த ஆலோசனைகளை, உங்களைப் பார்த்தமாத்திரத்தில் வழங்குவார். ஒவ்வொரு சாதகரும் தத்தம் மனப்பக்குவத்துக்குத் தகுந்தாற்போல் வளர்ச்சி அடைய குருதேவர் ஊக்க மூட்டுவார். நீங்கள் வேதாந்தம் படிக்க விரும்பினால் குருதேவர் உங்களுக்கு எந்த வேலையும் தரமாட்டார். நீங்கள் தனித்திருந்து வேதாந் தத்தை படித்து முன்னேறத் தேவையான எல்லா வசதிகளையும் செய்து தருவார். அவர் உங்கள் அறிவாற்றலை வெளிப்படையாகப் பாராட்டி உங்களை ஒரு பேராசிரியராக ஆக்கிவிடுவார். குருதேவர் ரிஷிகேசத்துக்கு வந்த ஆரம்பகாலத்தில் தான்பட்ட அனுபவங்களை மனதிற்கொண்டு, புதி தாக வரும் சாதகர்கள் சாதாரண வசதிகளைப் பெறுவதற்காக மூளையைச் செலவிட அனுமதிப்ப தில்லை. அவர்களுக்குத் தேவையானவற்றைத் தானே செய்துகொடுப்பார்.

## துறவிகளை உருவாக்கியவர்

ஒரு துறவியின் மகத்தான தொண்டு தன்னைப் போல பல துறவிகளை உருவாக்குவதுதான். இந்தத் தொண்டில் குருதேவர் மிகச்சிறந்து விளங்குகிறார்.

அவர் தத்துவ மேதை. காந்தம் போன்றவர். எத்தகைய உலோகம் போன்றவர்களையும் தம்வசம் ஈர்த்து தங்கம்போல அவர்களைத் தகுதிபடைத்த வர்களாக உருவாக்கி வருகிறார். கற்களை நகை களாக மாற்றும் கலையில் அவர் நிபுணர்.

அவர் எப்படி இதைச் செய்கிறார்?

அவர் ஒவ்வொருவரிடம் உள்ள நல்ல குணத் தையே பார்க்கிறார். தீய குணங்களைப் பார்ப்ப தில்லை. எவர் மீதும் குறை சொல்லுவதில்லை. யாரையும் புறக்கணிப்பதில்லை. அவரைப் பொறுத்த வரையில் தீயவர் என்று எவருமில்லை; நற்குணம் இல்லாதவர் என்று எவருமில்லை, பாவிகள் என்று எவருமில்லை. அவர் எங்கும் கடவுளையும் கடவுள் தன்மையையும் பார்க்கிறார். குருதேவர் தனது சீடர்கள் 'தீமைகள் எதையும் காணக்கூடாது' என்று விரும்புகிறார். இதனை அவர் துறவி ஒரு வருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் குறிப்பிட்டிருக் கிறார்.

''அனைத்தையும் முழுமையாக மறந்துவிடுங் கள். கவலைப்படாதீர்கள். நமது பணிக்கு இடையூறு ஏற்படும் மக்கள் ...... பற்றிப் பேசும் போது காதை மூடிக்கொள்ளுங்கள் ...... க்கு பதில் அளிக்கும் முறையில் கடிதம் எதுவும் எழுதாதீர்கள். நடந்தது நடந்ததாக இருக்கட்டும். அதைக் கிளற வேண்டாம். மனத்தை இதிலிருந்து எடுத்து பணி யிலும், ஜபத்திலும், கீர்த்தனையிலும் ஈடுபடுத் துங்கள்.

ஆயிரம் பேர் உங்களைப் பற்றித் தவறாகப் பேசி என் காதுகளையும், மனத்தையும் நச்சுமயமாக்க

முயன்றாலும் நான் நம்ப மாட்டேன். அனாவசியமாக கவலைப்படுவதில் சக்தியை வீணாக்க வேண்டாம். நமது பணி பன்மடங்கு அதிகமாக வளர்ந்திருக்கிறது. ஊழல், குறைபாடுகள் பற்றி மக்கள் பேசுவதற்கு செவி சாய்ப்பதா அல்லது யோகப்பயிற்சியில் முன்னேறுவதா? மறந்துவிடுங்கள், மறந்துவிடுங்கள். மன்னித்துவிடுங்கள், மன்னித்துவிடுங்கள். எப்போதும் உற்சாகமாக இருங்கள். துணிவுடன் இருங்கள். நிமிர்ந்து நில்லுங்கள். கச்சை கட்டிக் கொண்டு எங்கும் வேதாந்தம், யோகம், பக்தி பற்றி பிரசாரம் செய்யுங்கள். சிறிதளவு கூடக் கவலைப்பட வேண்டாம். இந்த உலகில் உங்களை எவரும் துன்புறுத்த முடியாது .... சத்தியத்தில் நிலைத்திருந்து எந்த மேடையில் வேண்டுமானாலும் ஏறி சிம்ம கர்ஜனை செய்யுங்கள். உங்களிடமுள்ள சிறு குறைகளும் அகன்றுவிடும், கவலைப்படாதீர்கள். ஆத்மா தூய்மையாக இருக்கிறது. அது களைபடியாதது, இதனை கருத்தில் கொள்ளுங்கள், அசுத்தங்கள் அகன்றுவிடும். குறைகளைப் போக்கும் ஆக்கரீதியான வழி இதுதான். பலம், மகிழ்ச்சி, அமைதி, பேரானந்தம் அமரத்துவம் அனைத்தும் உனது இயல்பு. இதனை உறுதிப்படுத்து, உணர்ந்துகொள்.

## உன்னத நம்பிக்கை

பணப் பிரச்னை குருதேவரை ஒருபோதும் வருத்தப்பட வைத்ததில்லை. தொண்டர்களை நன்கு கவனித்து, அவர்களை உற்சாகப் படுத்தி, அவர்களின் தொண்டு மனப்பான்மையைப் பாதுகாத்து வந்தால், பணி சிறப்பாக நடைபெறும் என்றும் மக்கள் ஆதரவு, நன்கொடை என்ற முறையில் தானாக வந்து சேரும்; ஏராளமாக வந்து சேரும் என்று குருதேவர் அறிந்திருந்தார்.

1949 அக்டோபர் 2-ந் தேதி குருதேவர் பின்வருமாறு கூறினார்கள்: ''பணம் இருக்கிறதோ இல்லையோ நீங்கள் உங்களது உடம்பை கவனித்துப் பார்த்துக்கொள்ள வேண்டும். கடவுளின் கருவியாகிய இந்த உடம்பை நீங்கள் கவனித்துக் கொள்ளாவிடில் நீங்கள் துர்கையை முறையாக வழிபடவில்லை என்று ஆகும். தெய்வத்தின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் பணிபுரியத் தகுதி வாய்ந்த நிலையில் உடம்பை கவனித்துக் கொள்ளுவதுதான் முறையான துர்கை வழிபாடு ஆகும்.

ஆசிரமத்தில் பனிரண்டு பேர் தங்கியிருந்த சமயத்தில், நாங்கள் சமையலறையிலேயே உணவு உட்கொள்ளுவோம். அப்போது குருதேவர் உள்ளே வந்து ''இங்கு உணவருந்துவோரின் வரிசை ரிஷிகேசத்திலிருந்து லக்ஷ்மண்ஜூலாவரை இருக்கும்'' என்பார். இது வேடிக்கைப் பேச்சு அல்ல. இன்று (1959) ஆசிரமத்தின் அன்ன சத்திரத்தில் உணவருந்துவோரை வரிசையாக நிறுத்தினால் அந்த வரிசை கணிசமான தொலைவு இருக்கும்.

1949 அக்டோபர் 2-ந் தேதி குருதேவர் பின்வருமாறு கூறியது இந்த உணர்வை பிரதிபலிக்கிறது:

''பணம் வரும், பணம் வந்தாக வேண்டும். வெகு விரைவில் கோடி கோடியாக பணம் வரும். உங்களால் பணத்தை எண்ண முடியாது. என்னை நம்புங்கள். அத்தகைய நாள் வந்துதான் தீர வேண்டும். நீங்கள் கடுமையாக உழைத்தால் அந்தச் சூழ்நிலை ஏற்பட உதவியவர்கள் ஆவீர்கள்''.

குருதேவரின் அகில இந்திய சுற்றுப்பயணத்தின் போது, பயணத்திற்குப் பயன்படுத்தப்பட்ட காருக்குள் பணம் வந்து குவிந்த வண்ணமிருந்தது. பிறகு ஆசிரமத்துக்கும் அவ்வாறே பணம் வந்து சேர்ந்தது. வந்த பணத்தை எண்ணி முடிக்க இரு சாதுக்களால் இயலவில்லை. குருதேவர் சொன்ன படியே நிகழ்ந்தது.

## துறவுப் பண்பு

கடுமையான பணி என்று குருதேவர் குறிப்பிடுவது அலுவலகப் பணியை அல்ல; சாதனையை, சாதகர்களிடம்! 'பாபத் தன்மைக்குப் பதில் சாதுத் தன்மை' இருக்க வேண்டும் என அவர் வலியுறுத்துவார். தவருக சாக்குபோக்குச் சொல்லிவிட்டு ஆசிரமவாசிகள் இருவர் ஆசிரமத்திலிருந்து சென்றுவிட்டனர். அவர்களைக் குறிப்பிட்டு குருதேவர் 1949 அக்டோபர் 27-ந் தேதி பின்வருமாறு குறிப்பிட்டார்.

''நீங்கள் சிறந்த தொண்டராக இருக்கலாம். நீங்கள் அறிவிற் சிறந்தவராக இருக்கலாம். நீங்கள் கீதை, உபநிடதங்கள், பிரம்மசூத்திரம் ஆகியவற்றை ஆரம்பம் முதல் கடைசி வரை சொல்லத் தகுதி படைத்தவராக இருக்கலாம். நீங்கள் ஹடயோகப் பயிற்சிகளில் சிறந்து விளங்கக் கூடும். உங்களிடத்தில் துறவு மனப்பான்மை இல்லை எனில் இவற்றால் பயனில்லை. பாராயணம், தியானம், தலையை உருட்டல் ஆகியவற்றால் என்ன பயன்? மூன்று மணி நேரம் தலை கீழாக நிற்பதால் என்ன பயன்? இதனை நீங்கள் நினைவில் கொள்ளுங்கள். துறவு மனப்பான்மை உங்களிடத்தில் இல்லையென்றால், துறவி என்ற அளவில் நீங்கள் தோல்வி அடைவீர்கள்.

''துறவு மனப்பான்மை என்பது பல்வேறு நற்குணங்களின் விநோதமான கலப்பு ஆகும். அதனை விவரிக்க முடியாது. ஆனால் அந்த மனப்பான்மை உள்ள மனிதனைப் பார்க்கிற பொழுது நீங்கள் அடையாளம் கண்டு கொள்ளுவீர்கள். இந்தப் பண்பு, பணிவு, பொறுமை, மன்னித்தல், அலைபாயாத மனம், தொண்டுணர்வு, பிறருடன் ஒத்துப்போதல், பகவானிடத்தில் மகிழ்ச்சியுடன் சரணாகதி செய்தல், கோபத்திலிருந்து விடுபடுதல், காமம், ஆசை ஆகியவற்றிலிருந்து விடுபடுதல், புறங்கூறுமை ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். துறவு மனப்பான்மை உடையவர்கள் எப்போதும் மகிழ்ச்சியாக இருப்பார்கள். அனைத்தையும் அமைதியாக ஏற்றுக்கொள்ளுவார்கள். அனைத்தும் இறைவன் அருளால் நடைபெறுகிறது என்று எண்ணுவார்கள். இத்தகைய மனப்பான்மை உடையவர்கள் பிறரைப்பற்றி குறை சொல்ல மாட்டார்கள்.

''மாறாக, பாபத்தன்மை, குற்றஞ் சொல்லுவது தவிர வேறு எதுவுமில்லை. ஒருநாள் தேநீரில் சர்க்கரை குறைந்துவிட்டால், ஒருநாள் தேநீர் குறித்த நேரத்துக்குக் கொடுக்கப்படவில்லையெனில், இத்தகையோர் கோபத்தின் எல்லையைத் தொட்டுவிடுவர். இத்தகைய குணம் உடையவர் நம்பிக்கை மோசம் செய்பவர். அவரது இதயத்தில் வெறுப்பு, பொறாமை, காமம் ஆகியவைதான் நிறைந்திருக்கும். பதவி அந்தஸ்தில்தான் அவருக்கு நாட்டம் இருக்கும். புறங்கூறுதல், ஊழலைப் பரப்புதல், சதி செய்தல், ராஜதந்திரம் ஆகியவற்றில் இவருக்கு விருப்பம் அதிகம். இவருக்கு மூளை மிக்வேகமாக வேலை செய்யும். நீங்கள் ஓரிரு நாட்கள் அவருடன் பழகினால் அவரது

உண்மை இயல்பை புரிந்து கொள்ளலாம். இத் தகையவர்களிடத்தில் எச்சரிக்கையாக இருங்கள்.

''உங்களது ஆன்மீகப் பயிற்சி அனைத்தும் துறவு மனப்பான்மையை வளர்ப்பதாக இருக்க வேண்டும். பாபத் தன்மையை அழிப்பதாக இருக்க வேண்டும். நீங்கள் ஒரு சில சொற்களைக்கூட பேச முடியாத அளவுக்கு கல்வியறிவற்றவர்களாக இருக் கலாம், ஆனால் உங்களிடத்தில் துறவு மனப்பான்மை இருந்தால் நீங்கள் ஒரு ஞானி.

குருதேவரிடத்தில் இந்தப் பண்பை நாம் காண்கிறோம். இதனை நிரூபிக்கும் வகையில் 1948 டிசம்பர் 20-ந்தேதி குருதேவர் கூறியதாவது.

''நான் சுற்றுப்பயணம் செல்லுகிறபோது நான் பற்பல இடங்களில் ரயிலிலிருந்து இறங்கியதும் மாலை அணிவிப்பார்கள். ஆனால் நான் எனது உடமைகளை தலையில் சுமந்துகொண்டு செல்வேன். நீங்கள் மார்க்கெட்டுக்குச் சென்று காய்கறி வாங்கினால் அதை ஒரு வேலைக்காரன் எடுத்துக் கொண்டு வரவேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள். நீங்கள் அதை எடுத்துக்கொண்டு வர வெட்கப் படுகிறீர்கள்''.

இத்தகைய உறுதியான அஸ்திவாரத்தின் மீது எழுப்பப்பட்ட கட்டிடம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம்.

## பக்தர்கள் தம் கால்களில் நிற்கப் பயிற்சி

1941-ல் வணக்கத்திற்குரிய சீடர்கள் கடுமை யான சோதனைகளைக் கடந்து செல்ல வேண்டி யிருந்தது. அல்லது சீடர்களை தம் கால்களில் நிற்க

வைக்கவும் அல்லது சீடர்கள் தன்னிடத்திலும் தான் உபதேசித்துள்ள கொள்கையிடத்திலும் எந்த அளவுக்கு பக்தி கொண்டிருக்கிறார்கள் என்று உறுதிப்படுத்தவும் அல்லது அனைத்துச் சூழ்நிலையிலும் சமாளித்து நிற்கும் வகையில் அவர்களைத் தயார் செய்யவும் குருதேவர் சில செயல் முறைகளை உருவாக்கினார்.

அப்போது பரமானந்தரும் நாராயண சுவாமிகளும் சில புத்தகங்கள் அச்சிடுவது சம்பந்தமாக லாகூரில் இருந்தனர். அப்போது ஆசிரமத்தில் இருந்த ஸ்ரீ நிஜபோத்ஜி லாகூருக்கு தந்தி கொடுத்தார். தந்தி வாசகத்தைப் படித்து பரமானந்தர் மிகவும் வருத்தப்பட்டார். ''சுவாமிஜி எங்கோ சென்றுவிட்டார்கள். எங்கு சென்றார்கள் எனத் தெரியவில்லை''. அன்று 1941 பிப்ரவரி 18-ந் தேதி குருதேவர் ஆசிரமத்தில் உள்ள எவரிடமும் சொல்லாமல் எங்கோ புறப்பட்டு விட்டார். குருதேவர் எங்கு சென்றாலும் தனித்தே செல்வார். உலாவச் செல்லுகிறபோதும் எவரையும் அழைத்துச் செல்வதில்லை. ''உலாவச் சென்றாலும் உடன் எவரையும் அழைத்துச் செல்லாமல் தனித்துச் செல்லுங்கள். நீங்கள் யாரையேனும் அழைத்துச் சென்றால், மூன்றாவது ஒரு நபரைப் பற்றி பேசிக் கொண்டே செல்ல நேரிடும். இறைவனை நினைத்து ஜபம் செய்ய நேரமிருக்காது''.

குருதேவர் ஒரு குறிப்பு எழுதி வைத்துவிட்டுச் சென்றிருந்தார். அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

''எனது மூத்த சீடராகிய ஸ்ரீ சுவாமி பரமானந்தாவை தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் தலைவராக நியமிக்கிறேன்.. அவர் என்னுடன் பல

ஆண்டுகள் நெருங்கிப் பழகியிருக்கிறபடியால் இந்த நியமனத்தைச் செய்கிறேன். எனது உடல்நிலை பாதிக்கப்பட்டிருக்கிறபடியால் நான் உடனடியாக ஒய்வெடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது''.

இந்தக் கடிதத்தில் 1941 பிப்ரவரி 26 எனத் தேதியிடப்பட்டிருந்தது. ஆனால் குருதேவர் பிப்ரவரி 18-ந் தேதியே ஆசிரமத்திலிருந்து புறப்பட்டுவிட்டார். 1941 பிப்ரவரி 24-ந்தேதி திரும்பி வந்துவிட்டார்.

பரமானந்தர் லாகூரில் தனக்குத் தரப்பட்டுள்ள பணியை கவனிக்கப் புறப்பட்டுச் சென்றார். நாராயண சுவாமிஜி ரிஷிகேசம் திரும்பினார். குருதேவர் ஆசிரமத்திலிருந்து வெளியில் சென்றிருந்த நாட்களில் நடந்தது என்ன என்பதை அவர் எழுதியிருக்கிறார்.

''சுவாமிகள், கன்ஹலிலிருந்து ஒரு மைல் தொலைவில் உள்ள ஜகதீஸ்பூரில் ஒரு இல்லறவாசியுடன் தங்கி வந்தார். அந்தச் சீடர் குருதேவருக்கு உணவளித்தார். அவர் சுவாமிஜியை தரிசித்ததும் இவர் ஒரு மகாத்மாவாக இருக்கவேண்டும் என நம்பி பக்தியுடனும், நம்பிக்கையுடனும் தொண்டு செய்தார். பகவானின் லீலை மர்மமானது, அற்புதமானது. இறுதியில் எங்கள் மீது இரக்கம் காட்டி எங்கள் நன்மைக்காக திரும்பி வந்தார். அவர் செல்லுகிறபோது சத்யநாராயண மந்திர் போன்ற முக்கியத் தலங்களை தரிசிக்காமலேயே சென்றார். அவர் சாலையோரத்தில் உறங்கினார். கையே தலையணையாகவும் வானமே கூரையாகவும் கொண்டு உறங்கினார். தன்னை எவரும் கண்டு பிடித்துவிடக் கூடாது என்பதற்காக இவ்வாறு உறங்கினார்.

குருதேவர் ஆசிரமத்திலிருந்து புறப்பட்ட அன்று அஞ்சலகத்துக்குச் சென்று இரண்டு ரூபாய் கேட்டிருக்கிறார். அவரிடம் ஒரு வேஷ்டியும் ஒரு துண்டும் மட்டுமே இருந்தது. 'சுவாமிஜி அந்த இரண்டு ரூபாயை வைத்துக்கொண்டு சிறிது நேரம் குழந்தைபோல விளையாடினார். அக்காலத்தில் குருதேவர் மாலையில் தனது குடிலில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும்போது எவரும் தொந்தரவு செய்யமாட்டார்கள். இந்த நேரத்தில் அவர் ஆசிரமத்திலிருந்து ஒதுங்கிச் சென்றுவிடுவார். ஒரு நாள் இப்படிச் சென்ற குருதேவரை ரிஷிகேசம் டோல்கேட் அருகில் ஸ்ரீ சுவாமி அபயானந்தரும் மற்றும் சில மகாத்மாக்களும் கண்டனர். வாழ்த்தினர். ஆனால் குருதேவர் அவர்களிடம் எதுவும் பேசவில்லை — ஒரு வேளை அவர் மௌனம் அனுஷ்டித்திருக்கலாம்.

குருதேவரின் நடவடிக்கைகளை கவனித்துக் கொண்டிருந்தவர்களிடமிருந்து தகவலறிந்த பரமானந்தர் பின்வருமாறு கூறுகிறார்; ''அவர் ஹரித்வாரை கடந்து சென்றார். இரவு ஹரி-கி-பௌரி மேடையில் உறங்கினார். அதன் பிறகு கால்வாய் பக்கம் ஜவலாபூர் வழியாக நடந்து சென்றார். கன்ஹல் அருகில் ஜக்திஸ்பூர் என்ற கிராமத்தில் அவர் ஒரு மரத்தடியில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். இந்த மகாத்மா கிராம மக்களின் கவனத்தைக் கவர்ந்தார். அவர்களில் ஒருவர் இவருக்குத் தொண்டு செய்தார்.

அந்த சேட்டுடன் குருதேவர் பிப்ரவரி 24-ந் தேதி இரவு 10 மணிக்கு ஆசிரமம் வந்து சேர்ந்தார். அந்த சேட் அன்றுமுதல் தொடர்ந்து ஆசிரமத்துக்கு வரத் துவங்கினார். வரும்போதெல்லாம் குருதேவருக்கு சமர்ப்பிக்க, இரு டின்களில் கரும்புச் சாறு கொண்டு வருவார்.

ஆனந்த குடிலின் சீடர்கள் தங்கள் குருநாதரைத் தேடத் தொடங்கினர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு திசையில் சென்றனர். எவரெவருக்குக் குறிப்பிட்ட கடமைகள் இருந்தனவோ அவரவர்கள் தத்தம் கடமைகளைச் செய்தனர்.

இவ்வாறு சீடர்களுக்கு 'அக்னி' பரீட்சை நடந்தது. குருதேவர் தம்மீது வைத்திருந்த நம்பிக்கைக்குப் பாத்திரர்களாக அவர்களும் நடந்து கொண்டனர். அவர்கள் குருதேவரிடத்தில் இணையிலா பக்தி கொண்டிருந்தனர். குருதேவர் இல்லாதபோதும் அவர்கள் முழு உணர்வுடன் செயல்பட்டனர். இதைத்தான் குருதேவர் விரும்பினார்.

1942-ல் குருதேவர், சீடர்களுக்கு மற்றொரு சோதனை வைத்தார். தனது சீடர்கள் எந்தச் சூழ்நிலையிலும் பணியாற்றுகிறார்களா என்று சோதித்தறிய விரும்பினார். அதன்படி 1942-ல் பரமானந்தரை ஆசிரமத்தை விட்டுப் புறப்படச் சொன்னார். 1942 அக்டோபர் 3-ந் தேதி பரமானந்தர் புறப்பட்டார். அப்போது குருதேவர் அவருக்கு ஒரு அறிமுகக் கடிதம் கொடுத்தார். அதில் பின்வருமாறு எழுதியிருந்தார்: ''ஸ்ரீ சுவாமி பரமானந்தர் எனது சிஷ்யர். அவர் என்னுடன் பத்தாண்டுகாலம் வாழ்ந்து வந்திருக்கிறார்...... இந்த ஆண்டுகளில் அவர் அளவுக்கு அதிகமாக வேலை செய்திருக்கிறார். ஆகவே, அவர் ஓய்வெடுத்துக் கொள்ளுகிறார்''.

தெய்வீக வாழ்க்கைப் பணியை விரிவாகப் பரப்ப இது வாய்ப்பளித்தது. ஊழியர்கள் எந்த விதமான சூழ்நிலையிலும் பணியாற்ற பயிற்றுவிக்கப் பட்டனர். சீடர்களும் தமது இணையற்ற பக்தியை நிரூபித்துக் காட்டிவிட்டனர்.

உதாரணமாக பரமானந்தர் சென்றவிட மெல்லாம் குருதேவரின் உபதேசங்களைப் பரப்பினார். குருதேவரின் புத்தகங்களை உருது முதலிய மொழிகளில் மொழிபெயர்த்து வெளியிட ஏற்பாடு செய்தார். பிற்காலத்தில் சென்னையில் தெய்வீக வாழ்க்கைக் கேந்திரம் அமைக்கப்பட வழிவகை செய்தார். இந்த உதாரணத்தை பல சீடர்கள் பின்பற்றினர். அவர்கள் குருதேவரிடம் தீக்ஷை பெற்றுக்கொண்டு பல பகுதிகளுக்குச் சென்று ஆசிரமங்களையும், ஸ்தாபனங்களையும் நிறுவி குருதேவரின் கருத்துக்களைப் பரப்பினர்.

இவை அனைத்தும் இரண்டாவது துறவறத்தின் விளைவு.

## தீவிர ஆன்மீக எழுச்சி

குருதேவரின் லட்சியம், மனிதகுலம் ஆன்மீக ரீதியாக எழுச்சி பெறச் செய்வது. ஆசிரமம், ஆசிரமவாசிகள், தெய்வீக வாழ்க்கைச் சங்கம் அனைத்தும் இதற்கான கருவிகள்.

குருதேவரின் சீடர்கள் தாம் மட்டும் ஆன்மீக ரீதியாக முன்னேற வேண்டும் என எண்ணாமல், மனித குலம் முழுவதும் ஆன்மீக எழுச்சி பெறப் பாடுபட வேண்டும் என்பதனை அவர்களுக்கு உணர்த்த குருதேவர் தவறவில்லை. இவ்வாறு அவர் அனைவரிடத்திலும் இருந்த நற்குணங்களையும், திறமைகளையும் வெளிக் கொணர்ந்தார்.

## கடிதத் தொடர்பு

குருதேவர் தனது எழுத்துக்கள் மூலம் மக்களைச் சிறப்பாகத் தொடர்பு கொள்ள முடியும் என்று கருதினார். அவர் புத்தகங்களை எழுதினார். பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதினார்.

இவற்றுக்கும் மேலாக, சாதகர்களுக்கு தன் கையால் கடிதங்கள் எழுதினார். இதன் மூலம் அவர்களுடன் நெருக்கமான தொடர்பு ஏற்பட்டது. குருதேவரின் லட்சியப் பணியில் கடிதப்போக்குவரத்துப் பிரிவு தனிச் சிறப்பானது. வேறு எந்தத் துறவி அல்லது யோகியும் இந்த அளவுக்கு கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டதில்லை.

## சாதனை வாரம்

குருதேவர் கையாண்ட மற்றொரு முறை 'சாதனை வாரங்கள்'. கிறிஸ்துமஸ் விடுமுறை நாட்களில்* குருதேவர் ஆசிரமத்தில் தீவிர ஆன்மீகப் பயிற்சி வகுப்புக்களை நடத்தினார். இதில் கலந்துகொள்ள நாடு முழுவதிலுமிருந்து சாதகர்கள் வந்தனர்.

ஜபம், தியானம், லிகித ஜபம், யோகாசனம், மௌனம், தன்னலமற்ற தொண்டு ஆகியவற்றில் சாதகர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. அவர்கள் ஆன்மீக சம்பந்தமாக விஷய ஞானம் பெற குருதேவரும், மற்ற மகாத்மாக்களும், மூத்த சாதகர்களும் சொற்பொழிவாற்றுவர். சாதகர்கள் நிறைய விஷயங்களைத் தெரிந்து கொண்டு ஆனந்தமாக ஊருக்குத் திரும்புவர்.

## 29. சகோதர ஸ்தாபனங்கள்

தெய்வீக வாழ்க்கைச் சங்கம் மனித குலத்துக்கு முழுமையாகத் தொண்டு செய்ய முடியும் என்றாலும் சில குறிப்பிட்ட நோக்கங்களுடன் சில சகோதர ஸ்தாபனங்களைத் தோற்றுவித்தார்.

* இது பிறகு ராமநவமி மற்றும் துர்கா பூஜை விடுமுறை நாட்களில் நடத்தப்பட்டது.

## அகில உலக சமயங்களின் இணையம்

## (All World Religious' Federation)

முதலாவதாக அகில உலக சமயங்களின் இணையம், இது 1945 டிசம்பர் 28-ந் தேதி நிறுவப்பட்டது. இந்தக் காலத்திலும் மதக் கலவரம் வரும் என்பதை எவரும் உணரவில்லை. குருதேவர் தனது நெடுநோக்கால் இதனை அறிந்து உணர்ந்து, எதிர்காலத்தில் வரும் ஆபத்திலிருந்து நாட்டையும் மக்களையும், சமயத்தையும் காக்க இந்த ஸ்தாபனத்தை நிறுவினார்.

## அகில உலகத் துறவிகள் இணையம்

## (The All World Sadhus' Federation)

இதற்குச் சமமான முக்கியத்துவம் வாய்ந்த அமைப்பு அகில உலகத் துறவிகள் இணையம். இதன் மூலம் பயன்படுத்தப்படாமல் கிடக்கும் எல்லையிலா சக்தியை மனித குல மேம்பாட்டுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என குருதேவர் யோசனை கூறினார். இந்திய தேசியத் தலைவர்கள் அனைவரும் இதனை ஒப்புக் கொண்டனர்.

குருதேவர் ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் தொண்டு செய்வதை பெரிதும் விரும்பினார். பொது மக்களிடத்தில் ஆன்மீக விழிப்புணர்வை ஏற்படுத்தவும் அவர்களை தெய்வீக வாழ்க்கைப் பாதையில் செல்லுமாறு ஊக்குவிக்கவும் துறவிகள் சம்பந்தமான துறையில் பணியாற்றுவது முக்கியம் எனக் கருதினார்.

துறவிகள் பிறருக்கு முன்மாதிரியாக இருக்க தொண்டு செய்யலாம். ஆனால் மனிதர்களிடத்தில்

ஆன்மீக விழிப்புணர்வைத் தோற்றுவிக்க வேண்டும். தொண்டும் அந்த எண்ணத்துடனேயே செய்யப்பட வேண்டும்.

இந்த நோக்குடன் 1947 பிப்ரவரி 19-ந் தேதி துறவிகள் இணையம் துவக்கப்பட்டது.

## யோக வேதாந்த வனப் பல்கலைக் கழகம்

## (The Yoga Vedantha Forest University)

1948 அக்டோபர் 'தி டிவைன் லைஃப்' பத்திரிகையில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது!

''இந்த ஆண்டு ஜூலை முதல் தேதியிலிருந்து யோக வேதாந்த வனப் பல்கலைக்கழகம் முறையாகத் தொடங்கப்பட்டு செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. இப்போது ஆசிரமத்தில் வசிக்கும் சாதகர்கள் நான்கு முக்கிய யோகங்கள் சம்பந்தமான வகுப்புக்களை நடத்துகின்றனர். சமஸ்கிருதம், ஹிந்தி ஆகியவற்றிலும் வகுப்பு நடத்தப்படுகிறது. பல்கலைக் கழகம் தேவைக்குத்தக விரிவுபடுத்தப்படும். பார்வையாளர்களும் வகுப்புக்களில் கலந்து கொள்ளலாம்.

இதுமட்டுமின்றி ஆசிரமத்துக்கு வருகை தரும் நிபுணர்களும் இங்கு வகுப்பு நடத்துமாறு கேட்டுக் கொள்ளப்படுவர். அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் வருமாறு. பேராசிரியர் பர்ட், அமெரிக்கா, டாக்டர் கிரஹாம் ஹோரா, லண்டன், டாக்டர் மரிஸே சாஸி, பாரிஸ், டாக்டர் காமேஸ்வர சர்மா புதுக்கோட்டை, திரு. ஆர். ஏ. சாஸ்திரி ஸ்ரீ கீதானந்தா பிரம்மச்சாரி, மற்றும் திரு சச்சிதானந்தம் பிள்ளை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம். (யோக

வேதாந்த வனப் பல்கலைக் கழகம்' என்ற பெயர் 1958-ல் தெய்வீக வாழ்க்கை அறக்கட்டளையால் யோக வேதாந்த வன அகாடமி என பெயர் மாற்றம் செய்யப்பட்டது)

## யோக அருங்காட்சியகம்

யோக அருங்காட்சியகம் (Yoga Museum) குருதேவர் உருவாக்கிய தனிச்சிறப்பான அம்சம் ஞானம், ராஜ யோகம், பக்தி யோகம், கர்ம யோகம் பற்றிய விஷயங்கள் படங்களுடன் இங்கு சித்தரிக்கப்பட்டுள்ளன. கிழக்கு நாடுகளின் தத்துவங்கள் அறியாத மேல்நாட்டு சாதகர்களுக்கு இந்த அருங்காட்சியகம் ஒரு வரப்பிரசாதம் ஆகும்.

## திரைப் படங்கள்

யோகாசனம், பிராணாயாமம், கிரியைகள், இவற்றை படிப்படியாக எப்படிச் செய்வது என்பதை உலகின் தலைசிறந்த யோகிகளில் ஒருவரான குருதேவர் செய்துகாட்டுவது திரைப் படமாக எடுக்கப்பட்டிருக்கிறது. யோகம், வேதாந்தம் பற்றிய எண்ணற்ற பாடங்களையும் இந்தப் படங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

# 30. ஞான வேள்வி

குருதேவர் தன் கையில் கிடைத்த ஐந்து ரூபாயைக்கூட 'பிரம்மவித்யா' துண்டுப் பிரசுரம் வெளியிடப் பயன்படுத்தினார் என்பதை நாம் ஏற்கனவே அறிந்து கொண்டோம்.

'மை மாகஸின் ஆஃப் இண்டியா' (My Magazine of India) என்ற பத்திரிகையின் வேண்டு

கோளுக்கு இணங்கி குருதேவர் நிறையக் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதினார்.

தெய்வீக வாழ்க்கைச் சங்கம் நடைமுறைக்கு உதவும் ஆன்மீக விஷயங்களை அச்சிட்டு வெளியிட்டது.

குருதேவர் சுற்றுப்பயணம் செல்லும்போதும் சங்கீர்த்தன மாநாட்டில் தலைமை ஏற்று நடத்தும் போதும் பல பக்தர்களின் தொடர்பு இயல்பாக ஏற்பட்டது. அவர்கள் துண்டுப் பிரசுரங்கள் அச்சிட பண உதவி செய்தனர். குருதேவரும் பிரசுரங்களை அச்சிட்டு மாநாடுகளில் இலவசமாக வினியோகம் செய்தார். குருதேவருடைய கட்டுரைகள் 'மை மாகஸின்' பத்திரிகையில் மீண்டும் வந்தன. திரு. பி. கே. விநாயகம் குருதேவரின் புத்தகங்களைத் தானே வெளியிட முன் வந்தார்.

1929 ல் சென்னையிலுள்ள கணேஷ் & கோ. என்ற ஸ்தாபனம் குருதேவர் எழுதிய முதல் புத்தகமாகிய யோகப்பயிற்சி — பாகம் ஒன்று என்பதை வெளியிட்டது.

இதற்கிடையில் சுவாமி பரமானந்தர் ஸ்வர்காஸ்ரமத்திற்கு வந்து குருதேவருடன் இருந்தார்.

அவர் சென்னைக்கு அனுப்பப்பட்டார். ஸ்ரீ சுவாமி சிவானந்தா, பரமானந்தர், ஸ்ரீ விநாயகம் ஆகிய மூவரும் இணைந்து ஞானயக்ஞ வேள்வியில் ஈடுபட்டனர்,

விநாயகம், குருதேவரின் ஏராளமான நூல்களை "இமயமலை யோகப் பாடத்தொடர்" (Himalayan Yoga Series) என்ற பெயரில் வெளியிட்டார்.

குருதேவரின் நூல்களை வெளியிட மற்றொரு பெரிய பதிப்பாளர் வந்தார். அமிருதசரஸைச் சார்ந்த திரு. எம். அயரி என்பவர் அவர். ஆசிரம வாசியான சுவாமி யோகானந்தா இதற்காகப் பயிற்சியளிக்கப்பட்டார். அவர்கள் 'ஆத்மானுபவத் தொடர்'' (The Self-realisation Series) என்ற பெயரில் பல நூல்களை வெளியிட்டனர்.

இவ்வாறு குருதேவரின் நூல்கள் அங்குமிங்குமாக வெளியிடப்பட்டு வந்தன. தெய்வீக வாழ்க்கை அறக்கட்டளையின் அறங்காவலர்கள் இந்த நூல்கள் ஒரே ஸ்தாபனத்தின் மூலம் வெளியிடப்பட வேண்டும் என்று கருதினர். அந்த ஸ்தாபனம் சொஸைட்டியின் அங்கமாகச் செயல்பட வேண்டும் என்றும் தீர்மானித்தனர். குருதேவரின் எழுத்துக்களைப் பாதுகாத்து உலகுக்கு அளிக்க ''சிவானந்தா நூல் வெளியீட்டுக் கழகம்'' (The Sivananda Publication League) என்ற பெயரில் ஒரு அமைப்பை உருவாக்க வேண்டும் என பரமானந்தர் விரும்பினார்.

மேஜர் ஜெனரல் ஏ. என். சர்மாஜியும் இந்தக் கருத்தை வரவேற்று தன்னால் இயன்ற தொகையினை செக் மூலம் அனுப்பிவைத்து ''சுவாமி எழுதியவை அனைத்தையும் என்றென்றைக்கும் பயன்படுமாறு பாதுகாத்து வைக்க வேண்டும்'' என்று அவர் விரும்பினார்.

சிவானந்தர் நூல் வெளியீட்டுக் கழகம் 1939 ஜனவரி 29ல் உருவாயிற்று.

புத்தகம் வெளியிடுவதற்கு நிறையப் பணம் தேவைப்பட்டது. ஆயினும் பணத்துக்காக வேலை தடைப்படக் கூடாது என்பதில் குருதேவர் ஆர்வமாக இருந்தார்.

1948-ல் கல்கத்தா ஜெனரல் பிரிண்டிங் ஒர்க்ஸ் உரிமையாளர் திரு காசிராம் குப்தா குருதேவரின் 18 புத்தகங்களை வெளியிடத் தேவைப்படும் அச்சுக் கூலியை தனது நன்கொடையாகத் தரச் சம்மதித்தார். குருதேவர் உடனே நாராயணானந்தரை கல்கத்தாவுக்கு அனுப்பினார்.

வாராவாரம் ரிஷிகேசம் ரயில்வே ஸ்டேஷனுக்கு ஏராளமான புத்தகக் கட்டுகள், வெளியூருக்கு அனுப்பப்படுவதற்காக வந்தன. குருதேவரும் தன்னைக் காண வருகிறவர்களுக்கெல்லாம் கை நிறைய புத்தகங்களை அள்ளிக் கொடுத்தார். உலகம் முழுவதும் உள்ள சாதகர்களுக்கும் அவற்றை அனுப்பி வைத்தார்.

குருதேவர் இவ்வாறு புத்தகங்களை விநியோகிப்பதைக் கேட்ட திரு காசிராம், "குருதேவர் கொடுக்கட்டும், அவரது அலமாரியில் புதியபுதிய நூல்களை அடுக்கி வைக்க வேண்டியது நமது கடமை ஆகும்" என்று கூறினார்.

## மகத்தான உணர்வு

ஆசிரமத்தில் பணப் பிரச்னை வரும் போது குருதேவர் பின்வருமாறு கூறுவார்: "நாம் உணவு உட்கொள்ள தருமச்சாலைக்கு (Kshetras) வேண்டுமானாலும் செல்லலாம். ஆனாலும் ஞான வேள்வி நடை பெற்றுக் கொண்டே இருக்க வேண்டும்.

1949-ல் அப்படிப்பட்ட சூழ்நிலை தோன்றியது. ஆனால் திடீரென்று பணத் தேவை பூர்த்தியாகி விட்டதால் தருமச்சாலைக்கு செல்லும் அவசியம் ஏற்படவில்லை.

குருதேவர் மேலும் சொல்லுவார்! ''புத்தகங்களை அனுப்ப பணம் இல்லை என்றால் நமது புத்தக அலமாரிகளையெல்லாம் திறந்துவைப்போம். ஆசிரமத்துக்கு வருகை தருகிறவர்களும், யாத்திரீகர்களும் தேவைப்படுகிற அளவு எடுத்துக் கொள்ளட்டும்''.

எந்த நிலையிலும் ஞான வேள்வி தொடர்ந்து நடக்க வேண்டும்.

## யோக — வேதாந்த வனப் பல்கலைக் கழக அச்சகம்

ஸ்ரீ சுவாமி தயானந்தர், ஸ்ரீ சுவாமி நித்யானந்தர், ஸ்ரீ சுவாமி சத்யானந்தர், ஸ்ரீ சிவப்ரேம்ஜி ஆகியோர் ஆசிரமத்துக்கு சொந்தமாக ஒரு அச்சகம் வேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர். குருதேவரின் ஒப்புதலைப் பெற்றனர். மிஸ்ரா அச்சகம் விலைக்கு வாங்கப்பட்டது. 1951 செப்டம்பர் 20-ந் தேதி அச்சு இயந்திரங்கள் ஆசிரமத்துக்குக் கொண்டு வரப்பட்டன. இடையறாத ஞான வேள்விக்கு இது வழி வகுத்தது.

பிறகு, சராசரியாக மாதத்துக்கு மூன்று புத்தகங்கள் வெளியிடப்பட்டன. ஒவ்வொன்றிலும் 200 பக்கங்கள் இருக்கும். இவை தவிர பல பத்திரிகைகளும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வந்தன. புத்தகங்கள் ஆங்கிலம், ஹிந்தி, தமிழ் ஆகிய மூன்று மொழிகளில் அச்சிடப்பட்டன. மூன்றுக்கும் தனித்தனி துறைகள் இருந்தன.

அச்சகத்தை நிர்வாகம் செய்தவர்களில் குறிப்பிடத்தக்கவர் மூவர்:

ஸ்ரீ சுவாமி ஓங்காரானந்தா, ஸ்ரீ சுவாமி சத்யானந்தா ஆகிய இருவரும் சில ஆண்டுகள் நிர்வாகிகளாக இருந்தனர். இவர்கள் காலத்தில் தான் குறைந்த வசதியுடன் நிறைய வேலைகள் செய்யப்பட்டன.

திரு. நரசிம்மலு அச்சகத்துக்கு ஆதாரம். அமைதியாக ஆனால் தீவிரமாகப் பணியாற்றக் கூடிய தளராத, தன்னலமற்ற தொண்டர். அவர் எவ்வளவோ வேலைகளைப் பொறுப்பெடுத்துக் கொண்டு செய்தார். ஆனால் பெயர், புகழ் விரும்பு வதில்லை. இது இறைவன் பணி எனக் கருதிச் செய்தார்.

உலக மக்கள் மென்மேலும் யோகம், வேதாந்தம் பற்றிய ஞானம் பெற்று வருகிறார்கள். அவர்கள் யோகப் பயிற்சி பெறுகிறார்கள். ஆரோக்கியம், மனஅமைதி, ஆன்மீக முன்னேற்றம் ஆகியவற்றைப் பெறுகின்றனர். குருதேவரின் உபதேசங்களால் இவை அவர்களுக்குக் கிடைத்தன. குருதேவர் எதையும் கொடுப்பதற்கு விரும்புகிறார். தன்னிடம் உள்ள ஞானச் செல்வத்தையும் அனைவருடனும் பகிர்ந்துகொள்ள விரும்புகிறார். இதுதான் அவரது லட்சியம்.

## 31. பத்திரிகைகள்

குருதேவர் டாக்டராக இருந்தபோதே மருத்துவ இதழ் ஒன்றை நடத்தினார்.

தெய்வீக வாழ்க்கைச் சங்கத்துக்குச் சொந்த மாக ஒரு பத்திரிகை தேவை என அவர் விரும்பிய தால் 1938 செப்டம்பர் முதல் 'தி டிவைன் லைஃப்' பத்திரிகை வெளிவரத் தொடங்கியது.

தெய்வீக வாழ்க்கைச் சங்கம் பதிவு செய்யப் பட்டு இரண்டு ஆண்டுகளுக்கும் குறைவான கால அளவில் இந்த பத்திரிகை வெளியிடப்பட்டது.

சங்கமும், அதன் கிளைகளும், தனிப்பட்ட பக்தர்களும் அச்சிடும் இலவச பிரசுரங்களும் உறுப் பினர்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டன. இது 1949-ல் 'தெய்வீக வாழ்க்கைச் சங்க உறுப்பினர்

இணைப்பாக' (The Divine Life Membership Supplement)* வெளியிடப்பட்டது.

1949 ஜனவரி 15-ந் தேதிமுதல் வெளி வந்தது.

1949 செப்டம்பர் 8-ல் குருதேவர் 'டிவைன் லைஃப் பாரஸ்ட் யுனிவர்சிடி வீக்லி' (Divine life Forest University Weekly) என்ற வார இதழை வெளியிட்டார்.** சில மாதங்கள் இது தட்டச்சு இயந்திரத்தில் பிரதிகள் எடுத்து அனுப்பப்பட்டது. பிறகு முசோரியிலுள்ள அச்சக உரிமையாளரிடம் இதனை அச்சிடும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. பிறகு அந்த அச்சகம் டேராடூனுக்கு மாறியது. பிறகு ரிஷிகேசத்தில் விக்ஞான் பிரஸ் ஆரம்பிக்கப் பட்ட பிறகு அங்கு மாறியது. பிறகு யோக வேதாந்த ஃபாரஸ்ட் அகாடமி நிறுவப்பட்டதும் பணி அங்கேயே நடைபெற்றது.

1951 செப்டம்பர் 8-ல் குருதேவர் தனது பிறந்த நாளன்று 'ஹெல்த் அண்டு லாங் லைஃப்' என்ற பத்திரிகையை வெளியிட்டார். மக்கள் உடல் நலம் பேண இந்த பத்திரிகையை குருதேவர் துவக்கினார்.

ஆரம்பத்தில் 'தி டிவைன் லைஃப்' பத்திரிகையில் ஹிந்தி மொழியிலும் விஷயங்கள் வெளியாகின. பிறகு பத்திரிகைப் பற்றாக்குறை காரணமாக ஹிந்தி விஷயங்கள் பத்திரிகையில் இடம் பெற வில்லை. குருதேவர் ஹிந்தியில் தனியாக ஒரு பத்திரிகை வெளியிட வேண்டியது அவசியம் என்றார். ஆகவே 1951 ஜூலையில் 'தி யோக வேதாந்தா' என்னும் ஹிந்தி மாத இதழ் துவக்கப்பட்டது.

---

* இதற்கு 1950-ல் விஸ்டம் லைட் (Wisdom Light) என்று பெயர் வைக்கப்பட்டது.

1951 செப்டம்பர் 8ல் உடல் நலம் பேண 'ஆரோக்ய ஜீவன்' என்ற பத்திரிகை வெளியிடப் பட்டது. பிறகு இது 'யோக வேதாந்தா' பத்திரிகை யுடன் இணைத்து வெளியிடப்பட்டது.

குடும்பம் முழுவதற்கு பயன்படும்படியாக குருதேவர் 'ஆரோக்கிய வழி காட்டி' ஒன்றும் வெளியிட்டார்.

தெய்வீக வாழ்க்கைச் சங்கக் கிளைகளின் நடவடிக்கைகளை பிரபலப்படுத்த 'பிராஞ்சு கெஜட்' என்ற பத்திரிகை 1952 ஜனவரி 15ல் வெளியிடப் பட்டது.

இந்த பத்திரிகைகள் அனைத்தும் தலைமை நிலையத்திலிருந்து வெளியிடப்படுபவை. பல கிளைகளும் தமக்கெனத் தனிப் பத்திரிகைகளை வெளியிட்டு வருகின்றன.

குருதேவரின் தெய்வீக வாழ்க்கைச் செய்தி உலகம் முழுவதும் பரவிவிட்டது. இவையனைத்தும் குருதேவரது இரண்டாவது துறவறத்தின் விளைவு ஆகும். தனித்திருக்கும் வாழ்க்கை, தியானம் ஸ்வர்காஸ்ரமத்தில் தொல்லையற்றிருந்த வாழ்க்கை அனைத்தையும் துறந்து விட்டு, குருதேவர் இந்தச் சாதனைகளை நிகழ்த்தியிருக்கிறார்.

---

** இது பிறகு "யோக வேதாந்த பாரஸ்ட் யுனிவர்சிடி வீக்லி" என்று 1950 ஆகஸ்டு 3-ந் தேதியிலிருந்து பெயர் மாற்றம் செய்யப்பட்டது. 1958 செப்டம்பர்முதல் 'யுனிவர்சிடி' என்ற சொல்லுக்கு பதிலாக 'அகாடமி' என்ற சொல் பயன்படுத்தப்பட்டது.

## குருதேவரின் தூல உடல் வாழ்க்கையின் இறுதி நாட்கள்

குருதேவர் தாம் தம் தூல உடலைத் துறக்கும் காலத்தை முன்னதாகவே தீர்மானித்திருந்தார். சித்தியடைவதற்குச் சில நாட்களுக்கு முன் "ஒரு விமானம் வரப்போகிறது, அதில் என்னோடு வருபவர்கள் யார் யார்" என்று வேடிக்கையாக வினவினார். பலர் அதன் உண்மைக் கருத்தை உய்த்துணரவில்லை. சிலர் தாங்கள் வருவதாக முன் வந்தனர். பக்குவமற்ற சிலரை அவர் மறுத்து விட்டார்.

பிறகு அவர் அடிக்கடி நீண்ட நேரம் நிர்விகல்ப சமாதியில் ஆழ்ந்தார். சகஜ சமாதியில் சாதாரணமாக அவரைக் கண்டு பழகிய சிஷ்யர்கள் சிலர் திடுக்குற்றனர். மருத்துவ உதவி கோரப்பட்டது.

இறுதியில் 1963 ஜுலை 14-இல் மகான் பூத உடலை நீத்தார். அவருடைய ஆவி ஆசிரமத்துக்கு மேல் ஜோதியாகக் கிளம்பியதைப் பலர் பார்த்தார்கள். திருக்கோவிலூரில் ஸ்ரீ சுவாமி ஞானானந்தர் அதைக் கண்ணுற்றதாகக் கூறுகிறார். இதுபோல்தான் மகாரிஷி ரமணர், திருவண்ணாமலையில் சித்தி அடைந்தபோது அவர் ஆவி, நட்சத்திரம் போல் உயரச் சென்றதைப் பலர் பார்த்துள்ளனர்.

பிறகு சுவாமிகளின் பூதவுடல் நீராட்டி ஆராதிக்கப்பட்டு முறைப்படி ஏற்கனவே சுவாமிகளின் சிலை வைத்துப் பூசிக்கப்பட்டிருந்த ஆலயத்தில் பூமிக்கடியில் எழுந்தருளச் செய்யப்பட்டது.

அவருடைய புனித சமாதிக்கும், உருவச் சிலைக்கும் சிஷ்யர்கள் நாள்தோறும் வழிபாடு செய்து வருகிறார்கள்.

தவத்திரு சுவாமி சிவானந்தர், பூதவுடலில் இல்லாவிட்டாலும் அவருடைய சிஷ்யர்களுக்கு இன்னும் தோன்றாத் துணையாய் இருந்து வருகிறார். அவர் நடத்தி வந்த உலகத்துக்கான பணிகள் அவருடைய நெருங்கிய சிஷ்யர்களாகிய சுவாமி சிதானந்தர் (தற்போது தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் தலைவர்) சுவாமி கிருஷ்ணானந்தர், சுவாமி மாதவானந்தர் முதலியோரால் தொடர்ந்து நடத்தப்பட்டு வருகின்றன. தவத்திற் சிறந்த பெரியோர்கள் பூத உடலில் இல்லாவிட்டாலும் அன்னார் தம்மை அண்டியோரைக் கைவிடுவதில்லை. தங்கள் பணிகள் குறைந்துபோக விடுவதில்லை.



